# திருத்தலப் பெருமை

பாகம்—மூன்று



பரணீதரன்



**கலைஞன் பதிப்பகம்**
10 கண்ணதாசன் சாலை
தியாகராய நகர்
சென்னை 600 017

Price : Rs. 30-00

Thiruthala perumai (Part - 3)

by

Bharanidharan (C)

First Edition : December 1991

Published by

KALAIGNAAN PATHIPAGAM
10 Kannadhasan Salai,
T.Nagar, Madras 600,017.

Printed at

Alaigal Achagam

36, South Sivankoil Srteet,
Kodambakkam, Madras-600 024.

# இந்நூலைப்பற்றி...

இந்நூல் ''திருத்தலப்பெருமை'' வரிசையில் மூன்றாம் பாகமாக வெளி வருகிறது.

தஞ்சாவூர் மாவட்டத்தில், திருக்கட்டுப்பள்ளியிலிருந்து மேற்கே கோவிலடி வரையிலும், கிழக்கே திருவையாறு வரையிலும், அதைச் சுற்றியுள்ள பகுதிகளிலும் அடங்கிய சுமார் நாற்பது திருத்தலங்கள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. கொள்ளிடக்கரையை யொட்டியுள்ள சில பழைய, அபூர்வ ஆலயங்களைப் பற்றிய பல்வேறு விவரங்களை அறிந்து கொள்ளலாம். வெளியுலகுக்கு அதிகம் தெரியாத சிற்றூர்கள், கிராமங்களைச் சுற்றி வந்து ஆலய தரிசனம் செய்யலாம்.

வரகூர் ஸ்ரீ வேங்கடேசப் பெருமாளைத் தரிசித்து, ஸ்ரீ நாராயணத் தீர்த்தரைப் பற்றி ஓரளவுத் தெரிந்து கொண்டு, அவ்வூர் உறியடி உற்சவத்தை நேரில் கண்டு மகிழ்ந்து புண்ணியம் பெறலாம். ரங்கநாதபுரத்திலுள்ள, நவநீத கிருஷ்ணன் உங்கள் உள்ளங்களை நிச்சயம் கொள்ளை கொள்ளுவார்.

திருவையாறு சென்று, தலபுராணச் செய்திகளைக் கேட்டு இன்புறுவதோடு, சப்தஸ்தானப் பல்லக்கு விழாவில் கலந்து கொண்டு, திருப்பழனம், திருச்சோற்றுத்துறை, திருவேதிக்குடி, திருக்கண்டியூர், திருப்பூந்துருத்தி, திருநெய்த்தானம் (தில்லை ஸ்தானம்) தலங்களை ஆசை தீரத் தரிசிக்கலாம்? நந்தியம்பெருமாள் திருக்கல்யாணம் நடைபெற்ற திருமழப்பாடி மண்ணை மிதித்து நற்பேறு அடையலாம். சிறுவாச்சூர் மதுரகாளி அம்மனின் பேரருளையும் பெறலாம்.

பரணீதரன்

# இந்நூலில் இடம் பெற்றுள்ள தலங்கள்

# திருக்காட்டுப்பள்ளி

தஞ்சாவூரிலிருந்து இருபது கிலோ மீட்டர் வடமேற்கே சென்றால் திருக்காட்டுப்பள்ளித் திருத்தலத்தை அடைய லாம். திருச்சி — தஞ்சாவூர் ரயில் பாதையில் உள்ள பூதலூர் ரயில் நிலையத்திலிருந்து வடக்கே எட்டாவது கிலோ மீட்டரில் உள்ள ஊர் இது. தஞ்சாவூரிலிருந்து திருக் கண்டியூர் வழியாகவும், கல்லணையிலிருந்து கோயிலாடி வழியாகவும் செல்வதற்குப் பாதை வசதிகள் உண்டு. கந்தர்வக் கோட்டையிலிருந்தும் திருவையாற்றிலிருந்தும் கூட இங்கு வரலாம்.

காவிரியாற்றின் தென்கரையில் அமைந்துள்ள இத் திருத்தலத்தைக் 'கற்றவர்கள் கருதும் காட்டுப்பள்ளி' என்று திருஞானசம்பந்தப் பெருமான் புகழ்ந்துள்ளார். இதை மேலைத் திருக்காட்டுப் பள்ளி என்று குறிப்பிடுவது மரபு. சீகாழிக்குத் தென்கிழக்கில், திருவெண்காட்டிற்கு வெகு அருகில் இருக்கும் அகிலாண்டநாயகி உடனுறை ஆரண்ய சுந்தரேச்வரர் கோயில் இருக்கும் ஊர், கீழைத் திருக்காட்டுப் பள்ளியாகும்.

ஒரு சமயம் இந்திரன் முதலான தேவர்கள் மேலைத் திருக்காட்டுப்பள்ளிக்கு வந்து, அங்கு உறையும் சிவபெருமானையும் அம்பிகையையும் வழிபட்டார்கள். அப்போது அக்னி தேவன், தொட்ட பொருட்களையெல்லாம் சுட்டெரிப்பதால் ஏற்படும் பழியையும் பாவத்தையும் போக்கிக் கொள்ளும் பொருட்டு நியம நிட்டைகளோடு சிவபெருமானுக்குப் பூஜைகள் பல செய்து களிப்புற்றான்.

அது கண்டு மனம் மகிழ்ந்த சிவபெருமான் அக்னி தேவனுக்குக் காட்சியளித்து, ''அக்னி தேவா, உன் பாவம் நீங்க வேண்டுமானால், கிழக்கே ஒரு திருக்குளம் அமைத்து, உன் பெயரை அதற்கு ஈந்து, அதன் நீரை எடுத்து என்னை நீராட்டி வழிபட வேண்டும்'' என்று அருளினார். அவ்வாறே அக்னி தேவன் திருக்குளம் ஒன்று வெட்டி, அதன் நீரை எடுத்து சிவபெருமானுக்குத் திருமஞ்சனம் செய்து வைத்தான். உள்ளத்தோடு உடலும் குளிர்ந்த இறைவன், அழல் தேவனை நோக்கி, ''நீ விரும்பும் வரங்களைக் கேள்'' என்றார்.

அதற்கு அக்னி தேவன், ''இறைவா, என்னைப் போன்றே இத் தீர்த்தத்தில் நீராடி உங்களை வழிபடுவோரின் பாவங்களைத் தாங்கள் போக்கியருள வேண்டும். கோயிலுக்குச் சொந்தமான சொத்துக்களைக் கொள்ளையடிப்போர் தங்கள் குலத்தோடு நரகத்திற்குச் செல்ல வேண்டும். தங்களை நினைக்காமல், தங்களது ஆசியை நாடாமல் யார் எந்தச் செயலில் ஈடுபட்டாலும் அது நிறைவேறாமல் அரைகுறையாக நிற்க வேண்டும். இத்தலத்திற்கு வந்து தங்கி, தங்களை வழிபடுபவர்களுக்கு மோட்ச பதவி தந்தருள வேண்டும்'' என்று வேண்ட, ''அப்படியே ஆகட்டும்'' என்று இறைவனும் ஆசி வழங்கினார். அன்று முதல் இத் திருத்தலம் அக்னீசுரமென்று பெயர் பெற்றது. சுவாமி, அக்னீச்சுவரர் என்று அழைக்கப்பட்டார். தீயாடியப்பர் என்று தீந்தமிழ்ப் பெயரை அவர் பெற்றார்.

சௌந்தர்ய நாயகியான அம்பிகை, அழகுத் தமிழில் அழகமர் நாயகியானாள்.

உறையூர் நந்தவனத்தில் பூத்த செவ்வந்தி மலர்களை அரசன் தன் மனைவியாருக்குக் கொடுத்து வருவதைப் பழக்கமாகக் கொண்டிருந்தான். அவர்களில் மூத்த மனைவி மட்டும் தனக்குக் கிடைத்த மலரை அரண்மனையிலிருந்த சிவபெருமானுக்கு அணிவித்து மகிழ்ந்து வந்தாள்.

ஒரு சமயம், உறையூரில் மண்மாரிப் பொழிய, அதனின்றும் தப்பிக்க மூத்த மனைவி திருக்காட்டுப் பள்ளிக்கு ஓடி வந்து விட்டாள். இறைவன் அவளுக்காக மனமிரங்கி. கானல் வெப்பம் தணித்து அருளியதாக உறையூர் புராணம் கூறுகிறது. அனைத்தையும் ஆண்டவனுக்கு அர்ப்பணித்து உள்ளன்புடன் வழிபடுவோர் அவனது கருணைக்கு ஆளாகிறார்கள் என்பதற்கு இந் நிகழ்ச்சி மற்றுமோர் உதாரணமாக விளங்குகிறது.

இது மிகப் பழமையான கோயில். அதற்கு இங்குள்ள ஏராளமான கல்வெட்டுக்களே சான்றுகளாகும். அழகிய ராஜ கோபுரத்தைக் கடந்து சென்றதும் வடபுறம் சௌந்தர்ய நாயகியின் திருச்சந்நிதி; எதிரில் நர்த்தன விநாயகர். அடுத்து மற்றொரு சிறிய கோபுரத்தைக் கடந்து செல்கிறோம். மண்டபத்தில் நடராஜர் எழுந்தருளியிருக்கிறார், நவக்கிரகங்கள், பைரவர், சூரியனார், உள்ளனர். தேவாரப் பெரியோரான மூவர், சிலை வடிவில். அடுத்து மகாமண்டபம், அர்த்த மண்டபம், கருவறை மூன்றையும் காண்கிறோம்.

மகா மண்டபத்தைவிடக் கருவறை சுமார் ஆறடி கீழே, பள்ளத்திலிருக்கிறது. ஏறக்குறைய தொண்ணூறு ஆண்டுகளுக்கு முன் திருப்பணி செய்தவர்கள் மகா மண்டபத்தை உயர்த்திக் கட்டி அதை அரைகுறையாக விட்டு விட்டனர். பின்னர் பொறுப்பு ஏற்றுக் கொண்டவர்கள்

கருவறையை அப்படியே வைத்துத் திருப்பணிகளை முடித்துக் குடமுழுக்குச் செய்துவிட்டனர். அதனாலேயே சுவாமி தாழ்வான பகுதியில் இருக்கிறார்!

மகாமண்டபத்தை யொட்டி உட்பிராகாரம் அமைந்துள்ளது. அது கருங்கல்லால் ஆனது. கருவறை மண்டபத்தின் தென்புறம், ஆலமர் கடவுளுக்குரிய கோஷ்டத்தில் இருக்கும் தட்சிணாமூர்த்தியின் சிற்ப வடிவம் எங்கள் கவனத்தைப் பெரிதும் கவர்ந்தது. வழக்கமாக நாம் ஆலயங்களில் காணும் உருவமல்ல அது. சின்முத்திரையோடு இடக் காலின் மீது வலக் காலை மடித்து ஆல மரத்தடியில் உள்ள மேடையின் மீது குருமூர்த்தி வீற்றிருக்க. கீழே சனகாதி முனிவர்கள் ஞானம் பெற, அதுவரை எந்தக் கோயில் கோஷ்டத்திலும் நாங்கள் காணாத முக அமைப்பும் அமர்ந்திருக்கும் முறையும் முற்றிலும் புதியவை. வரகூர் ஸ்ரீ கைலாசநாதர் கோயில் அர்ச்சகர் சுந்தர குருக்களிடம் விளக்கம் கேட்டபோது, ''அவர் யோக தட்சிணாமூர்த்தி'' என்று கூறினார்,

இரண்டாவது பிராகாரத்தில் தென் கோஷ்டத்தில் வழக்கமாக நாம் தரிசிக்கும் தட்சிணாமூர்த்தியின் திருவுருவச் சிலை உள்ளது. அதற்குக் கீழ் ஒரு துவாரம் காணப்படுகிறது. அதன் வழியே பார்த்தால், உட் பிராகாரத்திலுள்ள தட்சிணாமூர்த்தி தரிசனம் ஆகிறார். பிராகாரத்தைச் சுற்றிலும் உள்ள மாடப்பத்திகளில் வலம்புரி விநாயகர், திருமால், இலக்குமி, முருகன், ஏகாம்பரர், காமாட்சி, விச்வநாதர்-விசாலாட்சி அகோர வீரபத்திரர் முதலியோரும், கோஷ்டங்களில் லிங்கோற்பவரும் துர்க்கையும் இருக்கிறார்கள். இந்தப் பிராகாரத்தில்தான் தீர்த்தக் கிணறும் உள்ளது. திருவிழாக்காலங்களில் சுவாமி இந்தப் பிராகாரத்தில்தான் வலம் வருகிறார்.

அதையடுத்து மூன்றாம் பிராகாரம். வடக்குப் பிராகாரத்தில் தென்புறம் நோக்கி அம்மன் சந்நிதியிருக்கிறது. இந்தப் பிராகாரத்தின் மதிற்சுவரையடுத்து ஊரின் நான்கு வீதிகளும் உள்ளன. இந்த நான்கு வீதிகளையும் ஒரு காலத்தில் கோட்டைச் சுவர்கள் சூழ்ந்திருந்தனவாம். உள்ளே நுழைவதற்கு மூன்று, நான்கு வாயில்கள் அமைந்திருந்தனவாம். கோட்டையின் வடக்கு வாயிலில் முனியாண்டார் கோயிலும், கிழக்கு வாயிலில் வரத விநாயகர், அனுமார் கோயில்களும் இருக்கின்றன.

அக்னிதேவர் அமைத்த அக்னிதீர்த்தக் குளம் தற்போது தூர்ந்து போய், தற்போது அந்த இடத்தில் பேருந்து நிலையம் இருக்கிறது! மறைந்த குளத்தின் நினைவாக அருகிலுள்ள விநாயகர் கோயிலையடுத்து ஒரு கிணறு இருக்கிறது.

அதன் நுழைவாயிலில் 'புனித நீரூற்று' என்றும் அதனடியில் 'அக்னி தீர்த்தம்' என்றும் எழுதப்பட்டுள்ளன.

பிள்ளையார் கோயில் அர்ச்சகரிடம் 'இந்த நீரை அபிஷேகத்திற்கு உபயோகிக்கிறீர்களா?' என்று கேட்டேன். 'இல்லை' என்று அவர் தலையசைத்தார். சிவன் கோயிலிலும் இந்தத் தீர்த்தத்தைப் பயன்படுத்துவதில்லை என்ற தகவலையும் அவர் தந்தார். புனிதம் மிக்க இந்த நீரை ஏன் பயன்படுத்துவதில்லை என்று யோசித்துக் கொண்டே, அத்தீர்த்தத்தைத் தரிசித்து விட்டு வரலாம் என்று உள்ளே நுழைந்தோம். எட்டிப் பார்த்தோம். அப்போதுதான் தெரிந்தது, அந்த நீரை ஏன்அபிஷேகத்திற்குப் பயன்படுத்துவதில்லை என்று. அது மிகவும் அசுத்தமாயிருந்தது. அதில் மரக்கட்டைத் துண்டுகளும் வாழை மட்டைகளும் மிதந்து கொண்டிருந்தன. அவை மட்டுமா? வார் அறுந்த ஒரு ரப்பர் செருப்பும் அதில் கிடந்தது! உள்ளம் கொதித்தது. நெஞ்சு வலித்தது.

சிவபெருமானுக்கு அபிஷேகம் செய்வதற்காக அக்னி தேவனால் ஏற்படுத்தப்பட்ட தீர்த்தத்தின் அடையாளமாக இருக்கும் புனித தீர்த்தத்தைப் பாதுகாக்கும் லட்சணம் இது தானா? அதைக் காப்பாற்ற முடியவில்லையென்றால், குளத்தைத் தூர்த்ததுபோல் இதையும் தூர்த்து விடலாமே. திருக்காட்டுப்பள்ளியின் பண்டையப் பெருமைகளுக்கும் தெய்விகப் பாரம்பரியத்திற்கும் ஊறு விளைவித்துக் கொண்டு இப்படியொரு சின்னம் இருக்க வேண்டியது அவசியம் தானா?

திருக்காட்டுப் பள்ளியில் நடைபெறும் விழாக்களில் பங்குனி உத்தரத் திருவிழா மிகச் சிறந்த முறையில் கொண்டாடப்படுகிறது. பங்குனி, மாதங்களில் பன்னிரண்டாவது. உத்தரம், நட்சத்திரங்களில் பன்னிரண்டாவது. இரண்டும் ஒன்று சேரும் நாளே நிறைமதி நாள். இமவானின் வேண்டுகோளுக்கிணங்கி சிவபெருமான் பங்குனி உத்தர நாளில் பார்வதியைத் திருமணம் செய்து கொண்டத் திருநாள். சிவம், சக்தியோடு இணையும் போது, உலகில் அன்பு பெருகி அறம் தழைக்கிறது; இன்பம் கூடுகிறது. மக்கள் மனம் நிறைகிறது.

இத்திருமணக் காட்சியே திருக்கயிலாயக் காட்சியாகும். திருநாவுக்கரசர் திருவையாற்றில் கண்ட கயிலைக் காட்சி இதுவேயாகும்.

பங்குனி மாதம் வளர் பிறையில் கொடியேற்றப் பெற்று பத்து நாட்கள் திருவிழா நடைபெறுகிறது. விழா முடிவில் பௌர்ணமி தினத்தன்று அம்மையப்பர் காவிரியாற்றில் அமைக்கப்பட்டுள்ள அழகிய பந்தலில் தங்கியிருந்து காட்சி தருவார். சமய வேற்றுமைகளைக் கடந்து பெரும் கூட்டமாக மக்கள் இத் திருவிழாவில் கலந்து கொள்கின்றனர்.

உத்தரத்தன்று காலை தியாடியப்பரும் அழகமர் நாயகியும் புறப்பாடாகி, நான்கு வீதிகளை வலம் வந்து, கிழக்கு திக்கில், அருகேயுள்ள 'ஒன்பத்து வேலி'க்குச் சென்று மண்டகப்படிகளை ஏற்றுக் கொண்டு தேவார இன்னிசை ஒலிக்க மங்கள வாத்தியங்களோடு காவிரியாற்றுக்கு வந்து சேருகிறார். மறுநாட் காலை வாண வேடிக்கைகள் முடிந்த பிறகு, இறைவனும் இறைவியும் திருக்கோயில் திரும்புகின்றனர்.

மாசி மாதம் மக நாளில் சுவாமி இவ்வூருக்கு வடக்கே மூன்று மைல் தொலைவிலிருக்கும் 'நாகாச்சி' என்ற கிராமத்திற்குச் சென்று அவ்வூர் ஐயனார் கோயில் திடலில் அமைக்கப்பட்டுள்ள மண்டபத்தில் தங்கிவிட்டு மறுநாள் வருகிறார். நாகர் என்ற சிற்றரசன் கொள்ளிடத்தின் ஓடத் துறையை ஆட்சி செய்து வந்ததாகவும், அதனால் இவ்வூர் 'நாகர் ஆட்சி' என்று வழங்கப் பெற்று, பின்னர் 'நாகாச்சி' என்று மருவியதாகவும் தெரிகிறது. இப் பகுதி மக்கள், அழகாம்பிகையின் சிலையொன்று செய்து கோயிலுக்கு அளித்தனராம். எனவே நாகாச்சி, அம்மனின் பிறந்த வீடாகக் கருதப்படுகிறது. அதனால் பெண்ணுக்குரிய சீதனப் பொருள்களும் அனுப்பி வைக்கப்படுகின்றன. மறுநாள் சுவாமி நாகாச்சியிலிருந்து திருக்காட்டுப்பள்ளிக்குத் திரும்பும்போது கட்டுச்சாதக் கூடையுடன் அனுப்பி வைக்கப்படுகிறார்.

திருக்காட்டுப்பள்ளியில் சக்தியும் பெருமையும் வாய்ந்த தண்டாயுதபாணிக் கோயிலைத் தரிசித்தோம். வசீகரமற்ற முகப்பு. முற்றுப் பெறாத முன் சுவர்கள். மிக எளியமுறையில் காட்சியளிக்கும் அந்தக் கோயிலுக்குக் கோபுரம் எழுப்பி புதுப்பிக்க பக்தர்கள் முன்வர வேண்டும.

திருக்காட்டுப் பள்ளியில் வெகு விமரிசையாக நடைபெறும் பங்குனி உத்தர விழாவில் தண்டாயுதபாணி கோயிலுக்கும் சிறப்பான பங்கு உண்டு.

கடைத் தெருவில் வியாபாரம் செய்பவர்கள் இந்த விழாவுக்கு உற்சாகத்துடன் உதவி புரிகிறார்கள். 'சுவாமி காசு' என்றழைக்கப்படும் தண்டலுக்கு நிதிகொடுப்பதோடு சமய, இன வேறு பாட்டை மறந்து, அனைவரும் திருவிழா வில் மகிழ்ச்சியுடன் கலந்து கொள்கிறார்கள்.

விழாவுக்கு ஒருவாரத்திற்கு முன்பே,கடைவியாபாரிகள் வீதிகளில் பந்தல்கள் அமைத்து, வண்ணத் தோரணங்களும், கமுகு, பனை, ஈச்சை, தென்னங் குருத்துக்களும் கட்டி அலங்காரம் செய்து வைப்பார்கள். கடைகளும் அலங்கரிக் கப்பட்டிருக்கும்.

காவிரியாற்றிலிருந்து பல்வேறு காவடிகளைத் தாங்கிக் கொண்டு முருக பக்தர்கள் 'வேல் முருகா' 'வெற்றி வேல் முருகா' என்று தெருவெங்கும் முழக்கமிட்டு அனைவரையும் பரவசத்தில் ஆழ்த்துவார்கள். காவடி வரும் போதெல்லாம் பெண்டிர், வீட்டு வாசலில் குத்துவிளக்கேற்றி வைத்து, குடத்தில் நீர் எடுத்து வந்துதரையில் கொட்டி வணங்குவர்.

காவடி எடுத்து வருபவர்கள் மாலையில் தண்டாயுத பாணி கோயில் முன் அமைக்கப்படும் தீக்குழியில் தீ மிதிப்பார்கள்.

## ஒன்பத்துவேலி

திருக்காட்டுப்பள்ளிக்குக் கிழக்கில். அவ்வூர் ஊராட்சி யோடு இணைந்த பகுதிக்கு 'ஒன்பதிற்று வேலி' என்று குறிக்கப்பட்டுள்ளது. அங்கு பஸ் பாதையை யொட்டி பாழடைந்த வல்மீகநாத சுவாமி கோயில் உள்ளது. சுற்றி லும் மண்டிக் கிடக்கும் புதர்களையும், இடிந்த கோபுரத் தையும், அதன் மீது படர்ந்துள்ள முட் செடிகளையும்

காணும் போது, 'கேட்பாரில்லையா?' என்றே உள்மனம் ஏக்கப் பெருங் குரல் எழுப்புகிறது.

ஊருக்குச் சற்று ஒதுங்கி, வயல்களுக்கு நடுவே இருக்கும் இந்தக் கோயிலுக்குப் பக்தர்கள் வந்து போகிறார்களா என்பதே சந்தேகமாயிருக்கிறது. ஒரு காலத்தில் கிராமம் இந்தக் கோயிலைச் சுற்றியிருந்திருக்க வேண்டும் என்றும் நாளடைவில் அது தள்ளிப் போயிருக்க வேண்டும் என்றும் தோன்றுகிறது.

அந்தக் கோயிலில் அர்ச்சகராக இருக்கும் இளைஞர் சுப்ரமணியன் மன உறுதி மிக்கவர். பாம்புகள் நடமாட்டம் அதிகமாயுள்ள அந்தப் பிராகாரத்தில் அவர் அலட்சியமாக நடக்கிறார். அங்கு வாழும் ஒரு கருநாகப் பாம்பை எங்களுக்குக் காட்ட வேண்டும் என்று துடியாய்த் துடித்த அவர், நாய், பூனையைத் தேடுவது போல் சர்வசாதாரணமாகப் புதர்களை விலக்கி, 'அது' இருக்கிறதா என்று தேடியதைக் கண்டபோது, வியப்பாக இருந்தது. அந்தக் கோயிலில் விஷக்கடிக்கு மூலிகைகள் இருப்பதாகக் கூறிவிட்டு, ஓரிரண்டு செடிகளின் இலைகளைப் பறித்துக் காட்டினார்.

வல்மீகநாதனல்லவா அங்கு உறைகிறார்! அவரது கருவறை விமான கோபுரத்தில் பாம்புப் புற்று ஒன்றிருக்கிறது! அதில் கருநாகம் ஒன்று வாழ்கிறதாம். சில நேரங்களில் பூஜை செய்து கொண்டிருக்கும்போது, கருவறைக்குள் அது இறங்கி வருமாம். ஆனால் யாரையும் ஒன்றும் செய்வதில்லையாம்.

வல்மீகநாதர் மகரிஷிகளால் பூஜிக்கப்பட்டவர் என்றும் அது சுயம்புலிங்கம் என்றும் கூறிய சுப்ரமணியன், சட்டென்று சிவலிங்கத்தின் ஒரு பாதியைத் தனியே எடுத்து எங்களுக்குக் காட்டி விட்டு, மீண்டும் அதே இடத்தில் வைத்து விட்டார்!

எங்களுக்குத் தூக்கிவாரிப் போட்டது. எத்தனையோ சிவலிங்கங்களைப் பார்த்திருக்கிறோம். ஆனால், இதுவரை சிவலிங்கத்தைப் பாதியாகப்பிரித்து யாரும்காட்டியதில்லை. இந்த அதிசயம் ஒன்பத்துவேலி வல்மீகநாதர் சிவாலயத்தில் தான் நிகழ்ந்தது!

''இம்மாதிரி பின்னமான சிவலிங்கத்தைப் பூஜை செய்வது முறையா? என்று கேட்டபோது, ''அது என்னமோ தெரியாது. ரொம்ப நாளாக இப்படித்தான் இருந்து வருகிறது'' என்று கூறி அந்த விஷயத்திற்கு அத்துடன் முற்றுப் புள்ளி வைத்து விட்டார் அர்ச்சகர்,

வல்மீகநாத சுவாமி ஆலயத்தில் உறையும் அம்பிகையின் திருநாமம் சோமகலாம்பிகை. சில வருடங்களுக்கு முன் அச்சந்நிதியில் திருடர்கள் கன்னம் வைத்து நுழைந்து. அங்கிருந்த திருவாசி, மற்றும் பூஜை சாமான்கள் முதலியவற்றைத் திருடிச் சென்ற விவரத்தை வருத்தத்துடன் கூறிய சுப்ரமணியன், எங்களை வெளிப் பிராகாரத்திற்கு அழைத்துச் சென்று, கருவறை மண்டபத்தில் கன்னம் வைக்கப் பட்ட இடத்தையும், அது தற்போது சிமிட்டினால் மூடப் பட்டிருப்பதையும் காட்டினார்.

என்ன செய்வது? கலி முற்றுகிறதல்லவா? நம்மை ஆண்டவன் பாதுகாப்பது போக, நாம் ஆண்டவனையும் அவரது சொத்துக்களையும் பாதுகாக்க வேண்டியிருக்கிறது.

(பின்னர் வல்மீகநாதர் ஆலயத்தில் திருப்பணிகள் நடைபெற்று, குடமுழுக்கு நடந்தேறிய செய்தியை அறிந்து மகிழ்ந்தோம்.)

# நாகாச்சி

மாசி மகத்தன்று திருக்காட்டுப்பள்ளியிலிருந்து தியாடியப்பர், நாகாச்சி என்ற ஊருக்குச் சென்று, அங்குள்ள ஐயனார் கோயில் திடலில் ஒருநாள் தங்கிவிட்டு வருகிறார் என்று கேட்டறிந்த நான், பின்னர் அந்த ஊருக்குச் சென்று வந்தேன். ஐயனார் கோயில் புது வண்ணம் தாங்கிப் புதுமைக் கோலத்துடன் காட்சியளித்தது. சுற்றிலும் வயல்கள் சூழ்ந்திருக்க, ரம்மியமான இயற்கைச் சூழலில் இருக்கும் அக்கோயில் நம்மை 'வா வா' என்றழைக்கிறது. ஐயனாரைத் தவிர, சங்கிலிக்கறுப்பன், வீரபத்திரசாமி, மதுரைவீரன் சந்நிதிகளும் உள்ளன. அங்குள்ள அலங்கார யானை மெலிந்து இருந்தாலும் அழகாக இருக்கிறது.

# நேமம்

ஸ்ரீ திருஞானசம்பந்தப் பெருமான் திருக்காட்டுப்பள்ளிக்கு வருவதற்கு முன் அதற்கு மேற்கே ஐந்து கிலோ மீட்டர் தொலைவிலுள்ள நேமம் என்ற திருத்தலத்தைத் தரிசித்துவிட்டு வந்ததாகப் பெரிய புராணத்தில் சேக்கிழார் பெருமான் கூறுகிறார்.

அடும்பணி செஞ்சனயார்பதிகள் அணைந்து
பணிந்து நியமம் போற்றிக்
கடுங்கை வரை உரித்தார் மகிழ்ந்த காட்டுப்
பள்ளிப்பதிகை தொழுவார்.

நியமம் என்ற நேமத்தைத் தரிசிப்பதற்காக நான் புறப்பட்டுச் சென்ற போது சென்னை ஸ்ரீ கிருஷ்ணகான சபா

செயலர் திரு. யக்ஞராமனையும் உடன் அழைத்துச் சென்றேன், அவருக்குப் பூர்வீக கிராமம் நேமம். அருகிலுள்ள ரங்கநாதபுரத்தில் அவரது மூததையர் இல்லம் இருக்கிறது.

அக்கிராமத்தைச் சுற்றிலும் பழமார்நேரி, இளங்காடு, முல்லைக்காடு, ஆர்க்காடு போன்ற கிராமங்கள் இருக்கின்றன. காவேரியின் அக்கரையில் கோயிலடி ரங்கநாதப் பெருமாள் ஆலயம் இருக்கிறது.

ஸ்ரீ பிரம்மேத்திரகண்ட மகா புராணத்தில் ஸ்ரீ ஐராவதேச்வரர் என்ற தலைப்பில் ஒன்பது அத்தியாயங்கள் கொண்டது நேமம் தல வரலாற்று மகிமைகள்.

இத்திருத்தலத்திற்குக் கிருத யுகத்தில் பாரிஜாத வனம் என்றும், திரேதாயுகத்தில் பிரம்மேச்வரம் என்றும், துவாபர யுகத்தில் இந்திர நகரமென்றும், கலியுகத்தில் ஐராவதேச்வரம் என்றும் பெயர்கள் வழங்கி வருகின்றன. இங்கு பல முனிவர்கள் தவமியற்றி நற்கதியடைந்திருக்கின்றனர்.

திருப்பாற்கடலைக் கடைந்தபோது வெளிப்போந்த அமிருதத்திலிருந்து தெளித்த துளிகள் பலவித மரங்களாகத் தோன்றின. அவற்றில் பாரிஜாத மரமும் ஒன்று. இத்திருத்தலத்தைச் சுற்றிலும் பாரிஜாத மரங்கள் மண்டிக் கிடந்ததால், இதற்குப் பாரிஜாத வனமென்ற பெயர் ஏற்பட்டது.

ஸ்ரீ பிரம்ம தேவருக்கு ஒரு சமயம் செருக்கு அதிகமாயிற்றாம். தனக்கும் ஐந்து தலைகள் இருப்பதால் பரமேச்வரனுக்குச் சமமானவன் என்று இறுமாந்திருந்தாராம். இதைப்பற்றி நாரதர் பரமேச்வரிடம் 'வத்தி' வைத்து விட்டார். கடுஞ் சினங் கொண்ட ஈச்வரர், பிரம்மாவின் ஐந்தாவது சிரசைத் துண்டித்ததுடன் அவரது படைப்புத் தொழிலுக்கும் முற்றுப்புள்ளி வைத்து விட்டார்.

சிவாபராதத்திற்குப் பிராயச்சித்தம் தேடியலைந்த பிரம்மா காவேரிக் கரைக்கு வந்தார். அங்கு தவம் புரிந்து கொண்டிருந்த காச்யப முனிவர் பாரிஜாத வனத்தில் சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து சிவாராதனம் செய்து வரும்படி அவரிடம் கூறினார். அவ்வாறே காவேரி மணலைக் கொண்டு சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து, சரஸ்வதி தேவியுடன் பஞ்சாட்சர மந்திரத்தால் வழிபாடு செய்து பாவம் நீங்கப் பெற்றார். சுவாமி, பிரம்மேச்வரர் என்ற திருநாமம் பெற்றார். அவருக்கு வலப்புறம் பிரும்மகுண்டம் என்ற புண்ணிய தீர்த்தம் உண்டாயிற்று.

விருத்திராசுரனை வதம் செய்ததால் தேவேந்திர னுக்குப் பிரம்மஹத்தி தோஷம் ஏற்பட்டது. பல முனிவர் களின் உபதேசத்தால் அவன் பாரிஜாத வனத்திற்கு வந்து சிவாராதனம் செய்தான். தேவலோகத்திலிருந்து அமிருத கலசம் கொண்டு வரப்பட்டது. அது இருந்த இடம் ஒரு புண்ணிய கிணறாக மாறியது. எனவே, ஆலயத்திலுள்ள கிணறு. சுதாகூபம் என்று வழங்கப்படுகிறது. தேவேந்திரன் சிவ பூஜை செய்து பிரும்மஹத்தி தோஷத்திலிருந்து விடு தலை பெற்றதால், அதற்கு இந்திர நகரம் என்ற பெயர் ஏற்பட்டது.

தேவேந்திரன் சபையில் ஒரு நாள் நாரத மகரிஷிக்கும் ரம்பைக்கும் கடும் மோதல் ஏற்பட்டது. நாரதருக்குக் கோபம் வந்தது. அவளை சபித்து விட்டார், அந்தச் சாபம் நீங்குவதற்காக ரம்பை பூலோகத்தில் எங்கெங்கோ அலைந்துவிட்டுத் துர்வாச மகரிஷியின் உபதேப்படி பாரி ஜாத வனத்திற்கு வந்து சேர்ந்தாள். அங்குள்ள பிரம்ம குண்ட தீர்த்தத்தில் நீராடி, பஞ்சாட்சர மகாமந்திரத்தால் சிவாராதனம் செய்து வந்தாள்.

ரம்பை இல்லாமல் தேவேந்திரனின் சபை களையிழந்து காணப்பட்டது. அவளை எப்படியாவது மீண்டும் அங்கு

வரவழைத்துவிட வேண்டும் என்று இந்திரன் முடிவு செய்து தனது வாகனமான ஐராவத யானையைப் பூலோகத்திற்கு அனுப்பி வைத்தான்.

தன்னால் ஒரு பெண்ணைத் தூக்கிப் போக முடியாதா என்ற கர்வத்துடன் ஐராவதம் வந்தது. யானையைக் கண்ட ரம்பை நடுநடுங்கிப் போய் சிவலிங்கத்தைக் கட்டித் தழுவிக் கொண்டாள். யமனைக் கண்ட மார்க்கண்டேயனைப் போல்! ஐராவதம் தன் தும்பிக்கையால் அவளைச் சுற்றிப் பிடித்து இழுத்தது. திடீரென்று சிவலிங்கம் வளரத் தொடங்கியது. ஐராவதத்தின் பலம் குன்றியது. தன் தந்தத்தாலும் பாதங்களாலும் சிவலிங்கத்தைப் பெயர்க்க முயன்ற யானை மூச்சுத் திணறிக் கீழே சாய்ந்தது. மூர்ச்சையடைந்தது.

இந்தச் செய்தியை நாரதர் தேவேந்திரனுக்கு உடனே தெரிவிக்க, தேவேந்திரன் அவசரமாகப் பூலோகம் வந்து, பாரிஜாத வனத்திற்கு விரைந்து, கீழே விழுந்து கிடந்த ஐராவதத்தைக் கண்டு மனம் கலங்கினான். சிவாபராதம் நேர்ந்து விட்டதை உணர்ந்தான். சிவபெருமானைக் குறித்துத் தோத்திரம் செய்யத் தொடங்கினான். ஐராவதத்தை மன்னித்தருளும்படியும், ரம்பைக்குச் சாப விமோசனம் அளிக்கும்படியும் வேண்டினான். இந்திரனின் பிரார்த்தனைக்குச் சிவபெருமான் செவிமடுத்தார்! உள்ளம் குளிர்ந்தார். அவனுக்குத் தரிசனம் தந்தார்.

சிறிது நேரத்திற்கெல்லாம் ஐராவதம் மயக்கம் தெளிந்து எழுந்து நின்றது. சிவபெருமான் தேவலோக யானையை அனுக்கிரகித்தார். அன்று முதல் அத்தலத்திற்கு ஐராவதேச்வரம் என்றும், தமக்கு ஐராவதேச்வரர் என்றும் திருநாமங்கள் வழங்கட்டும் என்று அருளினார். ஐராவதம் சுதாகூபத்திலிருந்தும் காவிரியிலிருந்தும் தீர்த்தத்தைக் கொண்டு வந்து ஐராவதேச்வரருக்கு அபிஷேகம் செய்து

ஆராதித்தது. ரம்பையும் சாப விமோசனம் பெற்றுத் தேவேந்திரனுடன் இந்திர சபைக்குத் திரும்பினாள்.

இது ஒரு முக்கியத் தலம் என்றும் இங்கு மரிப்பவர்களின் வலக் காதில் பரமேச்வரன் பஞ்சாட்சர உபதேசம் செய்வ தாகவும் தல புராணத்தில் கூறப்பட்டுள்ளது.

திருக்காட்டுப் பள்ளியிலிருந்து தோகூர் செல்லும் பஸ் பாதையில் ஐந்தாவது கிலோ மீட்டரில், பாதையை யொட்டி இடப்புறம் சற்று இறக்கத்தில் அமைந்திருக்கிறது நேமம் ஐராவதேச்வரர் ஆலயம். புது வண்ணத்தில் புதுப் பொலிவு பெற்றுத் திகழ்கிறது அந்தப் பண்டைய கோயில்.

முதலில் வெளியேயுள்ள நந்தி மண்டபம் கண்ணில் படுகிறது. அதில் உள்ள நந்தி ஒரு பள்ளத்தில் இருக்கிறது. மழை இல்லாத வருஷங்களில் அதில் நீர் தேக்கினால் மழை பெய்யுமாம். தல புராணத்திலோ, மழையில்லாவிட்டால் சுதாகூபத்தின் தீர்த்தத்தாலும் காவேரி நீராலும் சுவாமிக்கு இடைவிடாது ஏழு நாட்கள் அபிஷேகம் செய்து தாமரைப் பூமாலையை அவருக்குச் சாத்தி, சால்யான்னத்தை நிவேதனம் செய்தால் நல்ல மழை பெய்து, தன தான்ய அபிவிருத்தி ஏற்படுமென்று கூறப்பட்டிருக்கிறது.

அர்த்தமண்டபத்திலிருந்து நந்தி மண்டபத்தைப் பார்த்தால் பள்ளத்திலிருக்கும் நந்திகேச்வரர், காதுகளைத் தூக்கிக் கொண்டு. தலையை நீட்டி, 'வந்திருப்பது யார்?' என்று ஆவலுடன் எட்டிப் பார்ப்பது போலிருக்கிறது. இது ஓர் அபூர்வ காட்சியாகும்.

இங்கு உறையும் அம்மனின் பெயர் அலங்காரி. உள் மண்டபத்தில் தென்புறம் பார்த்து இரண்டு அம்மன் சிலை கள் இருக்கின்றன. முதலிலிருந்த சிலை திருட்டுப் போன தால் வேறொரு சிலையைப் பிரதிஷ்டை செய்தார்களாம். பின்னர், திருட்டுப் போன சிலையும் கிடைத்து விட்டதாம்.

தென் பிராகாரத்தில் தட்சிணாமூர்த்திக்கு முன்னால், கிழக்கே பார்த்து ஸ்ரீலட்சுமி நாராயண சுவாமியின் அழகிய சிலை இருக்கிறது. முன்பு அது ஊருக்குள் இருக்கும் வேங்கடேசப் பெருமாள் கோயிலின் மூலஸ்தானத்தில் இருந்ததாம். அதற்கு அடையாளமாகப் பெருமாள் கோயிலின் கருவறையில், சிறிய வடிவில் லட்சுமிநாராயண சுவாமியின் திருவுருவம் வைக்கப்பட்டுள்ளது.

நேமம் ஐராவதேச்வரர் ஆலயத்தின் புராணச் சிறப்பை அறிந்து கொண்ட நாம், அப்பகுதியின் சரித்திரப் பின்னணியையும் சுருக்குமாகத் தெரிந்து கொள்வோம்.

சோழப் பேரரசு தழைத்த நாட்களில் மேற்குத் தஞ்சையில் 'வல்லநாடு' என்றொரு பகுதி இருந்தது. அது வடக்குத் தெற்கில் கொள்ளிடம் முதல் பிள்ளைவாய்க்கால் வரையிலும், கிழக்கு மேற்கில் திருக்காட்டுப் பள்ளியிலிருந்து தோகூர் வரையிலும் இருக்கும் நிலப்பரப்பாகும். கோவிலடி, அகரப்பேட்டை, கச்சமங்கலம், மேகளத்தூர், பழமார்நேரி, பூண்டி, ஆற்காடு, விண்ண மங்கலம், நேமம், அரங்கநாதபுரம், முல்லைக்குடி போன்ற பதினெட்டு சிற்றூர்களைக் கொண்டதாகும்.

தற்போதிருக்கும் நேமம், புதிய ஊர். ஒரு காலத்தில் இதற்குப் சற்று தெற்கில் பழைய நேமம் இருந்திருக்கிறது.

ஆயிரத்து இருநூறு ஆண்டுகளுக்கு முன் முத்தரையர் என்ற அரச மரபினர் நியமம் என்ற நேமத்தை தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்து வந்தனர். ஒன்பதாவது நூற்றாண்டில் விசயாலயச் சோழன் முத்தரையரை வென்று நியமத்தை உருத் தெரியாமல் அழித்து விட்டான்.

இன்றைய நேமத்திற்கு அருகில் லிங்கத் திடல் என்ற ஓரிடத்தைக் காணலாம். அப்பகுதியில் நூற்றுக்கணகான சிவலிங்கங்கள் இருந்தனவாம். இருபது முப்பது வருடங்

களுக்கு முன் தாங்கள் பார்த்திருப்பதாக அங்குள்ளவர்கள் கூறுகிறார்கள். யார் யாரோ அவற்றைப் பெயர்த்துக் கொண்டு போய் விட்டார்களாம். அந்த இடத்திற்குச் சென்று பார்த்தபோது, அங்கு பிரமாண்டமான கோயில் ஒன்று இருந்து, பின்னர் சிதறுண்டு போயிருக்கும் சின்னங்களைக் காண முடிகிறது. அது போர்ப்பகையினால் விளைந்த சேதமாகத்தான் இருக்க வேண்டும். வயல் ஓரமாக ஒரு பெரிய பட்டைலிங்கம் பின்னமாகக் கிடந்ததைக் கண்டோம். அருகிலுள்ள அரிசி மில்லின் பின்புறம் மிகப் பெரிய சிவலிங்கம் ஒன்று ஆவுடையாரோடு இருக்கக் கண்டோம். இத்தனை பெரிய சிவலிங்கம் இருந்தக் கோயில் எத்தனை பெரிதாக இருந்திருக்கவேண்டும் என்று எண்ணி மலைத்துப் போனோம். இதைப் போன்று இன்னும் எத்தனை கோயில்கள், கலைச் செல்வங்கள் புதைப்பொருள் ஆராய்ச்சிக்குப் பிடிபடாமலும், சரித்திர ஏடுகளுக்குள் சிக்காமலும் மண் மூடிப் போயிருக்கின்றனவோ?

# இளங்காடு

நேமத்திற்குத் தெற்கேயுள்ள 'இளங்காடு' என்ற சிற்றூருக்குச் சென்றோம். ஊர் சிறியது. ஆனால், அதன் புகழ் பெரியது. வெளியுலகிற்கு அதிகம் தெரியாமல் அங்கு தெய்வ மணமும் தமிழ் மணமும் கமழ்ந்து கொண்டிருக்கிறது. சோழ மன்னர்களின் இறையுணர்வுக்கும் கலையுள்ளத்திற்கும் சான்றாக, பெரியதொரு சிவன் கோயில் காலம் காலமாக அங்கு நின்று கொண்டிருக்கிறது.

தமிழ்க் கன்னி, அம்மனின் திருச்சன்நிதியில் களிநடம் புரிந்து அம்மண்ணிற்குப் பெருமை சேர்க்கிறாள். சங்கம் கூட்டி, புலவலர்களைப் பேணுகிறாள். பள்ளி நடத்திப் பண்டிதர்களை வளர்க்கிறாள்.

இளங்காட்டின் வளம் கொழிக்கும் வரலாறு ஈடிணை யற்றது.

முதலாம் குலோத்துங்கனின் ஆட்சிக் காலத்தில் 'சேதிராயன்' என்னும் சிற்றரசன் சோழனுக்குக் கப்பம் கட்டி, திருக்கோவிலூரை ஆண்டு வந்தான். அவனது இரண்டாம் மகன் வீரம் மிகுந்தவனாக இருந்ததால், குலோத்துங்கனின் மகன் விக்கிரமசோழன் ஆட்சிபீடம் ஏறியதும் தன் தோழனான இளைய சேதிராயனைத் தன் தளபதியாக்கிக் கொண்டான்

கர்நாடகத்தோடு ஒரு பெரும் போர் மூண்டது. அச் சமயம் தனது வீரதீர பராக்கிரமங்களால் அந்நாட்டை வென்று விக்கிரமனுக்குக் காணிக்கையாகச் சமர்ப்பித்தான் சேதிராயன். அந்த அரிய சாதனைக்குப் பரிசாக வல்ல நாட்டின் ஆட்சியைச் சேதிராயனுக்கு அளித்தான் விக்கிரமன். நேமத்தைத் தலைநகராக்கினான். அங்கு ஒரு பெரிய சிவன் கோயிலைக் கட்டினான். தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் உள்ளதுபோல் மூலஸ்தானத்தின் மீது உயரமான கோபுரம் ஒன்றை அமைத்தான். முதலாம் ராஜராஜன் மிகவும் விரும்பிய 'விசயவிடங்கன்' என்ற பெயரை இறைவனுக்குச் சூட்டினான். அவ்வூருக்குத் தன் தந்தையின் நினைவாக அவரது பட்டமான 'இராச கேசரி' என்ற பெயரைச் சூட்டி மகிழ்ந்தான். கப்பமின்றி ஆளும் உரிமையைச் சேதிராயனுக்கு ஈந்தான். காலப் போக்கில் இராசகேசரி 'மருவி' இராசகிரி என்றாயிற்று.

இருநூறு ஆண்டுகள் சேதிராயன் மரபினர் அமைதியாக ஆட்சி புரிந்து வந்தனர். கி.பி. 1330 முதல் இருநூறு

ஆண்டுகள் அவ்வப்போது காவிரியாற்றின் வெள்ளம் இங்கு பல நாசங்களை விளைவித்து வந்தது. இறுதியாக, 1560-ம் ஆண்டில் இங்கு சீற்றத்துடன் பெருகிய பயங்கர வெள்ளம் ஊரையே மணல்மேடாக்கி விட்டுப்போய் விட்டது. அங்கு வாழ்ந்த மக்கள் தெற்கில் ஒரு கல் தொலைவில் சற்று மேடாக இருந்த சோலை சூழ்ந்த பகுதியில் குடியேறினர். குடியேறியவர்கள், இழந்த கோயிலை மீண்டும் கட்ட வேண்டுமென்று கங்கணம் கட்டுக் கொண்டனர். மீண்டும் வெள்ளம் வந்து தாக்காதவாறு சற்று மேடான இடத்தில் கோயிலைக் கட்டினர். போர்க் காலங்களில் மக்கள் அடைக்கலம் புகுவதற்கேற்றவாறு பதினாறுஅடி உயரத்தில் மதிற்சுவா எழுப்பி அதை ஒரு கோட்டையாக்கினர். நாயக்கர் படையெடுத்த போதும் ஹைதர் அலி கொள்ளை யிட வந்த போதும் பெண்டிர், சிறுவர், நோயுற்றவர் முதியவர்—அனைத்து மக்களையும் காத்துத் தந்தது இந்த தெய்வ கோட்டையே.

தொடர்ந்து நடைபெற்ற போர்களில் பல காளையரின் உயிர் பிரிந்தபோது குழந்தைகளைக் காப்பாற்றி, சேதிராயர் மரபு அழியாமல் காத்துத் தந்தது விசயவிடங்கேச்வரர் சிவாலயமே.

அந்த ஆலயத்தை வெளியிலிருந்து பார்த்ததுமே 'அடேயப்பா! இத்தனை சிறிய கிராமத்தில் இத்தனை பெரிய கோயிலா!' என்று வியக்கிறோம். உள்ளே சென்று நந்தியைத் தரிசித்ததும், அதன் உயிரோட்டமுள்ள அழகில், சிந்தையைக் கவரும் சிற்ப எழிலில் மனத்தைப் பறி கொடுக்கிறோம்.

"ஸ்ரீ காஞ்சிப் பெரியவர் இங்கே வந்தபோது இந்த நந்தியை ரொம்ப நேரம் பார்த்துக் கொண்டிருந்தார்" எனகிறார் அங்கு நின்றிருந்த முதியவர் ஒருவர்.

மாமுனிவர் தரிசிக்காத கோயில் உண்டா? பார்க்காத, பார்த்துப் பரவசப்படாத தெய்வச்சிலை உண்டா, பாராட்டாத கலைச் செல்வம்தான் உண்டா?

பிராகாரத்தை வலம்வரும் போது மூலஸ்தான கோபுரத்தைப் பார்க்கிறோம், 'ஆகா! எத்தனை உயர மாக, கம்பீரமாக இருக்கிறது. அடித்தலத்தை எத்தனை அகலமாக அமைத்திருக்கிறார்கள்! இப்போது இருப்பதை விட உயரமாகக் கட்டவேண்டும் என்று முதலில் திட்ட மிட்டு அடித்தளத்தைப் பெரிதாக அமைத்திருப்பார்களோ?

இந்த இடத்திற்குப் புராணப் பெயர் பாலவனம். அழகான தமிழில் அதை 'இளங்காடு' என்று அழைத் திருக்கிறார்கள். பாலவனத்தில் உள்ள அம்பிகை பாலாம்பிகை—அவளை வாலாம்பிகை என்றும் அழைக் கிறார்கள். மதிற்சுவருக்குள் அம்மன் தனிக்கோயிலில் உறைகிறாள். ஆறடி உயரத்தில் அழகிய திருமேனி மேலிரு கரங்களில் தாமரை ஏந்தி, கீழிரு கரங்களில், அபய, வர முத்திரைகளுடன் திகழ்கிறாள்.

இந்த அரிய பெரிய கோயிலைக் கண்ணாகக், காத்து, அவ்வப்போது திருப்பணிகளும் குடமுழுக்குகளும் செய்து வரும் இவ்வூராரை வாழ்த்தக் கடமைப்பட்டுள்ளோம். இவர்களுக்கு இது கல்விக் கூடமாக—முக்கியமாக, தமிழ் பயிலும் கூடமாக அமைந்திருக்கிறது. அக்காலத்தில் சிலம்பம், மற்போர், மஞ்சி விரட்டு போன்ற விளையாட்டுக் களின் விளைநிலமாகவும் இக்கோயில் திகழ்ந்து வந்திருக் கிறது. திருமணம் நிச்சயமாவதும், வழக்குகள் தீர்க்கப்படு வதும் விசய விடங்கேச்வரர் திருச்சந்நிதியில்தான். பல தமிழ்ப் பெரியார்கள் இங்கு இலக்கியப் பேருரை ஆற்றி யிருக்கிறார்கள். ஆற்றியும் வருகிறார்கள்.

மதுரையில் நான்காம் தமிழ்ச்சங்கம் நிறுவிய பாண்டித் துரைத் தேவர் இளங்காட்டிற்கு வந்து, இது தமிழ்ப்பாவை

வளருவதற்கேற்ற மண்வளம் நிறைந்த ஊர் என உணர்ந்து, இங்கு ஒரு தமிழ்ச் சங்கம் நிறுவச் செய்தாராம். அது ஆல் போல் தழைத்து, தமிழ் வேட்கை மிக்கோருக்கு அரும் நிழல் தந்து, 'திருவளர் சோலை எல்லாம் செந்தமிழ் பேசும் கிள்ளை'யாகப் பரந்து பல பண்டிதர்களையும் புலவர் களையும் புதிது புதிதாகப் படைத்துத் தந்து கொண்டிருக் கிறது, இன்றும் இங்கு இலக்கிய வகுப்புகள் நடைபெறு கின்றன சின்னஞ் சிறார் முதல் வயோதிகர் வரை பலர் ஆர்வத்தோடு வகுப்புகளுக்கு வருகின்றனர். மொழிவளமும் இலக்கியப் புலமையும் பெறுகின்றனர்.

வல்லநாட்டை முதன்முதலில் ஆண்ட சேதிராயனுக்கு இரண்டு மகன்கள். மூத்தவனுக்கு மூன்று பிள்ளைகளும், இளையவனுக்கு இருவரும் தோன்றினர், இந்த ஐந்து பிள்ளைகளின் சந்ததிகள் ஐந்து கிளைகளாகப் பிரிந்தனர். அவர்களது வழித்தோன்றல்களே இளங்காட்டில் இன்றும் வாழ்ந்து வருகின்றனர். சேதிராயர்களின் உறவினர்களாய் நாட்டார்கள், அங்கராயர்கள், கொல்லத்து அரையர்கள், சோழர்கள், பாப்புரெட்டியார்கள் ஆகியவர்கள் இளங் காட்டில் வசிக்கிறார்கள். அவர்கள் அத்தனைப் பேரும் ஊரின் நடுநாயகமாகவும் சமூக நலக் கேந்திரமாகவும் விளங்கும் சிவாலயத்தைக் கண்ணிமை போல் காத்து வருகிறார்கள்.

தமிழ் காக்கும் இளங்காடு அன்பர்களின் தெய்வத் தொண்டு வாழ்க; வளர்க,

# முல்லைக்காடு

இளங்காட்டிலிருந்து பிள்ளை வாய்க்காலைக் கடந்து ஆறு கிலோ மீட்டர் சென்றால் முல்லைக்காட்டை அடைய லாம். அந்த ஊரை முல்லைக் கொடி என்றும், முல்லைக் குடி என்றும், முல்லங்குடி என்றும் அழைக்கிறார்கள். முன்பு அந்த இடத்திற்குத் தீட்ச சமுத்திரம் என்ற பெயர் இருந்திருக்கிறது. ஓமகுண்டம் என்ற திருக்குளம் ஒன்றும் இருப்பதால், ஒரு காலத்தில் இந்தப் பகுதியில் ஓமங்களும் யாகங்களும் நிறைய நடந்திருக்க வேண்டும் என்றும், தீட்சி தர்கள் குடியிருந்திருக்க வேண்டுமென்றும் கருதப்படுகிறது. இருநூறு முந்நூறு வருடங்களுக்கு முன் வரகூரிலிருந்து வந்து குடியேறிய சில குடும்பங்களே முல்லைக்குடி கிராமம் ஏற்படுவதற்குக் காரணமாய் இருந்திருக்க வேண்டும் என்ற கர்ண பரம்பரைச் செய்தியும் நம் காதில் விழுகிறது.

முன் காலத்தில் எப்படியிருந்ததோ நமக்குத் தெரியாது ஆனால், இன்றுள்ள நிலையை அங்குள்ள சுந்தரேச்வரர் ஆலயத்தின் நிலைமையை வைத்து எளிதாக அறிய முடி கிறது. மிகவும் சிலமடைந்துள்ள அக்கோயில் 'யாராவது என் மீது அக்கறை காட்டமாட்டார்களா? ஓரளவாவது திருப்பணி செய்து குடமுழுக்குச் செய்யமாட்டார்களா?' என்று ஏக்கத்துடன் காத்துக்கொண்டிருக்கிறது. மதுரையை அரசாளும் மீனாட்சி தேவிதான் இங்கும் கோலோச்சிக் கொண்டிருக்கிறாள். அவள் திருவுளம் சொள்ளப் போவது எந்நாளோ?

அந்தணர் வீதியிலுள்ள ஸ்ரீ கோதண்டராமர் திருச் சந்நிதியைத் தரிசித்துக் கொண்டு இரண்டு கிலோ மீட்டர் தொலைவிலுள்ள ஆற்காட்டிற்குச் சென்றோம். அங்கு அழிவுச் சின்னமாக நின்றுகொண்டிருக்கும் சிவன்

கோயிலைக் கண்டதும் உள்ளம் குமுறி, கண்ணீர் முட்டி நின்றது. ஒரு காலத்தில் வளம் கொழித்த கோயிலுக்கு ஏன் இப்படியொரு கதி ஏற்பட்டது என்ற வேதனை நெஞ்சைக் கட்டியது. முன்புறம் யாரோ பீரங்கிகளைக் கொண்டு பிளந்தது போன்ற இடிபாடுகள். மண்டபங்கள் சிதறுண்டு போய், தெய்வச் சிலைகளெல்லாம் சிதறிக் கிடக்கின்றன. அம்மன் சிலையையே காணோம். மூல மூர்த்தியான பெரிய சிவலிங்கம், மூலஸ்தானத்திலிருந்து பெயர்க்கப்பட்டு வெளியே வைக்கப்பட்டிருக்கிறது.

எங்களைக் கண்டதும் உள்ளூர்க்காரர்கள் இருபது, முப்பது பேர் கூடிவிட்டனர். அத்தனை நேரம் ஏளனச் சிரிப்போடும் அலட்சியப் பார்வையோடும் எங்களைப் பார்த்துக் கொண்டிருந்த ஒருவர், நாங்கள் புறப்பட்டபோது "இந்தக் கோயிலை ஏதாவது செய்ய முடியுமாங்க?" என்று கேட்டார். "நீங்களெல்லாம் முயன்றால் முடியும்" என்றேன் நான்.

கோயில் வழிபாட்டில் அக்கறை இல்லாதவர் போல் காணப்பட்டாலும், பாழடைந்துள்ள தங்கள் கோயிலைச் சீர்ப்படுத்த வேண்டும் என்ற ஆதங்கம் அவருள் குமுறிக் கொண்டிருக்கிறது. ஆனால், அதற்கான வழிவகைகள் அவருக்கு புரியவில்லை.

என் யாத்திரையின் போது ஒவ்வொரு கிராமத்திலும் அவ்வூர் வாசிகள் அனைவருக்கும் தங்கள் கோயிலைப் பற்றிய பெருமையும் அக்கறையும் இருப்பதைக் காண்கிறேன். அவை நல்ல முறையில் செயல்பட வேண்டும் என்பதிலும், வெளியுலகம் அந்தக் கோயிலைப் பற்றி அறிய வேண்டும் என்பதிலும் மிகவும் ஆவலாயிருக்கிறார்கள். பெரும்பாலோர் இதை வெளிப்படையாகத் தெரிவிக்கிறார்கள். ஆனால் ஒரு சிலரோ மனத்தின் அடித்தளத்தில் அத்தகைய விருப்பம் இருந்தாலும் சில கொள்கைகளுக்காக மௌனமாயிருக்கிறார்கள்! அந்த மௌனத்தையும்முறித்து

ஆற்காட்டு அன்பர் பேசியது என் மனத்தைத் தொட்டது.

இளங்காட்டில் நல்ல முறையில் நிர்வகிக்கப்பட்டுவரும் கோயில் முல்லைக் காட்டில் திருப்பணிக்காகக் காத்திருக்கும் கோயில்; ஆற்காட்டில்பரிதாபமாகப் பாழாகிக்கிடக்கும் கோயில்—இம் மூன்றுக்குப்பிறகு வேழக்காடான கஜாரண்யத்தில் திருப்பணி நடைபெற்றுக் கொண்டிருக்கும் சிவன் கோவிலுக்கு வந்து சேர்ந்தோம்.

## ரங்கநாதபுரம்

இளங்காட்டிற்கும் கஜாரண்யமென்ற ரங்கநாதபுரத்திற்கும் ஒரு கிலோ தொலைவு கூட இல்லை. முன்பு இளங்காடும் ரங்கநாதபுரமும் ஒரே கிராமமாகத் தான் இருந்திருக்கின்றன. முன்பெல்லாம் இளங்காட்டு வழியாகத்தான் ரங்கநாதபுரத்திற்கு வந்து போய்க் கொண்டிருந்தார்கள். பின்னர் தான் நேமத்திற்கும் பழமார்நேரிக்கும் இடையே வயல்களின் குறுக்கே அக்கிராமத்திற்குப் பாதை போடப்பட்டது. இன்னும் பேருந்து எட்டிப் பார்க்காத சின்னஞ்சிறிய அழகிய கிராமம் ரங்கநாதபுரம்.

கொச்செங்கட் சோழ நாயனார் திருப்பணி செய்துள்ள பல மாடக் கோவில்களில் கஜாரண்யேச்வரர் ஆலயமும் ஒன்று. ஆயிரத்து அறுநூறு ஆண்டுகளுக்கு முன்பே இக் கோயில் தோன்றியிருக்க வேண்டுமென்று கணக்கிட்டிருக்கின்றனர்.

கிராமத்தினுள் நுழையும்போதே, கரும்பு நிலங்களுக்கு அப்பால், பச்சைப் பசேலென்ற நெல்வயல்களுக்கு இடையே வெட்டவெளியில் தன்னந்தனியாக நிற்கும் கஜாரண்யேச்வரர் ஆலயம் நம்மை வரவேற்கிறது.

கிழக்கு நோக்கி எழுந்தருளியிருக்கிறார் சுவாமி. பெரிய சிவலிங்கம், தென்புறம் நோக்கி அமர்ந்திருக் கிறாள் அன்னை காமாட்சி. அருட்பார்வை கருணையைப் பொழிகிறது. மாடக் கோயிலின் அடித்தளத்தில் சுவருக் குள்ளிருந்து யானை முகம் ஒன்று தெரிகிறது. கஜாரண்யம் அல்லது கரிவனம் என்ற புராணப் பெயருக்கு இது ஒரு சான்று.

கஜாரண்யேச்வரர் ஆலயத்தில் இருப்பவர் வலம்புரீ விநாயகர். அவரையடுத்துசுப்பிரமணிய சுவாமி,கஜலட்சுமி சந்நிதிகள் உள்ளன. மாடக்கோயிலானதால் கீழ்ப் பிராகா ரத்தைத் தவிர, மேலே கருவறையைச் சுற்றி ஒரு பிராகாரம் இருக்கிறது. ஆனால் அது வலம் வருவதற்கேற்றவகையில் இல்லை.

தட்சிணாமூர்த்தியின் திருவடிவம் தனிச் சிறப்புடன் விளங்குகிறது. ஸ்ரீ காஞ்சி முனிவர் அச்சந்நிதியில் சற்று நேரம் தியானத்தில் இருந்ததையும், அதற்கு நேரே வில்வ மரம் இருந்த சிறப்புத் தன்மையை முக்கியமாகக் குறிப் பிட்டுக் கூறியதையும் பற்றி அவ்வூரிலுள்ள முதியவர் ஒருவர் நினைவு கூர்ந்தார். ஆலயத்தையொட்டி இருக்கும் பெரிய குளம், சீர்ப்படுத்தப்பட வேண்டிய நிலையில் உள்ளது.

ரங்கநாதபுரத்தில், இண்டிடியான் எனற பழைமை யான ஐயனார் கோயிலைத் தரிசித்தோம். மரங்களடர்ந்த நிசப்தமான இருண்ட பகுதியில் அக்கோயில் இருக்கிறது. சுற்றிலும் ஹரிஹரபுத்திரன், கருப்பன், ஐயனார், கோயில் களும், பாம்புப் புற்றும் இருக்கின்றன. ஐயனாரைக் குல தேவதையாகக் கொண்டிருப்பவர்கள் ஆண்டுக்கு ஒரு முறை யாவது தவறாமல் வந்து தங்கள் பிரார்த்தனைகளைச் செலுத்திவிட்டுப் போகிறார்கள். வெள்ளிக்கிழமைகளில் அங்கு நல்ல கூட்டம் இருக்குமாம்.

அந்தணர் வீதியில், ஸ்ரீ லட்சுமி நாராயணப் பெருமாள் கோயில் இருக்கிறது. நாற்பது, ஐம்பது வருடங்களுக்கு முன் இங்கு உறியடி உற்சவம் நடைபெற்று வந்து பின்னர் நின்று போய் விட்டதாம்.

ஆலயத்தில் உற்சவமூர்த்தி இல்லாததைப் பற்றி விசாரித்தேன். ''உற்சவமூர்த்தி இங்கில்லை. வேறோர் இடத்தில் பத்திரப்படுத்தி வைத்திருக்கிறோம்; வாருங்கள், பார்க்கலாம்'' என்று அழைத்துச் சென்றார் ஓர் அன்பர்.

அந்த உற்சவமூர்த்தியைப் பார்த்ததும் அதன் பேரழகில் நாங்கள் சொக்கிப் போனோம். கோபால கிருஷ்ணன், பிறந்த மேனியாக இடக் காலைத் தூக்கி நர்த்தனம் செய்து கொண்டிருக்கும் அபூர்வ திருக்கோலம் அது. வலக் கையில் வெண்ணெய் உருண்டையைத் திருடி வைத்துக் கொண்டு, நவநீதசோர கிருஷ்ணனாக ஆனந்தக் கூத்தாடிக் கொண்டிருக்கிறான். அடேயப்பா! அழகோ அழகு, இதயத்தை கொள்ளை கொள்ளும் அழகு.

உருண்டு திரண்ட அங்கங்கள்; சதைப் பற்றுமிக்க 'கொழு கொழு'வென்ற உடல்வாகு; லேசாகத் தட்டிக் கொடுத்து விளையாட வேண்டும் என்று தோன்றும் சின்னஞ் சிறுசான தொந்தி; சின்னக் கண்ணனுக்குச் சிற்பக் கலைஞர் சீரான அணிகலன்கள் அணிவித்துச் சிங்காரித் திருக்கும் அருமை; முன்னழகை பார்த்துப் பார்த்துப் பரவச மாகி, பின்னழகைக் காண ஆவல் கொண்டு பின்புறம் சென்றாலோ, அம்மாவோ! இது வார்த்தெடுத்த விக்ரகமா? இல்லை இல்லை, யசோதை இளம் சிங்கம் உயிர்த் துடிப் புடன் அல்லவா ஆடிக் கொண்டிருக்கிறான். அவன் சலங் கையின் ஜல் ஜல் ஒலி கேட்கிறதே! ''போறும்டா கண்ணா. பிஞ்சுக் கால் வலிக்கப் போகிறதடா'' என்று கூற வேண்டும் போல் தோன்றுகிறதே. அந்தத் தொடையைக் கிள்ளி னால் ஒரு பிடி சதை நம் கைக்குள் அடங்கும்! அவனை

அப்படியே கட்டித் தழுவி உச்சி முகர்ந்து கிள்ளி அழவிட்டு வேடிக்கை பார்க்க வேண்டும் போல் ஒரு திடீர் விபரீத ஆசை பிறக்கிறது.

பாலகிருஷ்ணனைக் கிருஹஸ்த கிருஷ்ணனாகவும் பார்க்கிறோம். இரு புறங்களிலும் ருக்மிணி சத்யபாமா வையும் காண்கிறோம். நுணுக்கமான வேலைப்பாடுகள் நிரம்பி வழியும் திருவாசியிலிருக்கும் சங்கு சக்கரத்தை பார்க்கும் போது, ஸ்ரீமன் நாராயணமூர்த்தி, ஸ்ரீதேவி பூதேவியுடன் எழுந்தருளியுள்ளதையும் அறிந்து கொள்ள முடிகிறது.

ஒரே பீடத்தில் அமைந்திருக்கும் இந்தப் பஞ்சலோக உற்சவமூர்த்தி ரங்கநாதபுரம் ஸ்ரீலட்சுமிநாராயணப் பெரு மாள் ஆலயத்தைச் சேர்ந்தது அல்ல. ஐம்பது அறுபது வருடங்களுக்கு முன்னர் கிருஷ்ணாபுர கிராமத்தில் மண்ணுக்கடியில் கிடைத்தது. ரங்கநாதபுரம் பெருமாள் கோயிலில் உற்சவ விக்ரகம் ஒன்று இருந்ததா, அது என்ன மூர்த்தி, அது என்னவாயிற்று என்ற விவரமெல்லாம் ஒருவருக்கும் தெரியவில்லை.

அந்தக் கிருஷ்ணாபுர கிராமமும் தற்போது இல்லை. அது-அழிந்து போய்விட்டது. வெள்ளக் கொடுமைதான் காரணமாய் இருக்க வேண்டும். இளங்காட்டிலிருந்து ஒரு கிலோ மீட்டர் தொலைவிலுள்ள அந்த இடத்தைப் பார்த்துவிட்டு வந்தேன். தற்போது அது வயற்காடா யிருக்கிறது. நிலத்தை உழும்பொழுது இந்த பாலகிருஷ்ண விக்ரகம் கிடைத்ததாம். அதை எடுத்து வந்து ரங்கநாத புரம் கோயிலில் வைத்துக் கொண்டு விட்டார்கள். கிருஷ்ணாபுரம் கிராமத்தில் பெரிய கிருஷ்ணன் கோயில் ஒன்று இருந்திருக்க வேண்டும். கால வெள்ளத்தில் ஊரோடு அதுவும் அழிந்து போயிருக்க வேண்டும். மண்ணுக்கடியில் இன்னும் பல விக்ரகங்கள் புதைந்திருக்கலாம். தொல்

பொருள் ஆராய்ச்சி இலாகாவினர் அகழ்ந்து பார்த்தால் கிருஷ்ணாபுரத்தைப் பற்றிப் பல அரிய புதிய செய்திகளை அறிந்து கொள்ளலாம்.

இந்த உற்சவமூர்த்தியின் பீடத்தில், பாலகிருஷ்ணனின் பாதங்களுக்கு அஞ்சலி செய்து கொண்டு ஒரு சிறு உருவம் காணப்படுகிறது. அருகில் சென்று உற்றுப் பார்த்த போது அது கோவணாண்டியான ஒரு சந்நியாசியின் உருவம் என்பது தெளிவாயிற்று. கையில் தண்டம் இருக்கிறது. 'இவர் ஸ்ரீ கிருஷ்ண லீலா தரங்கிணியை இயற்றிய ஸ்ரீ நாராயண தீர்த்தர்' என்று அருகில் நின்றிருந்த முதியவர் ஒருவர் கூறினார்.

''எந்த ஆதாரத்துடன் கூறுகிறீர்கள்?'' என்று அவரிடம் கேட்டேன்.

ஸ்ரீகாஞ்சிப் பெரியவர் இங்கே வந்திருந்தபோது இப்படி கூறியதாகச் சொல்லக் கேட்டிருக்கிறேன்'' என்றார் அவர். ரங்கநாதபுரத்தைச் சேர்ந்த அனைவருமே இந்தச் செய்தியைக் கூறுகிறார்கள்.

'கிருஷ்ணாபுரத்தில் கிடைத்த விக்ரகத்தில் நாராயண தீர்த்தரின் உருவமா?' என்ற கேள்வி எழத்தான் செய்யும்.

ஸ்ரீ நாராயண தீர்த்தரின் வாழ்க்கை வரலாறு நமக்கு முழுமையாகக் கிடைக்கவில்லை. ஆந்திரத்தில் பிறந்தவர் காசிக்குச் சென்று, திருப்பதியைத் தரிசித்து, பின்னர் தஞ்சைத் தரணிக்கு வந்து இந்தப் பகுதிகளில் சஞ்சாரம் செய்ததாக அறிய முடிகிறது. 'ஜய ஜய வராக புரி வேங்கடேசா' என்று பாடியிருப்பதால் அவர் வரகூர் வேங்கடதாசன் என்பதும், உறியடி உற்சவத்தைத் தொடங்கி வைத்ததிலிருந்து, அந்த ஊரிலேயே சிறிது காலம் வாசம் செய்திருக்க வேண்டும் என்பதும் தெரிகிறது. ஆனால் இந்தப் பகுதியில் சஞ்சாரம் செய்தவர், அருகி

லுள்ள இதர கோயில்களுக்கும் விஜயம் செய்யாமல் இருந்திருப்பாரா? வரகூரை அடுத்துள்ள ரங்கநாதபுரத்திற்கும் கிருஷ்ணாபுரத்திற்கும் அவர் விஜயம் செய்திருக்கலாம் அல்லவா?

கிருஷ்ணாபுரத்திலிருந்த பெருமாள் கோயிலில் ஒரு பாலகிருஷ்ணன் விக்ரகம் இருந்திருக்கலாம். தீர்த்தருடைய கிருஷ்ண லீலைந் பாடல்களைக் கேட்டு அந்தக் கண்ணன் நர்த்தனம் ஆடியிருக்கலாம். அந்தச் சலுங்கை ஒலியைக் கேட்டுத் தீர்த்தரும் மெய்ம் மறந்திருக்கக் கூடும்.

நாராயண தீர்த்தருடைய காலத்திற்குப் பின்னர் ஒரு பக்தர் இந்த நர்த்தன பாலகிருஷ்ணன் விக்ரகத்தைச் செய்து வைத்து, அதில் நாராயண தீர்த்தருடைய உருவத்தையும் பதித்திருக்கச் செய்திருக்கலாம் அல்லவா?

நானூறு வருடங்களுக்குள் வாழ்ந்த ஒரு மகானுக்கு ஆதாரபூர்வமான வாழ்க்கை வரலாறு கிடைக்காமல் இருப்பதும், அன்னார் மறைந்த விதமும் மறைந்த இடமும் விவாதத்திற்குரியவையாக இருந்து வருவதும் துரதிர்ஷ்டவசமானதே. நான் படித்தறிந்த விவரங்களும் கேட்டறிந்த விவரங்களும் எனக்கு முழு திருப்தியை அளிக்கவில்லை.

வரகூர் ஆலய மண்டபத்தின் தூண் ஒன்றில் நாராயண தீர்த்தருடைய உருவம் பொறிக்கப்பட்டிருப்பதாக முதன் முறை அங்கு சென்ற போது கூறினார்கள். அச் சிற்பம் தூணின் கீழ்ப்பகுதியில் இருந்ததாலும் இருட்டாக இருந்ததாலும் அப்போது சரியாகப் பார்க்காமல் வந்து விட்டேன். உறியடி உற்சவத்திற்குச் சென்றபோது கூர்ந்து கவனித்தேன். அது சந்நியாசி ஒருவரின் உருவம் மாதிரி இல்லை. கையில் தண்டம் இல்லை. அது மட்டுமல்ல; சாதாரணமாக யதிகளுடைய சிற்பங்கள் கரம் குவித்து நமஸ்காரம் செய்வது போலவோ, அல்லது தியானத்தில் அமர்ந்திருப்பது போன்றோ இருக்கும். ஆனால், இங்கு யோகீச-

வரர் ஒருவர் ஒற்றைக் காலில் தவம் செய்வது போலிருக்கிறது இது நாராயண தீர்த்தர்தானா அல்லது வேறு யாராவதா என்பது குறித்துச் சிற்ப ஆராய்ச்சியாளர் யாராவது எனக்குத் தெரிவித்தால் நலமாகியிருக்கும்.

# அகரப்பேட்டை

திருக்காட்டுப்பள்ளியிலிருந்து தோகூர் செல்லும் பஸ் பாதையில், நேமத்தை அடுத்த அகரப்பேட்டை என்ற சிற்றூர் இருக்கிறது. அங்குள்ள சிவன் கோயிலில் ஸ்ரீ ஏகாம்பரேச்வரர் எழுந்தருளியிருக்கிறார். அம்பாளின் திருநாமம் காமாட்சி. ரங்கநாதபுரம் கோயிலிலும் அன்னை காமாட்சி தான் அருளாட்சி புரிகிறாள்.

அம்பாள் சிறிய மூர்த்தி. கண்கவர் தோற்றம். கருணை பொழியும் திருமுகம். வாரி வாரி வழங்கும் வரப்பிரசாதி என்று வாயாரப் புகழ்கிறார் அங்குள்ள இளைய குருக்கள். வறுமையால் வாழ்க்கை வெறுத்துப் போய் அர்ச்சகர் தொழிலையே விட்டு ஓடிவிடலாம் என்று எண்ணியபோது வாழ வழிகாட்டி, ஓரளவு மன அமைதியை அளித்திருப்பவள் ஸ்ரீ காமாட்சிதேவி என்கிறார் அவர். பேச்சில் உறுதியான நம்பிக்கை இழையோடுகிறது.

மூலசந்நிதி மேற்கு பார்த்திருக்கிறது. உள்மண்டபத்தில் ஒரு கணபதியும் சுப்ரமணியரும் இருக்கின்றனர். தென்மேற்கு மூலையில் தனியே ஒரு விஷ்ணுமூர்த்தியும் காணப்படுகிறது.

காவிரியாற்றின் சீற்றத்தால் இப்பகுதியைச் சுற்றிலுமுள்ள சிலகிராமங்களும் கோயில்களும் அழிந்து மண்ணோடு மண்ணாகியுள்ள செய்திகளை முன்பு அறிந்தோம்.

வயல்களின் நடுவே, திட்டுத்திட்டாக எழும்பியுள்ள மணல் மேடுகள் அந்த அழிவின் சின்னங்களாக இன்றும் காட்சி தந்து கொண்டிருப்பதைக் காணலாம்.

வெள்ளக் கொடுமையால் கோயில்கள் பாதிக்கப்பட்டது அந்தக் காலத்தில் மட்டும்தானா? இன்றும் நடக்கிறது. இதோ, இந்த அகரப்பேட்டை சிவன் கோயிலின் மதிற் சுவர்கள், 1969-ல் கரையை உடைத்துக் கொண்டு பாய்ந்து வந்த வெள்ளத்திற்கு இரையாகியிருப்பதைப் பார்க்க முடிந்தது. பிராகாரத்தினுள்ளும் புகுந்து கணபதி, சுப்பிர மணியர் சந்நிதிகளையும் அடியோடு பெயர்த்துப் போட்டு விட்டுப் போய் விட்டது அந்தப் பொல்லாத வெள்ளம். இவற்றையெல்லாம் மீண்டும் கட்டித் திருப்பணிகள் செய்யவேண்டும். அதற்கு அன்னை காமாட்சிதான் கண் திறக்கவேண்டும்.

கோயிலுக்கு மேற்கே ஒரு பெரிய குளம் இருந்திருக் கிறது. அந்த இடம் தற்போது பள்ளமாக உள்ளது. முன்பு இந்தக் கோயில் நான்கு பர்லாங் தொலைவிலுள்ள பானை மேடு என்ற இடத்தில் இருந்ததாகக் கூறப்படுகிறது.

அகரப்பேட்டைக்குள் நுழைந்ததும் சிவன் கோயிலைத் தரிசிக்கலாம். அரை கிலோ மீட்டர் உள்ளே சென்றால் பெருமாள் கோயிலைத் தரிசிக்கலாம். அங்கு ருக்மிணி சத்தியபாமா சமேத ஸ்ரீ வேணுகோபால சுவாமி உறை கிறார். முன் மண்டபத்திலிருந்து ஐந்தாறு படிகள் உயரத் தில் கருவறையிருக்கிறது கருட மண்டபத்தில் கணபதியும் சிறிய ஆஞ்சநேயமூர்த்தியும் இருக்கின்றனர். பின்னமாகிப் போன பழைய மூலவர், பிராகாரத்தில் மதிற்சுவரோரமாக மண்ணில் பாதி புதைந்திருக்கிறார். அருமையான சிற்பம்.

இந்தக் கோயிலில் ஐந்து வருடங்களுக்கு முன் கும்பாபிஷேகம் நடைபெற்றிருக்கிறது. காவேரிக்கு வட கரையிலுள்ள கோவிலடி ஆலயத்தின் பிரும்மோற்சவத்தின்

போது, பெருமாள் ஆற்றைக் கடந்து வந்து இங்கே ஓர் இரவு தங்கிவிட்டுக் செல்கிறார்.

## பழமார்நேரி

நேமம், ரங்கநாதபுரம், பழமார்நேரி—மூன்று கிராமங்களும் முக்கோணம் போல அமைந்துள்ளன. ரங்கநாதபுரத்திலிருந்து மெயின் ரோடுக்கு வந்து கிழக்கு நோக்கி ஒரு பர்லாங்கு சென்றால் இடப்புறம் ஒருசிறு கோயில் இருக்கும். அது பால ஆஞ்சநேய சுவாமி ஆலயம். முக்கால் அடி உயரமேயுள்ள மிக மிக சுந்தரமான மூர்த்தி. சுசீந்தரம் ஆஞ்சநேயரையும், நாமக்கல் ஆஞ்சநேயரையும், கர்நாடகத்திலுள்ள முல்பாகல் ஆஞ்சநேயரையும் பார்த்துப் பயபக்தியோடு ஒதுங்கி நிற்போம். ஆனால், இவரையோ, உரிமையோடு தடவிக் கொடுத்து, கொஞ்சி மகிழ வேண்டும் போல் தோன்றும். அந்தப் பக்கமாகப் போகிறவர்கள் அவரைத் தரிசிக்காமல் போவதில்லை.

இந்த பால ஆஞ்சநேயருக்கு நேரே, பழமார்நேரி கிராமத்துக்குச் செல்லும் மண் பாதை பிரிகிறது.

அந்தக் கிராமம் தோன்றியது பற்றி ஒரு கதை கூறப்படுகிறது.

சுமார் முந்நூறு வருடங்களுக்கு முன் முல்லைக் குடியில் வசித்து வந்த அந்தணர்கள், தங்களது நித்திய அனுட்டானங்களுக்காக இவ்வழியே காவிரிக்கு வந்து போவது வழக்கம். ஒரு சமயம் பத்துப் பதினைந்து அந்தணர்கள் ஸ்நானத்திற்காக ஆற்றுக்குச் சென்று கொண்டிருந்த போது அப்போது தஞ்சையை ஆண்டு வந்த மகாராஷ்டிர மன்னன் குதிரையில் சென்று கொண்டிருந்தான். அவர்கள்

ஒதுங்கி நின்று வலக் கரம் உயர்த்தி மன்னனை வாழ்த்தினார்கள். ஒருவர் மட்டும் இடக் கையால் ஆசீர்வதித்தாராம். இதைக் கண்டு சற்றுத் துணுக்குற்ற அரசன், குதிரையினின்றும் கீழே இறங்கி. காரணத்தை விசாரித்தான். அதற்கு அந்த அந்தண சிரேஷ்டர் ''மன்னா. என் வலது கையில் அக்னியிருக்கிறது. அதைத் தூக்கி உன்னை ஆசீர்வதித்தால் நீ தீக்கிரையாகி விடுவாய். அதனால் இடக் கையைப் பயன்படுத்தினேன்'' என்று கூறினார்.

இவர் கூறியதைச் சோதிக்க எண்ணினான் மன்னன். நிரூபித்துக் கட்டுவதாகக் கூறிய அந்தணர், ஒரு மெல்லிய துணியை எடுத்து மன்னனிடம் தந்து, அதைக் கையில் பிடித்துக் கொள்ளும்படி கூறி, அதற்கு நேரே தமது வலக் கரத்தை உயர்த்தினார். அடுத்த கணம் அந்தத் துணி தீப்பற்றிக் கருகிப் போயிற்று. ஆச்சரியமடைந்த மனனன் அந்தணரின் காலில் விழுந்து வணங்கி,தேவையானவற்றைக் கோரும்படி கூறினான். முல்லைக்குடியிலிருந்து காவிரிக்கு வந்து போவது கடினமாயிருப்பதால் அங்கேயே ஒரு சிறு கிராமம் ஏற்படுத்தித் தரவேண்டும்என்று அவர்கள் கேட்டுக் கொண்டனர். அவர்களது கோரிக்கையை நிறைவேற்றித் தந்த அரசர் அங்கு ஒரு சிவன் கோவிலையும், பெருமாள் கோயிலையும் கட்டித் தந்தார்.

அபிராமி உடனுறை ஸ்ரீசுந்தரேச்வரர் ஆலயம் மிகவும் சிதிலமடைந்திருக்கிறது. கடைசியாக எப்போது திருப்பணி செய்து குடமுழுக்குச் செய்விக்கப்பட்டது என்பது தெரியவில்லை. ஸ்ரீநடராஜாவுக்குத் தனி சந்நிதி இருக்கிறது. ஆனால், விக்ரகம் பெருமாள் கோயில் பாதுகாப்பாக வைக்கப்பட்டிருக்கிறது.

கோயிலுக்கு வெளியே நுழைவாயிலை யொட்டினாற் போல் அமர்ந்த கோலத்தில் திருமாலின் கற்சிலையொன்று

வைக்கப்பட்டிருக்கிறது. அதன்மீது படிந்துள்ள புழுதியைப் பார்த்தால் அநேக வருடங்களாக வெயிலில் காய்ந்தும், மழையில் நனைந்தும் அது அங்கேயே கேட்பாரற்று இருப்பது புரிகிறது.

அருகில் ஓடும் வாய்க்காலைத் தோண்டும்போது கிடைத்த சிலையாம் அது. யாரோ அங்கு கொண்டு வந்து வைத்திருக்கிறார்கள். அன்று முதல் அங்கேயே இருக்கிறது. மூக்கில் மட்டும் சற்று பின்னப்பட்டிருக்கிறது. கடப்பாரை பட்டு மூளியாயிருக்குமோ என்னவோ; மற்றபடி மிக உன்னதமான மூர்த்தி அது. கிராமத்தின் மத்தியில், சிவால யத்தின் நுழைவாயிலில் இப்படியொரு மூர்த்தி தொடர்ந்து இருந்து வருவதைக் குறித்துக் கிராம மக்கள் மறுபரிசீலனை செய்ய வேண்டும். கைதேர்ந்த சிற்பி ஒருவரை வரவழைத்து மூக்கை மட்டும் பழுது பார்த்துவிட்டு, அவருக்குத் திருக் கோயில் அமைப்பது பற்றியோ, அல்லது பெருமாள் கோயிலில் எழுந்தருளச் செய்வது பற்றியோ ஆகம பண்டி தர்களிடம் கலந்தாலோசிக்கலாம். அந்த கல் விக்ரகம் முன்பு பூஜைக்குரியதாக இருந்ததா, இல்லையா என்பது தெரியாவிட்டாலும், இத்தனை பெரிய, இத்தனை சிறப்பு மிக்க தெய்வச் சிலைக்கு உரிய மரியாதையைச் செய்ய நாம் கடமைப்பட்டிருக்கிறோம்.

அநேகமாக இவர் ஸ்ரீ அனந்தபத்மநாப சுவாமியாக இருக்கலாம் என்று தோன்றுகிறது. செந்தலைப் பெருமாள் கோயில மூலவர் இந்த மூர்த்தியைப் போன்று இருப்பதாக என் நினைவு.

நின்ற திருக்கோலத்தில் திருமாலின் மற்றொரு பெரிய சிலை ஸ்ரீ வரதராஜப் பெருமாள் கோயிலின் வெளிப் பிரா காரத்தில் தனியாக நிற்க வைக்கப்பட்டிருக்கிறது. அதுவும் ஓரிரு இடங்களில் பின்னப்பட்டுப் போயிருக்கிறது.

ஏனோ தெரியவில்லை, பழமார்நேரியை நினைக்கும் போதெல்லாம் இவ்விரு திருமால் சிலைகளும் என மனத்தில்

நிழலாடுகின்றன. தெரிந்தோ தெரியாமலோ தெய்வக் குற்றங்கள் நிகழாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது நம் பொறுப்பல்லவா?

கண்டியூரிலிருந்து தோகூர் செல்லும் பஸ் பாதையில் திருக்காட்டுப்பள்ளி இருக்கிறது. அதற்கு முன்பே கண்ட மங்கலம், செந்தலை; அவற்றுக்குச் சற்று தெற்கே வரகூர். வரகூருக்குச் செல்லும் பாதை பிரிவதற்கு முன்பு நடுக் காவேரி, கோனேரிராஜபுரம், கருப்பூர் என்று சிறு சிறு கிராமங்கள் இருக்கின்றன, அக்கிராமங்களுக்குத் திரும்ப வேண்டிய இடங்களில் தெளிவான பெயர்ப் பலகைகள் இல்லாததை ஒரு குறையாகச் சொல்லித்தான் ஆக வேண்டும். புதிதாக வருபவர்களுக்கு இந்தப் பலகைகள் பெரும் உதவியாயிருக்குமே! இதே போல் பழமார்நேரி, ரங்கநாதபுரம், நேமம், அகரப்பேட்டை, இளங்காடு முதலிய கிராமங்களுக்கும் பெயர்ப் பலகைகள் போடப்பட வேண்டும். அங்கெல்லாம் இருக்கும் கோயில்களைப் பற்றிய சிறிய குறிப்பு ஒன்றும் இருக்க வேண்டும். சுதந்திரம் கிடைத்து இத்தனை ஆண்டுகள் ஆகியும் பல கிராமங்களில் சீரான பாதை வசதிகள் இல்லை; குடிநீர் இல்லை! போக்கு வரத்துஇணைப்பு இல்லை. போகட்டும். ஒவ்வொரு கிராமத் திற்கும் ஒரு பெருமை, ஒரு மகிமை, ஒரு வரலாறு, ஒரு புராணம். ஒரு தனிச் சிறப்பு இருக்கிறது. இவற்றைப் பற்றி வெளிமாவட்டங்களைச் சேர்ந்தவர்கள் அறிந்து கொள்வதற்கு முன் அந்த மாவட்டத்திலுள்ளவர்களாவது அறியும்படி செய்ய வேண்டாமா?

## கருப்பூர்

குடந்தைக்கு அருகிலுள்ள கோனேரிராஜபுரம் வாசிகள் எத்தனை பேருக்கு வரகூருக்கருகிலுள்ள கோனேரி

ராஜபுரத்தைப் பற்றித் தெரியும்? குடந்தைக்கு அருகிலுள்ள கருப்பூர் வாசிகளுக்கு இங்கேயும் ஒரு கருப்பூர் இருக்கிறது என்பது தெரிய வேண்டாமா? தங்களூர் ஆலயத்தைப் பற்றிப் பெருமைப்பட்டுக் கொண்டு இருப்பவர்களுக்கு, இந்தக் கருப்பூரில் ஒரு சிவாலயம் பாழடைந்து கிடப்பது தெரியுமா?

அதோ தெரிகிறதே, அது ரூஃப் கார்டன் அல்ல! ஒரு சிவாலயத்தின் மீது மரம், செடிகள் வளமுடன் தழைத்திருக்கும் காட்சி! மண்டபங்கள் இடிந்து போய், கருங்கல் பாளைகள் இற்று விழுந்து கொண்டிருக்கின்றன. பூஜைகள் நின்று போய் எத்தனை வருஷங்கள் ஆயிற்றோ? கோயில் பிராகாரமெல்லாம் உழப்பட்டு, பண்படுத்தப்பட்டு அங்கே ஒரு காய்கறித் தோட்டம் உருவாக்கப்பட்டிருக்கிறது, அந்த வருமானம் கோயிலுக்குப் போய்ச் சேருகிறதாம்! ஆனால் கோயில் இயங்குவதாகத் தெரியவில்லை!

முன்பு கோயிலாக இருந்த தோட்டத்தில் ஓர் அம்மன் சந்நிதியுமிருக்கிறது. அதுவும் பாழாகிக் கிடக்கிறது. சற்றுத் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு உள்ளே சென்று பார்த்தாலோ அம்மன் சிலை பீடத்தோடு பெயர்க்கப்பட்டு மூளியாகக் கீழே சாய்ந்து கிடப்பது தெரிகிறது. அது அண்மையில் நிகழ்ந்ததாக தோட்டத்தின் மேற்பார்வையாளர் கூறினார். தெய்வச் சிலைகள் பெயர்க்கப்படுவதற்கும், சிவலிங்கங்கள் அகற்றப்படுதற்கும் காரணம், அடியில் நவரத்தினங்களும் தங்கத் தகடுகளும் கிடைக்கலாம் என்ற பேராசையாம். வேறு சில கோயில்களில் சிலைகள் பெயர்க்கப்பட்டிருப்பதைப் பற்றி விசாரித்த போதும் இம்மாதிரியான செய்தி காதில் விழுந்தது. அதைத் தொடர்ந்து நெஞ்சில் பலத்த அடி விழுந்தது! வேதனை தாங்காமல் துடித்துப் போனோம்.

அம்மனின் திருநாமம், சுகந்த குந்தளாம்பாள். இத்தனை அழகான பெயர் கொண்ட அம்பிகை எத்தனை

கோரமாக விழுந்து கிடக்கிறாள்! சுவாமியின் திருநாமம் விஜயவிடங்கேச்வரர். அவர் எத்தனை கனமான அந்த காரத்தில் மூழ்கிருயிக்கிறார்! அகிலத்தின் அம்மைக்கும் அப்பனுக்கும் ஏன் இந்த கதி? இதற்கு யார் பொறுப்பு? ஆலயத்தின் சரித்திரப் பின்னணி என்ன? திருத்தலப் பெருமையென்ன?

ஆலயங்களை நிர்வகிக்கும் பொறுப்பேற்றிருப்பவர்கள் வளம் கொழிக்கும் ஆலயங்களைத்தான் சுற்றி வர வேண்டுமா? வசதியும் வாழ்வும் இழந்த 'ஊனமுற்ற' கோயில்கள் பக்கம் அவர்கள் கண் பார்வை திரும்பாதா?

இந்த அழிவுச் சின்னத்திற்கு நேர் எதிரே குடமுருட்டி ஆற்றங்கரையில் முருகப் பெருமான் ஆஸ்பெஸ்டாஸ் கூரையின்கீழ் குடியிருந்து வருகிறார். ஐம்பது ஆண்டுகளுக்கு முன் தோன்றிய கோயில். பங்குனி உத்தரம் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. சப்பாணி ராஜா என்ற க்ஷத்திரியர் அதை நிர்வகித்து வருகிறார். அதைச் சீர்படுத்தி. கும்பாபி ஷேகம் செய்ய வேண்டும் என்று முயன்று கொண்டிருக் கிறார். அக் கோயிலுக்குக் கிழக்கே பெரிய ஐயனார் கோயில் ஒன்றிருக்கிறது. குடமுருட்டி ஆற்றின் ரம்மியமான சூழல் அந்த இடத்திற்கு மேலும் எழில் கூட்டுகிறது.

கருப்பூரின் பழைய பெயர் 'வண்டிக்காரன் பேட்டை.' இங்கு குடியேறிய மக்கள், முதன் முதலில் தென் கிழக்கே முக்கால் மைல் தொலைவிலுள்ள பல்லவ ராஜபுரம் என்ற ஊரில் வசித்து வந்தார்கள். அக்காலத்தில் அங்கு தீவட்டிக் கொள்ளைக்காரர்களின் கொடுமை தாங்க முடியாமல் மக்கள் அவதியுற்றனர். ஆண்டவனைத் தவிர அவர்களுக்கு வேறு துணையில்லை; பிரார்த்தனையைத் தவிர வேறு வழியில்லை!

ஒருநாள் கிருஷ்ணபரமாத்மாவின் புத்ரனான 'கருப் பண்ணசுவாமி'யின் மரத்தாலான பிம்பம் ஒன்று

குடமுருட்டி ஆற்றில் மிதந்து வந்தது. பல்லவராஜபுரத்தி லுள்ள சிலரது கனவில் சுவாமி தோன்றி, 'நான் ஒதுங்கி யுள்ள இடத்தில் (வண்டிக்காரன்பேட்டை) எனக்கு ஒரு கோயில் அமைத்து, என்னருகில் நீங்கள் குடியேறி என்னை வழிபட்டு வந்தால், காவல் தெய்வமாக இருந்து உங்களைக் காப்பாற்றுகிறேன்' என்று கூறினாராம். பல்லவராஜ புரத்து மக்கள் அவ்வாறே கோயில் அமைத்து, சிலையை பிரதிஷ்டை செய்து வண்டிக்காரன் பேட்டைக்குக் குடி பெயர்ந்து கருப்பண்ணசுவாமியின் கருணையை நினைந் துருகி, ஊர்ப் பெயரையும் கருப்பூர் என்று மாற்றினர்.

இதற்குப் பிறகு, திவட்டிக் கொள்ளைக்காரர்கள் கோயிலருகே வந்தபோது அவர்களது குதிரைகள் நகர மறுத்தனவாம். அவர்களும் கண் பார்வையிழந்தார் களாம். அப்போது அக்கூட்டத்தின் தலைவன், 'இனி கருப்பூரில் ஓர் இரும்பு ஊசி திருட்டுப் போனாலும் தங்க ஊசி தருவோம்' என சத்தியம் செய்தானாம். அதற்குப் பிறகே அவர்களுக்குப் பார்வை மீண்டதாம்; குதிரைகளும் நகரத் தொடங்கினவாம். அன்றிலிருந்து அக் கிராம மக்கள் கொள்ளைக்காரர்களின் தொந்தரவின்றி வாழத் தொடங்கினர்.

அன்றிலிருந்து இன்றுவரை கருப்பு சுவாமி அக் கிராம மக்களின் நலனைக் கண்ணிமை போல் காத்து வருகிறார். எவ்வித வேற்றுமையுமின்றி அப்பகுதி மக்கள் இவரை வழி பட்டு வருகின்றனர். வெள்ளிக்கிழமைகளில் கூட்டம் அதிகம்.

குடமுருட்டி ஆற்றங்கரையில் உள்ள ஐயனார் கோயி லுக்குள் தனிச் சந்நிதி கொண்டிருக்கும் இத் தெய்வம் மாமரத்தடியில் உறைவதால், 'மாவடியான்' என்றும், 'மாவடி கருப்பு' என்றும் அழைக்கப்படுகிறார். ஐயனார் கோயில் என்பதை விட 'மாவடியான் கோயில்' என்றால் தான் அப்பகுதியில் புரியும். கருப்பூரில் மாவடியான்

கருப்பையா, கருப்பண்ணன் என்ற பெயர்கள் சர்வ சாதாரணம்.

சுவாமி வலக்கையில் வாளும், இடக்கையில் கதையும் வைத்திருக்கிறார். ஒன்பது படிகள் ஏறிச் செல்ல வேண்டும். எதிரில் குதிரையிருக்கிறது. பங்குனி மாதம் திருவிழா ஆனால், மிகச் சிறப்பாக நடைபெற்று வந்த தேர்த் திருவிழா பலவருடங்களாக நடைபெறாமல் இருப்பது அவ்வூர் மக்களுக்கு ஒரு பெருங்குறைதான்.

கருப்புசுவாமிக்கு வலப்புறம் தெற்கு நோக்கி மதுரை வீரனும், தென்மேற்கில் பாலசாஸ்தாவும் கோயில் கொண்டிருக்கின்றனர்.

ஊருக்குள் ஸ்ரீநிவாசப் பெருமாள் கோயில் உள்ளது. ஸ்ரீதேவி, பூதேவியுடன் ஸ்ரீநிவாசரும், ருக்மிணி—சத்திய பாமாவுடன் கூடிய நவநீத கிருஷ்ணனும் உற்சவமூர்த்திகளாக எழுந்தருளியுள்ளனர்.

முன்பெல்லாம் ஸ்ரீநிவாசர்தான் புறப்பாடாகிக் கொண்டிருந்தாராம். அவர் வீதியில் புறப்படும்போதெல்லாம் ஊரில் தீ விபத்து ஏற்பட்டதாம். அதற்குப் பிறகு, அரண்மனையிலிருந்து நவநீத கிருஷ்ணனை இங்கே எழுந்தருளச் செய்தார்கள். அதன் பீடத்தில் 'வைகானஸ கருப்பூர்' என்று பொறிக்கப்பட்டுள்ளது. இந்த ஊரைச் சேர்ந்த பகவான் எப்படியோ தஞ்சை சென்று, சிறிது காலம் அரண்மனை வாசம் செய்து விட்டு, இங்கேயே திரும்பி வந்து விட்டார்.

இந்தக் கோயிலில் விகனஸ மகரிஷிக்குத் தனிச் சந்நிதியும், உற்சவமூர்த்தியும் இருப்பது ஒரு சிறப்பாகும் ஸ்ரீமந் நாராயணனின் மானசிகப் புத்திரராகக் கருதப்படும் இந்த ஆசாரியருக்கு ஒரு சில கோயில்களில்தான் திருச்சந்நிதியிருக்கிறது. ஸ்ரீமந்நாராயணனாய் உபதேசிக்கப்பட்டு, வேத தர்மத்திற்கும் மந்திரத்திற்கும் உட்பட்ட வைகானஸ

மதத்தை நிறுவியவர். தெய்வாராதனத்திற்கு வழி முறைகள் வகுத்தத் தரும் வைகானஸ ஆகமத்தை அருளியவர். வைகானஸ குலத்தில் பிறந்தவர்களுக்கு சங்கு, சக்ரதாரணம் செய்யப்படுவதில்லை. அவர்கள் கர்ப்ப வைஷ்ணவர்களாகக் கருதப்படுகிறார்கள்.

வைகானஸ ஆகமத்தைச் சேர்ந்த முப்பது அர்ச்சகர் குடும்பங்கள் கருப்பூர் கிராமத்தில் இருக்கின்றன. ஆனால் 'நாங்கள் அதிகமாகக் கோயில் பணியில் ஈடுபடுவதில்லை. என்ற உண்மையை லட்சுமண பட்டாச்சாரியார் சற்று வருத்தத்துடனேயே ஒப்புக்கொண்டார்.

ஆவணி திருவோணம் விகனஸரின் திருநட்சத்திரம். அத்திருவிழா இக்கோயிலில் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. வசூல் செய்து, முன்னின்று ஆசாரியரின் உற்சவத்தை நடத்தி வருபவர்கள் 'ஐவர் குழு' என்ற சங்கம். அந்த இளைஞர்களுக்குத் தலைவர் ராம கிருஷ்ணன். பெரிய மீசையாக வைத்துக் கொண்டிருந்தாலும் மிருதுவானஇதயமும் பக்தியுள்ளமும் படைத்தவர். அவரது தலைமையை ஏற்றுச் செயலாற்றும் ஆற்றல் படைத்த இளைஞர் படையுடன் அவர் கோயிலுக்கு வந்திருந்தார்.

அவர்களோடு பேசிக் கொண்டிருந்தேன். ''நீங்கள் ஆண்டுக்கொரு முறை ஸ்ரீசாரிய கைங்கரியம் செய்தால் போதாது. வருடம் பூராவும் கோயிலுடன் தொடர்பு வைத்துக் கொள்ள வேண்டும். முதல் பணியாக, கோயில் பிராகாரத்தில் இருக்கும் முட்புதர்களை அகற்றுவதற்கு முயலுங்கள். பக்தர்கள் சௌகரியமாகப் பெருமாளை வலம் வருவதற்கு உதவி புரிந்தால் ஆண்டவன் மகிழ்வான்'' என்றேன். அப்பணியை உடனேயே மேற்கொள்வதாக அவர்கள் மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொண்டார்கள்.

# கோனேரிராஜபுரம்

கருப்பூரை அடுத்த கோனேரிராஜபுரத்திலும் மிகவும் பாழடைந்த நிலையில் ஒருசிவாலயம் இருப்பதைக் கண்டோம். இது பஸ் பாதையின் அருகாமையிலேயே இருக்கிறது. நைந்துபோன தென்னங்கீற்றுக் கூரையுடன் கூடிய முன் மண்டபத்தில், மூளியான பிரும்மாவும் திருமாலும் காட்சி தருகிறார்கள். நந்தி நன்றாக உள்ளது. கருவறையில் மீனாட்சி சுந்தரேச்வரர், 'யார் கண்ணிலாவது படமாட்டோமா, நம் கோயிலுக்கு ஒரு வழி பிறக்காதா?' என்று எல்லையற்ற பொறுமையுடன் அமர்ந்திருக்கிறார். பாவம், அந்தக் கிராம மக்கள் அவரைக் கவனிப்பதாகத் தெரியவில்லை. எங்களுக்கு வழிகாட்டியாக வந்த கிராமவாசியிடம் 'சிவாலயம் எங்கிருக்கிறது?' என்று கேட்டபோது அவர் விழித்தார். 'இதுவாக இருக்குமோ' என்று முள் வேலிகளை அகற்றிக் கொண்டு போய் தரிசனம் செய்தோம்! உள்ளூர் அன்பரும் தரிசனம் செய்தார்.

கோனேரிராஜபுரத்தில், லட்சுமி நாராயணப் பெருமாள் கோயில் இருக்கிறது. திருக்காட்டுப்பள்ளி பகுதியில் லட்சுமி நாராயணர் கோயில் நிறைய இருக்கின்றன.

உள் மண்டபத்திலுள்ள ஸ்ரீ ஆஞ்சநேயமூர்த்தி எங்களை மிகவும் கவர்ந்தார். தலையில் ருத்திராட்ச மாலை துலங்க, சிவப்பழமாகச் சஞ்சீவி மலையைச் சுமந்து வரும் மாருதியின் கோலம் மறக்க முடியாததாகும்.

கிராமத்தை ஒரு சுற்றுச் சுற்றி வந்தோம். எத்தனை வீடுகள் பூட்டிக் கிடக்கின்றன! எத்தனை வீடுகள் பாழடைந்து சிலமாகிக் கொண்டிருக்கின்றன...!

அநேகமாக எல்லா கிராமங்களிலும் இந்த நிலைதான். கவனிக்க ஆளின்றி நம் இல்லங்கள் பாழாகலாம். தெய்வம் வாழும் இல்லங்களான ஆலயங்களை அப்படி விட்டுவிடுவது தர்மமாகுமா?

# நடுக்காவேரி

அடுத்து நாங்கள் தரிசித்தது. நடுக்காவேரியிலுள்ள வரசித்தி விநாயகர் கோயில். காவேரியின் நடுவில் அல்ல! நடுக்காவேரி என்பது ஒரு கிராமத்தின் பெயர்!

அந்தக் கோயில் பஸ் பாதையை யொட்டியே இருக்கிறது. இந்தக் கோயிலில்தான் ஸ்ரீநாராயண தீர்த்த ஓரிரவு தங்கியிருந்ததாகவும், விடியற்காலை வராகம் ஒன்று அவர் முன்தோன்றி முன்னே நடக்க, அதைப் பின் தொடர்ந்து அவர் வரகூருக்குச் சென்று ஸ்ரீ வேங்கடேசப் பெருமாளாமல் ஆட்கொள்ளப்பட்டராம்.

நடுக்காவேரி கிராமத்தில் ஸ்ரீ லட்சுமி நாராயணப் பெருமாளே திருச்சந்நிதி கொண்டிருக்கிறார். வரகூர் மாதிரி சிறிய மூர்த்திதான், ஸ்ரீதேவி, பூதேவியுடன் ஸ்ரீநிவாசப் பெருமாள் உற்சவ மூர்த்தியாகத் திகழ்கிறார்.

கருப்பூர் லட்சுமண பட்டாச்சாரியார் இங்கு அர்ச்சகராகப் பணிபுரிகிறார். சைகிளில் வேகமாகக் கருப்பூருக்குப் பறந்து வந்து தரிசனம் செய்து வைத்ததோடு, ஆலயத்தைப் பற்றியும் நடுக்காவேரி பக்தர்கள் பற்றியும் வாயாரப் புகழ்ந்து பேசினார். அக்கிராமத்திலுள்ளவர்கள் தவறாமல் ஆலயத்திற்கு வருவதாகவும், அதனாலேயே கோயில் ஒளி

நிறைந்து சாந்நித்தியம் பெற்றுத் திகழ்வதாகவும் அவர் கூறியது நூற்றுக்கு நூறு உண்மையான பேச்சு.

ஓர் ஆலயத்திற்கு அதிக சொத்துக்கள் இருக்கவேண்டும் என்ற அவசியமில்லை. படாடோப ஆடையலங்காரங்களும் ஆபரண வகைகளுடம் கூடத் தேவையில்லை. எல்லா சந்நிதிகளிலும் பளிச்சென்று விளக்கு எரிய வேண்டும். அங்கு பணிபுரியும் அர்ச்சகர். கால பூஜைகளைச் சிரத்தைக் குறையாமலும், மந்திரப் புனிதம் கெடாமலும் செய்து கொண்டிருக்க வேண்டும். அத்தலகைய கோயில்களுக்குப் பக்தர்கள் நிச்சயம் வந்து போவார்கள். சேவார்த்திகள் தவறாமல் வரும் கோயில்கள் தனிச் சோபை பெற்று விளங்குவதைக் கண்கூடாகக் காணலாம் நடுக்காவேரி பெருமாள் கோயிலில் அச் சிறப்பை நான் கண்டேன்; உணர்ந்தேன்.

கருப்பூரில் விகனஸ மகரிஷிக்கு மூல சந்நிதியும் உற்சவ மூர்த்தியும் இருப்பது போன்று, இங்கு சத்யாஷாட மகரிஷியின் மூல சந்நிதியும், உற்சவ மூர்த்தியும் இருக்கின்றன. இங்கிருக்கும் ஸ்மார்த்தர்கள் அனைவரும் இந்த சத்யாஷாட சூத்திரத்தைச் சேர்ந்தவர்கள். ஆண்டுதோறும் இவர் சந்நிதியில்தான் பூணூல் அணிந்து கொள்கிறார்கள். ஆவணி அவிட்டத்தன்று இவரது உற்சவமூர்த்தி வீதி புறப்பாடாகிறது. வீதியிலுள்ள எண்பது குடும்பத்தினரும் இந்த உற்சவத்தில் மிக உற்சாகத்துடன் பங்கு கொள்கிறார்கள்.

சத்யாஷாட மகரிஷியின் மூலமூர்த்தி சந்நிதி சிவன் கோயிலில் இருக்கிறது. உற்சவமூர்த்தி பெருமாள் கோயிலில் உள்ளது. சிவாலயத்தைச் சேர்ந்த வேறு உற்சவ விக்ரகங்களும் இங்கிருக்கின்றன. இந்த சிவ — வைணவ ஐக்கிய பாவத்தைப் பற்றி முன்பேகுறிப்பிட்டிருக்கின்றேன்.

பெருமாள் கோயிலில் கோகுலாஷ்டமி சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. வரகூரைப் போன்று உறியடி உற்சவமும் நடைபெற்று வருகிறது.

இப்பகுதியில் அநேகமாக எல்லா பெருமாள் கோயில்களிலும் முன்காலத்தில் உறியடி, வழுக்கு மரம் முதலிய உற்சவங்கள் இருந்திருக்கின்றன. வரகூரில் இன்றும் சிறப்பாக நடைபெற்று வருகிறது; வேறு சில ஊர்களில் அப்பழக்கம் விட்டுப் போகாமல் ஓரளவு நடந்து வருகிறது. அவற்றில், குடமுருட்டிக்கு அக்கரையிலுள்ள விஷ்ணம்பேட்டை கிராமமும் ஒன்று.

பெருமாள் கோயில் போன்று சிவன் கோயிலும் நல்ல முறையில் பராமரிக்கப்பட்டு வருகிறது. சுவாமி, ஹரிபிரும மேச்வரர், (அசாதாரணப் பெயர்) அம்பாள். சௌந்தர்ய நாயகி. சத்யாஷாட மகரிஷியின் மூல மூர்த்தி மேற்குப் பிராகாரத்தில் கிழக்கு நோக்கி இருக்கிறது. நவக்கிரகம், பிள்ளையார். சுப்ரமணியர், கஜலட்சுமி சந்நிதிகளும் இருக்கின்றன.

சிறிய, அழகிய ராஜகோபுரம் கண்ணுக்கு விருந்தாக உள்ளது. ஆனால், ஒரு குறை. பதினைந்து ஆண்டுகளுக்கு முன் அற நிலையப் பாதுகாப்புத் துறையினர் இக்கோபுரத் திருப்பணியைத் தொடங்கி, முடித்தும் விட்டார்கள். என்ன காரணமோ தெரியவில்லை. இந்நாள்வரை குடமுழுக்கு நடை பெறாமலே இருக்கிறது. விமானங்கள் பழுதடைந்திருக்கின்றன. அவற்றிலுள்ள வடிவங்களும் பின்னமாகியிருக்கின்றன. இவற்றைப் பழுதுபார்த்துச் சீக்கிரத்திலேயே கும்பாபிஷேகம் செய்துவிட வேண்டும் என்று நடுக்காவேரி கிராம மக்கள் துடியாய்த் துடித்துக் கொண்டிருக்கிறார்கள்.

நடுக்காவேரியில் மற்றொரு சிவன் கோயிலும் இருக்கிறது. அது ஆற்றங்கரை ஓரமாக இருக்கிறது. ஆனால், பழைய கட்டடம் இடிந்து போய் விட்டதால். அடிவரை பிரித்துவிட்டுக் கருவறையிலிருந்து புதிதாக நிர்மாணித்துக் கொண்டிருக்கிறார்கள். காளகண்டேச்வர சுவாமியையும் அமிர்தவல்லி அம்பாளையும் தனி கொட்டகையில்

பாலாயம் செய்து வைத்திருக்கிறார்கள். சுவாமி விமானத்தில் பெரிய செடிகள் முளைத்து விட்டதாலும், அருகிலிருந்த அரச மரத்தின் வேர் அடியில் பாய்ந்துவிட்டதாலும் இந்தக் கோயில் சிலமாய் விட்டிருக்கிறது. வைத்தீச்வரன் என்பவர் முனைந்து திருப்பணிக் கமிட்டி அமைத்து, நாற்பதினாயிரம் ரூபாய் எஸ்டிமேட்டில் பணியைத் தொடங்கியிருக்கிறார். ஏழாயிரம், எட்டாயிரம் ரூபாய்தான் வசூலாகியிருக்கிறதாம். இக்காலத்தில் ஒரு கோயில் கட்டுவது என்றால் எளிதான காரியமா? அதுவும் ஒரு சிறு கிராமத்தில் நிதி திரட்டுவது முடிகிற காரியமா? பெரிய மனம் படைத்தவர்கள் இப் பெரிய பணிக்கு உதவ முன்வர வேண்டும். முடிந்தவர்களெல்லாம் முடிந்த அளவு உதவி செய்து, புண்ணிய மூட்டைகளைக் கட்டிக் கொண்டு செல்லலாம்!

காளகண்டேச்வரர் கோயிலுக்குச் சற்று வடக்கே, ஆற்றங்கரையின் வெகு அருகில் பிரசன்ன விநாயகர் கோயில் இருக்கிறது. அது பழுதடைந்திருக்கிலது. ஆற்றோரமாக இருந்தும் வெள்ளக் கொடுமைகளிலிருந்து தப்பித்து, அது இந்த அளவுக்கு ஒரு கோயிலாக நின்று கொண்டிருப்பதே ஓர் அதிசயம்தான்.

இந்த கணபதியைத் தவிர, பஸ் பாதையிலேயே வலப்புறம் சற்று உயர்வான பகுதியில், இரட்டைப் பிள்ளையார் கோயில் ஒன்றிருக்கிறது. அவருக்குப் பக்கத்தில் கருப்புசாமி தனிச் சந்நிதியில் எழுந்தருளியிருக்கிறார். முன்னால் ஓர் அழகிய குதிரை இருக்கிறது. வெள்ளக் கொடுமை காரணமாக இக் கோயில் இடிந்து போய் மூலமூர்த்தி மட்டும் இருந்திருக்கிறது. பின்னர் தற்போதுள்ள சிறு கோயிலைக் கட்டியிருக்கின்றனர். சித்திரை மாதத்தில் திருவிழா நடைபெறுகிறது.

ஸ்ரீ நாராயண தீர்த்தர் நடுக்காவேரியில் ஒரு விநாயகர் கோயிலில் ஓரிரவு தங்கியிருந்துவிட்டுக் காலையில் கண்

விழித்த போது வராகம் ஒன்று அவர் முன் தோன்ற, அதைப் பின்தொடர்ந்து கொண்டே சென்று வரகூர் ஆலயத்தை அடைந்தார் அல்லவா? அந்த வரசித்தி விநாயகர் கோயில் ஊருக்குள் செல்லும் பாதையில் பஸ் பாதையையொட்டி யுள்ளது. அந்த விநாயகரை முன்பே தரிசித்திருக்கிறோம்

இரட்டைப் பிள்ளையார் கோயிலுக்கு எதிர்ப்புறத்தில் இருக்கும் அரவமடக்கியம்மன் கோயிலின் கருவறையில் சப்த மாதாக்கள் இருக்கிறார்கள். இக்கோயிலின் உற்சவ மூர்த்தி கிராமத்தைச் சேர்ந்த பாலதண்டாயுதபாணி கோயிலில் இருக்கிறது, செல்லியம்மன், கிராமற்தின் மற்றொரு எல்லையம்மனாக எழுந்தருளியிருக்கிறாள். இவ்விரண்டு ஆலயங்களுக்கும் 1976 ஆம் ஆண்டில் குட முழுக்கு செய்திருக்கிறார்கள்,

ஸ்ரீ பாலதண்டாயுதபாணி கோயில் ஊரினின்றும் சற்று ஒதுங்கி இருப்பதாலோ என்னவோ, இதர கோயில்களில் இருக்கும் மனித நடமாட்டத்தை இங்கே காணோம். எதிரில் குவிக்கப்பட்குருந்த வைக்கோற்போரைக் கடந்து உள்ளே சென்றோம் மலைக்குச் செல்லும் ஐப்பன் சாமிகளின் கவர் வேட்டிகள் மண்டபத்தில் காய்ந்து கொண்டிருந்தன. பூட்டியிருந்த கம்பிக் கதவு வழியாக ஸ்ரீ பாலதண்டாயுத பாணியைத் தரிசித்து விட்டு நடுக்காவேரியிலிருந்து விடை பெற்றுக் கொண்டோம்.

## கண்டமங்கலம்

திருக்காட்டுப்பள்ளிக்கும் செந்தலைக்கும் இடையே கண்டமங்கலம் என்ற கிராமம் உள்ளது. ஒரு சிற்றூர் என்றே கூறலாம். அதன் பண்டைய பெயர் வேங்கட சமுத்திரம். அகலமான தெருக்கள். அதிகமான வீடுகள்

பூட்டப்பட்டிருக்கவில்லை. பழைய பழக்க வழக்கங்களையும், பரம்பரைப் பண்புகளையும் மறக்காமல்கடைப்பிடித்து வரும் சில கிராமவாசிகளைச் சந்தித்தப்போது மனத்துக்கு இதமாக இருந்தது.நேமம் தல புராணத்தை எனக்குத் தந்து உதவிய, ஓய்வு பெற்ற சம்ஸ்கிருத ஆசிரியர் திரு. கிருஷ்ண சாஸ்திரிகளை அழைத்துக் கொண்டு சிவாலயத்திற்குச் சென்றோம். கைலாச குருக்கள் ஸ்ரீ கைலாசநாதனைத் தரிசனம் செய்து வைத்தார். பின்னர், ஸ்ரீராஜராஜேச்வரியின் திருச் சந்நிதிக்குச் சென்று அம்பிகையின் அருள் வெள்ளத்தில் மூழ்கித் திளைத்தோம். கோயிலை வலம் வந்தோம்.

நல்ல முறையில் நிர்வகிக்கப்பட்டு வரும் அழகான கோயில். அக்கிராமத்தினர் அக்கோயிலில் அக்கறை காட்டி வருகிறார்கள் என்பது தெளிவாகத் தெரிகிறது. 'கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்'—நம் முன்னோர் கட்டளையே பிறப்பித்தனர், தற்போது, 'கோயில் இருக்கும் ஊரில் குடியிருப்பவர்கள் அதில் அக்கறை காட்ட வேண்டும்' என்று நமக்கு நாமே ஒரு கட்டளையிட்டுக் கொள்வது பொருத்தமாயிருக்கும் என்று தோன்றுகிறது!

சுவாமி பாணலிங்கமாயிருக்கிறார். சிறப்பு வாய்ந்தது. அருகிலுள்ள செந்தலையிலிருந்து வந்து இங்கு குடியேறியவர்கள், சிறியதாக இருந்த கோயிலை மேட்டுப் பகுதியில் பெரியதாகக் கட்டியிருக்கிறார்கள். எழுபது ஆண்டுகளுக்கு முன் கிராம மக்கள் திருப்பணியும் குடமுழுக்கும செய்திருக்கிறார்கள்.

இக்கோயிலில் திருவாதிரை ஊடல் தீர்க்கும் விழா நடைபெற்று வருகிறது. முன் காலத்தில் தர்மராஜா முத்து சாமி ஐயர் என்பவர் சுந்தரமூர்த்தி நாயனாராக வேடம் புனைந்து சுவாமிக்கும் அம்மனுக்கும் இடையேயிருந்த ஊடலைத் தீர்த்து வைப்பதாக ஒரு நிகழ்ச்சியில் கலந்து கொள்வார். அந்த விழா இன்றும் அவரது பரம்பரையின

ரால் நடத்தப்பட்டு வருகிறது. இவ்விழா முடிந்ததும் அவ்வூர் மக்களுக்குத் திருமண விருந்து நடைபெறும். ஸ்கந்த சஷ்டியின் போது பால் குடமும் காவடியும் எடுப்ப தோடு, இரவில் சூரசம்ஹாரமும் சிறப்பான முறையில நடைபெறுமாம்.

இங்கு பத்து நாட்கள் விநாயகர் உற்சவம் நடைபெறு வது மற்றொரு சிறப்பான நிகழ்ச்சியாகும். விநாயகசதுர்த்தி யின்போது, அவரவர் இல்லத்தில் கொழுக்கட்டை தயாரித் துக்கொண்டு வந்து, கணபதி திருச்சந்நிதியில் படைத்து மகிழ்கிறார்கள்.

வெளிப் பிராகாரத்தில் ஸ்ரீவிநாயகர் ஸ்ரீசுப்பிரமணியர், நவக்கிரகங்கள், நந்திகேச்வரர், நடராஜர், சிவகாமி, சூரியன், பைரவர், எல்லாரும் இருக்கின்றனர். பலிபீடமும் இருக் கிறது. துவஜஸ்தம்பம் இல்லாததுதான் ஒரு குறையாகத் தோன்றியது. கண்டமங்கலத்தார் ஒன்று கூடித் தீர்மானித் தால் இந்தக் குறையையும் அகற்றிவிட முடியும்.

சிவாலயத்திலிருந்து பெருமாள் கோயில் செல்லும் வழியில் மேல வீதியிலிருக்கும் ஒரு கோயிலுக்குள் நுழைந்து விட்டு வந்தோம். அது கலைவாணியின் கோயில்! ஐம்பது அறுபது வருடங்களாகக் கல்விப் பணி புரிந்து வரும் ஒரு சிறு ஆரம்பப் பாடசாலை! தம் தந்தையும் பாட்டனாரும் நடத்தி வந்த அப்பள்ளியை மிக அக்கறையோடு கவனித்து வருகிறார் அவரது குமாரர், வேங்கடராமன். அவர் மாநில அவார்டு பெற்றுள்ள ஆசிரியர். அங்கு சிறுவர் சிறுமியருக்கு, கல்வியோடு நன்னெறியையும் தெய்வ பக்தி யையும் புகட்டி வருகிறார்கள். அறிவை மட்டும் வளர்ப்பது உண்மையான கல்வி ஆகாது. அது ஆன்மாவையும் தொட வேண்டும். நல்லொழுக்கங்களையும் நன்னடத்தையையும் புகட்டாத கல்வி, ஏட்டுச் சுரைக்காயாகத்தான் இருக்கும். அது வீட்டுக்கும் உதவாது; நாட்டுக்கும் உதவாது!

தெற்கு வீதிக்கு நேரே இருக்கும் பெருமாள் கோயில் நாய்க்கர் காலத்தில் கட்டப்பட்டதாகக் கூறப்படுகிறது. மூலஸ்தானத்தில் ஸ்ரீவேங்கடேசப் பெருமாள், ஸ்ரீதேவி பூதேவியுடன் எழுந்தருளியுள்ளார். ருக்மிணி—சத்யபாமா வுடன் கூடிய ஸ்ரீ வேணுகோபால சுவாமி உற்சவமூர்த்தி யாகத் திகழ்கிறார்.

கருட மண்டபம் அழகாக இருக்கிறது. மூலஸ்தானத் தின் மீதுள்ள விமான கோபுரத்தில் சுதை வேலைப்பாடுகள் அருமையிலும் அருமையாக அமைந்திருப்பது கண் கொள்ளாக் காட்சியாகும். நாளெல்லாம் அங்கேயே நின்று பார்த்துக் கொண்டிருக்கலாம். தென் புறமுள்ள பஞ்சமுக ஆஞ்சநேயரும், மேற்கே உள்ள சிரித்த முகத்துடன் கூடிய யாளியும் அற்புதத்திலும் அற்புதம்.

ஆனால்...ஆனால்! இதற்குத் திருஷ்டி கழிப்பது போல், பின்புறம் சுவர் இடிந்து போய், பிராகாரம் திறந்தமேனி யாகக் காட்சியளிக்கிறது. அக் கிராமவாசிகள் அதை விரை விலேயே கட்டிமுடிப்பதில் முனைந்து ஈடுபடுவார்கள் என்று எண்ணுகின்றேன்.

அக்காலத்தில் கிராமத்தின் இரு கண்களாகக் கருதியே சிவாலயத்தையும் பெருமாள் கோயிலையும் நம் முன்னோர் கள் கட்டி வைத்தார்கள். இரண்டையும் சமமாகப் பாவிக்க வேண்டும். கண்டமங்கலத்தில் சிவாலயமும் பெருமாள் கோயிலும் நன்றாகப் பாதுகாக்கப்பட்டு வருக்கின்றன என்று பெயர் வாங்கினால், அது அடுத்த கிராமத்திலுள்ள வர்களுக்கு ஒரு முன்னுதாரணமாக இருக்குமல்லவா?

ஊருக்குத் தென்மேற்கில் மும்மூர்த்தி குளம் என்ற ஓர் இடம் உள்ளது. அதை தற்போது ஓமக்குளம் என் கிறார்கள். மும்மூர்த்திகள் அங்கு ஒன்றாக ஓமம் செய்து சிறப்புப் பெற்ற இடம் அது. அவர்களது கோயில்கள்

புதையுண்டு போய் விட்டதாகவும், சுற்றிலுமுள்ள திடலில் உழவு செய்ய முடியாது என்றும், ஏர் பூட்டினால் கலப்பை முறிந்து விடுவதாகவும் சொல்கிறார்கள்.

கண்டமங்கலத்திற்தருகில், பஸ் பாதையில், திருக் காட்டுப்பள்ளிக்கு இரண்டு மைல் தெற்கில் கிராம தேவதை யான வாத்தலை நாச்சி அம்மன் கோயில் இருக்கிறது. அக் கோயிலின் உற்சவ விக்ரகம், கண்டமங்கலம் சிவாலயத்தில் வைக்கப்பட்டிருக்கிறது.

வாத்தலை அம்மன் கோயில் ஐநூறு வருடங்களுக்கு முன்னால் தோன்றியதாகும். அதைப் பற்றிக் கர்ண பரம் பரையாகக் கூறப்படும் செய்தி இதுதான்.

ஒரு சமயம் கர்நாடகத்தில் ஏற்பட்ட பயங்கர வெள் ளத்தின் போது, காவிரியாற்றில் ஓர் அம்மன் சிலை அடித்து வரப்பட்டது. அது வாத்தலை என்ற இடத்தில் ஒதுங் கியது. பூவாளூர் செட்டிமார்கள் வியாபாரத்திற்காக அப் பகுதியில் ஓரிரவு தங்க நேரிட்ட போது அவர்கள் கனவில் அம்மன் தோன்றி, தன்னைத் தங்களுடன் எடுத்துச் செல்லும்படியும், தான் விரும்பும் இடத்தில் அமர்ந்து விடப் போவதாகவும் கூறினாள். அவர்களுடன் வந்த தேவிதான் வாத்தலை அம்மனாகக் கண்டமங்கலத்தருகில் தங்கி அருள் பாலித்து வருகிறாள்.

கருவறையில் மூன்று விக்ரகங்கள் உள்ளன. சாமுண்டீச்வரி என்று அழைக்கப்படும் சிலை முத்தால் ராவுத்தர் என்பவரால் பிரதிஷ்டை செய்யப் பட்டதாம். அவர் கனவில் வந்து தன்னை அங்குப் பிரதிஷ்டை செய்யும் படி அம்மான் கூறினாளாம்.

அந்த அம்மனின் உக்ரம் தாங்காமல் ஊர் மக்கள் வராஹி என்ற அம்மனைப் பிரதிஷ்டைசெய்திருக்கிறார்கள். வராஹியும் உக்ர களையுடன் விளங்கியதால், தற்சமயம்

உள்ள மூல விக்ரகம் பிரதிஷ்டை செய்யப்பட்டது. அதற்கு காரணமாயிருந்தவர் கைலாசம் சுப்பய்யர் என்ற கண்ட மங்கல கிராமவாசி. நூற்றைம்பது. இருநூறு வருடங்களுக்கு முன்பு இச்சிலை இங்கு நிறுவப்பட்டுக் கும்பாபிஷேகம் நடைபெற்றிருக்கிறது.

இதன் தொடர்பாகவும் ஓர் அற்புதம் நிகழ்ந்ததாகக் கூறப்படுவது உண்டு.

கைலாச சுப்பய்யர் இந்தச் சிலையை வடித்துத் தரும்யடி ஒரு சிற்பக் கலைஞரிடம் கோரியிருந்தார். பணி முடிந்ததும் சிற்பி, சிலையை எடுத்துச் செல்லும்படி அவருக்குத் தகவல் தந்தார். இவர் புறப்படத் தயாரான போது தாங்க முடியாத வயிற்று வலியால் அவதிப்படத் தொடங்கினார். அதன் காரணமாக, குறித்த நேரத்தில் அவர் சிற்பியிடம் செல்ல இயலவில்லை. அப்போது பைராகி போல் இருந்த ஒருவர் அங்கு வந்தார். 'சிலையை எடுத்துச் செல்ல ஏன் தாமதம் செய்கிறீர்?' என்று அவர் கேட்கவும், இவர் தமது திடீர் நோயைப் பற்றிக் கூறினார். அதைக் கேட்ட பைராகி, பச்சிலை ஒன்றை எடுத்துக் கொடுத்தார். அதை உட்கொண்டதும் வயிற்று வலி தீர்ந்தது. பின்னர், பக்தர் சிலையைப் பெற்று வந்தார். பிரதிஷ்டையும் குட முழுக்கு விழாவும் மங்களகரமாக நிகழ்ந்தது.

மேற்குப் பிராகாரத்தில் குல்லாய் தாடியுடன் முத்தால் ராவுத்தரின் உருவச் சிலை இருக்கிறது. கருப்பண்ண சாமியும் இருக்கிறார். கிழக்குப் பிராகாரத்தில் மதுரை வீரன், முத்து வழியான் சிலைகள் இருக்கின்றன. பங்குனி — சித்திரையில் உற்சவம் நடைபெறுகிறது. உற்சவத்தின் போது கண்டமங்கலம் கைலாசநாதர் கோயிலிலுள்ள அம்மனின் உற்சவ மூர்த்தி, மூலவிக்ரகங்களோடு தங்கி, பத்து நாள் உற்சவம் முடிந்ததும் மீண்டும் சிவாலயத்திற்கே வந்து சேருகிறது. ஒன்பதாம் நாள் உற்சவத்தன்று, அம்மன் ஊர்

எல்லையைச் சுற்றி வந்து, எந்த வேற்றுமையுமின்றி அனைத்து மக்களுக்கும் தரிசனம் தந்து அருள்பாலிக்கிறாள்

ஓர் ஊருக்கு, குறிப்பிட்ட பெயர் ஏற்பட்டதற்கு ஏதாவது காரணம் கூறப்படுவது வழக்கமாயிற்றே! அவ் வகையில் கண்டமங்கலம் என்ற பெயர் ஏற்பட்டதற்கு ஒரு கதையைக் கூறுகிறார்கள்.

கண்டமங்கலத்தின் பஞ்சக் குரோச எல்லைக்குள் இருப்பது செந்தலை என்ற சிற்றூர். அங்கு சந்திரலேகை என்ற ஒழுக்கமும் பண்பும் நிறைந்த தாசிப் பெண் பகவானைக் குறித்துத் தியானத்தில் ஆழ்ந்திருந்தாளாம். அப்போது சிவபெருமான் அவள் கனவில் தோன்றி வெங்கடசமுத்திரத்திற்கு வரும்படி ஆணையிட்டாராம், அதன்படி சந்திரலேகை இங்கு வந்து கைலாசநாதரைத் தரிசித்து மகிழ்ச்சி பொங்க 'கண்டேன் மங்கலம்' என் றாளாம், அது முதல் வெங்கடசமுத்திரம் 'கண்ட மங்கலம்' ஆயிற்றாம்!

# செந்தலை

அடுத்து, சந்திரலேகை என்ற பெயருடன் தொடர்பு கொண்டதால், 'சந்திரலேகை சதுர்வேதிமங்கலம்' என்று கல்வெட்டுக்களில் குறிப்பிட்டுள்ள செந்தலை என்றகிராமத் திற்குச் செல்கிறோம்.

தல புராணம், சந்திரலேகையை ஒரு கந்தர்வப் பெண் ணாக் குறிப்பிடுகிறது. கண்வர் என்ற முனிவரின் தவத் தைக் கலைத்ததால் அவருடைய சாபத்திற்கு ஆளாகி, பூமியில் ஓர் அழகிய பெண்ணாகப் பிறந்தாள். சாபம் நீங்கும் பொருட்டு, பிர்மாரண்யம் என்ற இந்தத் தலத்தை

யடைந்து கடும் தவம் புரிந்தாள். சிவபெருமான் அர்த்த நாரீச்வரராகக் காட்சி தந்து, 'கோரும் வரம் யாது?' என்று கேட்டதற்கு சந்திரலேகை, 'என் பெயரில் இந்த ஊர் அழைக்கப்பட வேண்டும்' என்றும், தனக்குஅருள் கிடைத்த மாசி மாத சுக்லபட்ச சப்தமியில் காவேரி நதியில் நீராடி இத்தலத்தில் கோயில் கொண்டிருக்கும் மகாதேவனை வழிபடுகிறவர்கள் நற்கதியடைய வேண்டும் என்றும் வேண்டிக் கொண்டாள்.

செந்தலை சிவன் கோயிலில் உள்ள கல்வெட்டுகளில், அங்கு உறையும் சிவபெருமானை, 'ஆர்க்காட்டுக் கூற்றத்துப் பிரமதேயம் சந்திரலேகை சதுர்வேதி மங்கலத்துத் திருப் பெருந்துறை மகாதேவர்' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. அந்தணர்கள் வாழும் ஊரை 'சதுர்வேதி மங்கலம்' என்றும் அவர்களுக்கு மான்யமாகக் கொடுக்கப்பட்ட ஊரைப் 'பிரமதேயம்' என்றும் வழங்குவது மரபாகும்.

பிரம்தேவன் இங்குள்ள சிவபெருமானை வழிபட்டு மேன்மையுற்றதால், கிருத யுகத்தில் இத்தலத்திற்கு 'பிர்மாரண்யம்' என்ற பெயர் வழங்கிற்று,

அசுவசேனன் என்ற பாண்டிய மன்னனுக்குப் பிரம ராயர் என்ற மந்திரி இருந்தார். சிவ பக்தரான அவர், குதிரைகள் வாங்க மன்னன் அளித்த செல்வத்தைக் கோயில் திருப்பணிக்காகச் செலவழித்தார். இதைக் கண்டு வெகுண்டான் பாண்டியமன்னன் இங்குள்ள சிவபெருமான், நரிகளைப் பரிகளாக்கி பக்தனைக் காத்தார். பின்னர் மீண்டும் பரிகள் நரிகளாக மாறியதும், பாண்டிய மன்னன் பிரமராயரைத் தண்டிக்க முயன்றார். நதி கரை புரண்டு ஓடியதும், சிவபெருமான் பிட்டுக்கு மண் சுமந்ததும், பாண்டியன் பிரம்பால் அடிபட்டதும் ஆகிய திருவியைாடற் புராண நிகழ்ச்சிகள் இத்தலத்தில் உறையும் சிவபெரு மானின் திருவிளையாடல்களாகவே தல புராணத்தில் கூறப் பட்டுள்ளன. பிரமராயன் என்ற பெயர், மாணிக்கவாச

கரின் பட்டப் பெயரான 'தென்னவன் பிரமராயன்' என்பதை நினைவுபடுத்துகிறது. திரேதா யுகத்தில் இந்த ஊருக்கு 'ஜம்புகேசுவரம்' என்ற பெயர் வழங்கப் பெற்றது.

கல்வெட்டுக்களில் இந்த ஊருக்குத் திருப்பெருந்துறை என்ற பெயரும், பெருமானுக்குத் 'திருப்பெருந்துறை மகாதேவர்' என்ற திருநாமமும் காணப்படுவதாக எஸ்.ஆர். பாலசுப்ரமணியம் தமது சிறு நூலில் குறிப்பிட்டிருக்கிறார். இது மற்றொரு திருப்பெருந்துறையா, அல்லது மாணிக்கவாசகரால் புகழ்பெற்ற ஆவுடையார் கோயில் என்ற திருப்பெருந் துறைக்குப் பின்னர் இத் தலத்திற்கு இப்பெயர் அளிக்கப்பட்டதா என்பது ஆராய்ச்சிக்குரியது என்றும் அவர் கருத்துத் தெரிவித்திருக்கிறார். மாணிக்க வாசகரின் காலம் சந்தேகத்திற்கிடமின்றி கண்டுபிடிக்கப் பட்டாலன்றி, இக்குழப்பம் தீராது என்கிறார் அவர்,

செந்தலை சிவாலயத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமானின் திருநாமம் சுந்தரேச்வரர். அம்பிகை, மீனாட்சி தேவி. சுவாமி சுயம்பு லிங்கம்.

பெரிய கோயில், ஆனால், சீராக நிர்வகிக்கப்படாமல் இருக்கிறது, காரை உதிர்ந்து செங்கல்கள் பல இடங்களில் பல் இளிக்கின்றன! பிராகாரங்களில் நடப்பதே சிரமமாயிருக்கிறது.

இந்தக் கோயில் எப்போது கட்டப்பட்டது என்பது தெரியவில்லை. கடைசியாக, திருப்பணியும், குடமுழுக்கும் நடந்த ஆண்டு தெரியவில்லை. கோயில் இருக்கும் நிலையைக் கண்டால் நூறு, நூற்றைம்பது வருடங்களாகியிருக்கும் என்று ஊகிக்க முடிகிறது. ஒரு காலத்தில் கொடி கட்டிப் பறந்த கோயிலில் இன்று கொடிமரம் இல்லை. அதற்கான பீடம் மட்டும் இருக்கிறது. அதற்கு முன்னுள்ள பிலறயில் கணபதி இருக்கிறார்.

தெற்குப் பிரகாரத்தில் பிரும்மாவின் உருவச் சிலை யொன்று காணப்படுகிறது.

ஸ்ரீ நடராஜர், சோமாஸ்கந்தர் உற்சவமூர்த்திகள் பெரிய அளவில் லட்சணமாக அமைந்திருக்கின்றன. பால் அபிஷேகம் செய்யும் போது சோமாஸ்கந்தர் விக்ரகத்தில் கறுப்பு மச்சமும், ரேகைகள் பதிந்திருப்பதும் தெரியும் என்றார் அர்ச்சகர்.

செந்தலை மீனாட்சி சுந்தரேச்வரர் ஆலயத்தில் உள்ள சப்த கன்னிகள் சக்தியும் பெருமையும் வாய்ந்த வர்கள். ஒரு மண்டலம் விளக்குப் போட்டு, 48-வது நாள் அபிஷேக ஆராதனைகள் செய்து, பொங்கல் நிவேதனம் செய்தால் நினைத்த காரியம் கை கூடுமாம். கல்யாணம் ஆகாதவர்களும், குழந்தைச் செல்வம் இல்லாதவர்களும், வேலை கிடைக்காதவர்களும் பிரார்த்தனை செய்து கொண்டு விளக்குப் போடுகிறார்கள், இக் கோயிலிலுள்ள தட்சிணாமூர்த்தியும் சக்தி மிக்கவராகத் திகழ்கிறார். குரு வாரத்தில் இவருக்குக் காராபணி சுண்டல் நைவேத்தியம் செய்தால் நம் பிரார்த்தனைகள் பலிக்கும்.

வட பிரகாரத்தில் பத்மநாபப் பெருமாள்—மகாலட்சுமி சந்நிதியும் உள்ளது.

சரித்திரச் சிறப்பும் புராண மகிமையும் பெற்ற இச் சிவாலயத்தில் முன் காலத்தில் ரதோற்சவம் பெரிய அளவில் நடந்து வருகிறது. பதினெட்டு ஊர் மக்கள் கூடி இதனை இழுப்பார்களாம். புறப்பட்டால் நிலைக்கு வந்து சேர இரண்டு நாட்கள் ஆகுமாம். ஆனால் அந்தோ அந்தோ! அந்தத் தேர் இன்று உருக்குலைந்து. செல்லரித்துப் போய், பழைய பெருமைகளை நினைவுபடுத்தும் அழிவுச் சின்னமாகக் காட்சியளிக்கிறது!

அந்தக் காலத்தில் இங்கு வைகாசி மாதம் பிரும்மோற் சவம் மிகச் சிறப்பாக நடந்து வந்ததாம்.

இதைத் தவிர, மாத திருவிழாக்களும், கந்தசஷ்டி, திருவாதிரை, நவராத்திரி, சிவராத்திரி, கார்த்திகை தீபம், ஆடிப்பூரம், மாசி மகம், கார்த்திகை சோமாவாரம் போன்ற உற்சவங்களும் நடைபெற்று வந்திருக்கின்றன. தற்போது கோயிலில் விளக்கேற்றி, கால பூஜைகள் செய்து வருவதே பெரும்பாடாக இருந்து வருகிறது, ஊர் மக்களுக்கு இது பெரும் குறையாக இருப்பதை உணர முடிகிறது. இந்த நிலையை மாற்றுவது எப்படி என்று அவர்களில் சிலர் தீவிரமாகச் சிந்தித்து வருவதையும் அறிந்துகொள்ள முடிகிறது.

இந்தக் கோயிலிலுள்ள மகா மண்டபம் பின்னர் கட்டப்பட்டதாகும். இதற்கான தூண்கள், அழிந்துபோன (அழிக்கப்பட்ட) நேமம் மாகாளத்துப் பிடாரி கோயிலி லிருந்து எடுத்துவரப்பட்டவையாகும். இந்தத் தூண்களில் நிறைய கல்வெட்டுகள் காணப்படுகின்றன. திருக்காட்டுப் பள்ளி சிவசுவாமி ஐயர் உயர்நிலைப் பள்ளியின் முன்னால் தலைமை ஆசிரியர் திரு. எஸ்.ஆர். பாலசுப்பிர மணியன், இவற்றை நன்கு ஆராய்ந்து தமது நூலில் எழுதியுள்ளார். சோழ மன்னர்கள், பாண்டிய மன்னர்கள் பெரும்பிடுகு முத்தரையனான சுவரன் மாறன் இவர்களின் பரம்பரை, புகழ், தொண்டு அனைத்தைப் பற்றியும் இக் கல்வெட்டுக்களும், கோயிலிலுள்ள இதர கல்வெட்டுக் களும் பறைசாற்றுகின்றன.

அவ்வூர் பெருமாள் கோயிலில் இருக்க வேண்டிய தாயாரின் உற்சவமூர்த்தி. செந்தலை சிவாலயத்தில் இருக் கிறது. அக்கோயிலில் பாதுகாப்புப் போதவில்லை என்பதால் அது இங்கு வைக்கப்பட்டிருப்பதாகக் கூறினார்கள். அந்த விக்ரகத்தின் படத்தில் சந்திரலேகை என்று பொறிக்கப்பட்டிருக்கிறது.

சில ஆலயங்களில், அருகிலுள்ள பாதுகாப்பற்ற கோயில்களின் உற்சவ மூர்த்திகள் பாதுகாக்கப்பட்டு

வருவதைக் காண்கிறேன். மனிதனிடமிருந்து தெய்வங்களைக் காப்பாற்ற வேண்டிய நிலை ஏற்பட்டிருப்பது வருந்தத் தக்கதே! இருப்பினும், ஒரு மகிழ்ச்சி என்னவென்றால், இதிலாவது சிவ — வைணவ பேதம் மறைந்து வருகிறதே என்பதுதான். சிலை திருடர்கள் தெய்வங்களின் பொது எதிரிகளாதலால் சிவன் கோயில் சிலை பெருமாள் கோயிலிலும், பெருமாள் கோயில் சிலை சிவன் கோயிலிலும் அடைக்கலம் புகுவதைக் குறித்துச் சர்ச்சை ஏற்படாமல் இருக்கிறது! இதில் நமக்கு ஒரு படிப்பினை உண்டு. நமது பொதுவான விரோதியை அடையாளம் கண்டுகொண்டுவிட்டால் நமக்கிடையேயுள்ள அர்த்தமற்ற வேற்றுமைகளை மறந்து, ஒருவருக்கொருவர் பாதுகாப்பாகவும், உறுதுணையாகவும் இருக்கப் பழகிக்கொள்வது எளிதாகிவிடும்.

செந்தலைப் பெருமாள் கோயிலின் தற்கால நிலையைந் பார்த்தபோது சிவாலயம் எத்தனையோ பரவாயில்லை என்றே நினைக்கத் தோன்றியது. ராமமூர்த்தி பட்டாச்சாரியார் மிகுந்த பிரயாசைப்பட்டு, அக்கோயிலில் விளக்கெரியச் செய்து கொண்டிருக்கிறார். தனக்குச் சம்பளம் ஒழுங்காகத் தரப்படாத நிலையிலும் கூட, சிரத்தை குறையாமல், சிரமத்தைப் பாராமல், நம்பிக்கை இழக்காமல் அவர் பெருமாளுக்குத் தொண்டு புரிந்து வருகிறார்.

கடமையில் கண்ணும் கருத்துமாக இருக்கும் அர்ச்சகர்களைச் சந்திக்கும்போது நான் புளகிதம் அடைகிறேன். ஒரு கோயிலின் மிகப் பெரிய சொத்து அங்கு ஆராதனை புரியும் அர்ச்சகரான அவரது தெய்வ நம்பிக்கையும், ஆர்வமும் ஈடுபாடும் தான் பக்தர்களை அந்த ஆலயத்திற்கு ஈர்க்கும், பள்ளி ஆசிரியரும், கோயில் அர்ச்சகரும் தங்களது உன்னதமான பொறுப்புக்களையும், கடமைகளையும் மறந்து ஊதியம் ஒன்றை மட்டுமே குறிக்கோளாகக்

கொண்டு சேவை செய்தால் அது அவர்களையும் உயர்த்தாது, நம்மையும் உயர்த்தாது. ஆனால் அவர்கள் வறுமையில் வாடினாலும் வாயைத் திறக்காமல் தொண்டு புரியவேண்டும் என்பது பொருளல்ல... அத்தகையவர்கள் பட்டினி கிடக்காமல் பாதுகாக்க வேண்டியது சமூகத்தின் மிகப் பெரிய பொறுப்பாகும்.

ராமமூர்த்தி பட்டாச்சாரியார், தாயாரின் மூலஸ்தான விமான கோபுரம் இடிந்து விழுந்து கிடப்பதை எங்களிடம் காட்டியபோது அவர் கண்கள் கலங்கியிருந்ததைக் கவனித்தேன். பரிமளவல்லித் தாயார் மூல விக்ரகத்தை வெளி மண்டபத்தில் எடுத்து வைத்திருப்பதையும் காட்டினார், கண்ணீர் பெருகாத குறையாக.

வரகூர் ஸ்ரீ வேங்கடேசப் பெருமாள் கோயிலிலும் இவர்தான் பணிபுரிந்து வருகிறார்... ஸ்ரீ வேங்கடேசப் பெருமாளின் அருளால் சற்று சௌகர்யமாக இருப்பதால் செந்தலை ஸ்ரீ அனந்த பத்மநாபப் பெருமாளுக்கு இவர் ஓரளவு கைங்கரியம் செய்ய முடிகிறது. வருடத்திற்கு ஏழாயிரம் ரூபாய் வருமானம் வந்தும், நித்தியபடி பூஜைக்குத் தேவையான பொருள்களைச் சொந்தச் செலவில் வாங்கி, அவற்றுக்கான ரசீதுகளை பத்திரப் படுத்தி வைத்து, ஆறு மாதத்திற்கு ஒரு முறை அறநிலையப் பாதுகாப்புத் துறை கமிஷனருக்கு எழுதி பணத்தைப் பெற வேண்டியிருப்பதாகக் கூறினார் அவர். சிறிய அளவிலாவது திருப்பணிகள் செய்து குடமுழுக்கு செய்துவிட வேண்டும் என்று மிகத் தீவிரமாக இருக்கிறார். உள்ளூரில் சில இளைஞர்கள் இவருக்கு உறுதுணையாக இருந்து ஊக்குவித்து வருகிறார்கள்.

சிவாலயத்தில் இருந்தது போன்றே இக்கோயிலிலும் முன்பு உற்சவங்களும் திருவிழாக்களும், சிறப்பாக நடைபெற்று வந்தன. வருடப்பிறப்பு, ஆடிப்பூரம், ஸ்ரீஜயந்தி. நவராத்திரி, ஆடி வெள்ளிக்கிழமை, தீபாவளி, ஸ்ரீராம

நவமி, வைகுண்ட ஏகாதசி போன்ற புண்ணிய தினங்களெல்லாம் கொண்டாடப்பட்டு வந்தது போக, தற்போது எல்லாம் நின்று போய் வைகுண்ட ஏகாதசி மட்டுமே நடைபெற்று வருகிறது.

மூலவர் ஸ்ரீ அனந்தபத்மநாபசுவாமியாவார். அவர் அமர்ந்த திருக்கோலத்தில் பூதேவி, ஸ்ரீதேவியோடு காட்சியளிக்கிறார். பெரிய சிலைகள்.

ஸ்ரீ அனந்தபத்மநாபருக்கு அனந்தன் என்ற வேஷ வாகனம் இல்லை. பெருமாள் தனியேதான் சேவை சாதிக்கிறார். அதற்கு ஒரு கதையும் உண்டு.

ஒரு சமயம் பெருமாளுக்குத் தாகம் எடுத்ததாம். உடனே அவர் நீர் எடுத்து வரும்படி நாகராஜனை ஏவினார். அவர், கோமுகத்தின் அபிஷேகத் துவாரம் வழியாக வாயு மூலைக்குச் சென்று படம் எடுத்து, சற்று நேரம் நின்றுவிட்டுத் தரையைக் கொத்தினார். உடனே அங்கிருந்து நீர் 'குபீர்' என்று பெருகியது. அந்தத் தீர்த்தத்தை எடுத்து வந்து பெருமாளுக்குத் தந்தார். நாகம் நீர் எடுத்து வரச் சென்றபோது பக்தர்களுக்குச் சேவை சாதித்த திருக்கோலத்துடனேயே பெருமாள் இன்றும் தரிசனம் தந்து கொண்டிருக்கிறார்.

செந்தலை ஸ்ரீ அனந்த பத்மநாபப் பெருமாள் ஆலயத்தில், வடக்குப் பிராகாரத்தின் வாயு மூலையில் ஒரு பழைய கிணறு இருக்கிறது. அதற்கு அனந்த தீர்த்தம் என்று பெயர், ஆதிஷேசன், பெருமாளின் தாகத்தைத் தணிப்பதற்காக ஏற்படுத்திய தீர்த்தம் அது.

முன்பெல்லாம் அத் தீர்த்தத்தை எடுத்துத்தான் பெருமாளுக்குத் திருமஞ்சனம் செய்வது வழக்கம். தற்போது அக்கிணறு தூர்ந்து போய் அடியில் எங்கேயோ சிறிது நீர் இருக்கிறது. ஸ்ரீவைகுண்ட ஏகாதசி அன்று அத்தீர்த்தத்தை-

எடுத்துத் தலையில் தெளித்துக் கொண்டால் சர்வ பாவங்களும் நீங்குமாம்.

புனிதம் மிக்க இக் கிணற்றைப் பழுது பார்த்து, சுற்றுச் சுவரைச் செப்பனிட்டு நல்ல முறையில் பாதுகாக்கத் தன்னாலியன்ற முயற்சிகளைசெய்துவருவதாக ராமமூர்த்தி பட்டாச்சாரியார் கூறினார். அத்துடன் சுற்றுப் பிராகாரத்தையும் துப்புரவாக வைத்துக் கொண்டால், கிணற்றை வலம் வருவதற்கும் சௌகரியமாக இருக்கும். இதைச் செய்வதற்குத் திருப்பணிக் கமிட்டி ஒன்று அவசியமில்லை. பத்து இளைஞர்கள் முன் வந்து மாலையில் அரை மணி நேரம் பாடுபட்டால் எளிதாக முடிந்து விடும்.

அப்பர் பெருமானின் அரும்பணியை நினைவுப்படுத்திக் கொண்டால் ஒரு சக்தி பிறக்குமே மூச்சினிலே!

இந்தக் கோயிலில் ''வாழும் பாம்பு' ஒன்று இருக்கிறது. அது அவ்வப்போது கர்ப்பக்கிரகத்திற்குள் வந்து போவதைப் பார்த்திருப்பதாகப் பட்டாச்சாரியார் கூறினார், ஐந்தாண்டுகளுக்கு முன் வைகுண்ட ஏகாதசியன்று நாகப்பாம்பு ஒன்று நாள் பூராவும் கருட வாகனத்தில் அமர்ந்து பக்தர்களுக்குத் தரிசனம் தந்த அதிசய நிகழ்ச்சியையும் கூறினார் அவர். அது கோயிலில் வாழ்ந்து கொண்டிருக்கும் பாம்பா, வேறொன்றா என்பது தெரியவில்லை.

வைகுண்ட ஏகாதசியன்று காலை தனுர் மாச பூஜைக்குப் பின்னர் சொர்க்க வாசல் திறக்கப்பட்டது, அடுத்து. அர்ச்சகர் ஏகாதசி மேடைக்கு வந்தார். அங்கிருந்த கருட வாகனத்தின் மீது. துளசி தீர்த்தத்தைத் தெளித்துவிட்டு மூலவருக்குப் பூஜை செய்யச் சென்று விட்டார்.

ஆனால் கருடனின் தலையில் ஒரு நாகப் பாம்பு சுற்றிக் கொண்டிருந்ததை அரை குறை இருட்டில் அர்ச்சகர் கவனிக்க வில்லை, அதனால், துளசியையும், தீர்த்தத்

தையும், ஆதிஷேசனே ஏற்றுக் கொண்டார் என்பதும் அவருக்குத் தெரிந்திருக்க நியாயமில்லை.

தன் மீது நீர் தெளிக்கப்பட்டும், நாகப் பாம்பு அந்த இடத்தை விட்டு நகரவேயில்லை. அங்கு சர்ப்பம் இருப்பதை ஒருவர் கவனித்து விட, அவர் அதை அடுத்தவருக்குச் சொல்ல, ஒரு நொடியில் செய்தி கோயில் முழுவதும் பரவி விட்டது. ஏகாதசி தரிசனத்திற்கு வந்திருந்த பெருங் கூட்டம் ஏகாதசி மேடையருகே கூடி விட்டது. விரைவிலேயே கிராமமெங்கும் செய்தி பரவிவிடவே, நிமிடத்திற்கு நிமிடம் கூட்டம் அதிகரித்துக் கொண்டேயிருந்தது.

கூட்டம் அதிகமாக ஆக, கிராம அதிகாரிக்கும் கோயில் நிர்வாகிகளுக்கும் கவலை அதிகமாகிவிட்டது. திடீரென்று பாம்பு சீறிக்கொண்டு கிளம்பி விட்டால்...? 'அருகில் செல்ல வேண்டாம், அதற்குத் தொந்தரவு கொடுக்க 'வேண்டாம்' என்று எச்சரித்தபடியே. பாம்பைத் தீர்த்துக் கட்டுவதில் கவனம் செலுத்தத் தொடங்கினர் சிலர். அதிகாரியோ பாம்பை எப்படியாவது பிடித்து அப்புறப்படுத்தி விடலாம் என்று திட்டம் போட்டு, பாம்பு பிடிப்பவர்களுக்குச் சொல்லி அனுப்பினார். அவர்களும் அதற்கான சாதனங்களுடன் வந்து சேர்ந்து விட்டனர்.

அப்போது கீழ்த்திருப்பந்திருத்தி கிராமத்தைத் சேர்ந்த அறுபது வயது நிரம்பிய பெண்மணி ஒருவர் அங்கு வந்து சேர்ந்தார். அவர் உடல் நலமில்லாதவர். ஏகாதசி தரிசனத்திற்காக வரவில்லை; தற்செயலாகத்தான் வந்திருந்தார். அந்தப் பெண்மணி திடீரென்று ஆவேசம் வந்தவர்போல் பாம்பு இருந்த இடத்தை நோக்கி வேகமாக நடந்தார். அதிகாரிகள் அவரைத் தடுத்தனர். ஆனால், அவர்களைப் பார்த்து ''என்னைத் தடுக்க நீங்கள் யார்?'' என்று கேட்டுக் கொண்டே பாம்பின் அருகில் போய் நின்று கொண்டார். உரக்கப் பேசத் தொடங்கினார்:

''என்னைத் தொந்தரவு செய்து இங்கிருந்து விரட்டி விடலாம் என்றோ, கொன்று விடலாம் என்றோ ஒருவரும் நினைக்க வேண்டாம், நான் இந்த இடத்தை விட்டு நகர மாட்டேன். அர்த்த ஜாம பூஜை வரை இங்குதான் இருக்கப் போகிறேன். ஆனால்' ஒருவருக்கும் ஒரு தீங்கும் செய்ய மாட்டேன். முன்பு ஒரு சமயம் என்னை இந்தக் கோயிலிலி ருந்து ஒருவர் பிடித்துப்போய் வேறு எங்கேயோ விட்டு விட்டார். அப்படி யாராவது செய்யலாம் என்று கருதி னால் அந்தக் குடும்பத்துக்கு ஏற்பட்ட கதிதான் உங் களுக்கும் ஏற்படும், ஜாக்கிரதை!'' என்று அந்தப் பெண் மணியின் மூலமாக நாகப்பாம்பு எச்சரிக்கை செய்தது.

அவ்வளவுதான். அனைவரையும் பயம் பற்றிக் கொண்டது. பாம்பைப் பிடிக்கும் முயற்சி கைவிடப்பட்டது பக்தி மேலிட்ட சிலர் உண்டியல் கொண்டு வந்து பணம் வசூலிக்கத் தொடங்கினர். உடனே அந்தப் பெண்மணி, ''உண்டியலில் காசு போடாதே'' என்று கூறிவிட்டு, மூர்ச்சையாகிக் கீழே விழுந்து விட்டார். சற்றைக்கெல்லாம் அவர் மூர்ச்சை தெளிந்து எழுந்திருந்ததும் வெளியே அழைத்துச் செல்லப்பட்டார்.

பின்னர், அர்ச்சகர் ஒரு தட்டில் நிறைய சூடத்தை வைத்து நாகப் பாம்பிற்குத் தீபாராதனை காட்டினார். அப்போது அப் பாம்பு பெரிதாகப் படம் எடுத்து ஆடியது. கூடியிருந்தவர்கள் கன்னத்தில் போட்டுக் கொண்டனர், சூடம் அணைந்ததும், பழையபடி சுருட்டிப் படுத்துக் கொண்டு விட்டது பாம்பு. அர்த்த ஜாமம் முடிந்ததும். பாம்பின் அருகில் பாலை வைத்துவிட்டு. அர்ச்சகர்கள் கோயில் கதவைச் சாத்திக் கொண்டு வந்து விட்டார்கள்.

மறுநாட்காலை தனுர் மாச பூஜைக்குச் சென்று பார்த்தபோது, அங்கு பாம்பைக் காணவில்லை. முதல் நாள் வைக்கப்பட்டிருந்த பால் பாத்திரம் காலியாகியி ருந்தது. கருட வாகனத்திலிருந்து இறங்கி, குதிரை.

வாகனத்தருகில் சென்று சட்டையை உரித்துவிட்டு எங்கோ சென்றுவிட்டது.

செந்தலை பெருமாள் கோயிலில், ஆடிப் பூரத்தன்று, உற்சவமூர்த்திகள் காவேரிக்குப் போவதுவழக்கம் அச்சமயம் அங்கு கூடியுள்ளவர்களுக்குச் செட்டிமார்கள் எண்ணெயும் சீயக்காயும் தருவார்கள். அதைப் பெற்றுக் கொள்பவர்கள் காவேரியில் எண்ணெய் ஸ்நானம் செய்துவிட்டுத் திரும்பு வார்கள். முன்பு இந்த மாதிரி நடப்பது வழக்கம் என்று அர்ச்சகர் கூறினார்.

செந்தலை பெருமாள் கோயிலுக்குச் செல்லும் வழியில் அங்காள பரமேச்வரி கோயில் ஒன்றிருக்கிறது. மாசி அமாவாசையன்று தொடங்கி, சிவராத்திரி வரை மூன்று நாட்கள் திருவிழாக்கள் நடைபெற்று வந்தனவாம். முதல் நாள் கரகம், இரண்டாம் நாள் அக்னிச் சட்டி, மூன்றாம் நாள் பூக்குடலை, பிள்ளைப்பாவு என்று முறைப் படி அம்மனின் வீதிப் புறப்பாடு இருக்கும். அங்காளபரமேச் வரியைக் குலதெய்வமாக வழிபடும் பலர், வெளியூர்களி லிருந்தும் வந்து விழாக்களில் கோலாகலமாகக் கலந்து கொள்வார்கள்.

## வரகூர்

ஸ்ரீ கிருஷ்ண பக்தியில் தோய்ந்து, கிருஷ்ணானுபவத் தில் திளைத்து,இசை வடிவில் கண்ணபிரானுக்கு அபிஷேக, அலங்கார, ஆராதனைகள் செய்து உய்ந்த மகான்களின் வரிசையில் ஸ்ரீ சைதன்யர், ஜெயதேவர், புரந்தரதாசர், நாராயண தீர்த்தர் போன்றோ ஒப்புயர்வற்றவர்களாக விளங்குகிறார்கள், ஸ்ரீவில்வ மங்கள சுவாமிகளே, திலகண்

னாகவும் ஜெயதேவராகவும் நாராயண தீர்த்த குருஸ்வாமி களாவும் அடுத்தடுத்துப் பிறவிகள் எடுத்ததாகக் கூறப் யடுவது உண்டு.

ஸ்ரீ நாராயண தீர்த்தரின் பூர்வாசிரமப் பெயர் கோவிந்த சாஸ்திரி. இவர் ஆந்திரப் பிரதேச குண்டூர் மாவட்டத்திலுள்ள பானக நரசிம்மர் உறையும் மங்கள கிரியின் அருகில்,காஜா என்னும் ஊரில் பிறந்தவர். இவரது காலம் 1665-லிருந்து 1745 வரை என்று தெரிகிறது.

இளவயதிலிருந்தே எல்லையற்ற இறை பக்தியில் ஆடிப் பாடித் திளைப்பவராகவும், அவ்வப்போது ஸ்ரீ கிருஷ்ண தியானத்தில் ஆழ்ந்திருப்பவராகவும் காணப்பட்டார் கோவிந்த சாஸ்திரி. அவரது பெற்றோர் அவரை வாசுதேவ சாஸ்திரி என்ற பண்டிதரிடம் கல்வி பயில அனுப்பி வைத்தனர். பன்னிரண்டு ஆண்டுகள் வேத சாஸ்திரங்களில் தேர்ச்சி பெற்ற பின்னர், வேதாத்திரி என்ற இடத்தில் இரண்டு ஆண்டுகள் கடும் தவத்தில் ஆழ்ந்திருந்தார். கங்கை அவரை அழைத்தாள். காசியை நோக்கிப் பயண மானார். ஸ்ரீ இராமானந்தர் என்ற மகானின் சீடரானார். தீட்சை பெற்றார். நாராயண தீர்த்தர் ஆனார்.

காசியில் வசித்து வருகையில், திர்த்தர் தினமும் கங்கைக்கு நீராடச் செல்லும் போது அவர் மீது சந்தன மணம் விசுமாம். இதைக் கண்டு அதிசயித்த மக்கள், இவரைச் சந்தேகக் கண்ணோடு நோக்கினர். மறைந்தி ருந்து இவரது மகிமைகளை அறியும் பொருட்டு, இரவில் அவர் ஆச்ரமத்திலிருக்கும் சமயம் கூரை வழியாக எட்டிப் பார்த்தார்கள். அப்போது அங்கு ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா கோபிகைகளுடன் நர்த்தன மாடுவதைக் கண்டு பிரமித்துப் போயினர். மறுநாள் நாராயண தீர்த்தர் கங்கைக்குச் செல்லும் போது அவரை வழிமறித்து, முதல்நாள் தாங்கள் கண்ட காட்சியைக் கூறினர். அதைக் கேட்ட மகான், ''கண்ணனின் தரிசனம் பெற்ற நீங்கள் பெரும் பாக்கிய

சாலிகள். எனக்கு இன்னும் அந்த பாக்கியம் கிட்ட வில்லையே. அந்த மனப் பக்குவத்தைப் பெறுவது என்நாளோ?'' என்று ஏங்கினாராம்.

காசியிலிருந்து திரும்பியவர், கோதாவரி மாவட்டத்தி லுள்ள குச்சிமஞ்சி என்ற கிராமத்தில் மூன்றாண்டுகள் தங்கினார். அடுத்து,கிருஷ்ண நதிக் கரையிலுள்ள வெள்ளத் தூரில் சில ஆண்டுகள் வசித்து வந்தார். அங்கு அவருக்குச் சீடர்கள் பெருகினார்கள்.

திருத்தல யாத்திரை செய்து கொண்டு தெற்கே வந்தவர், திருப்பதியில் சில காலம் தங்கி ஸ்ரீ வேங்கடா சலபதியை வழிபட்டார். அங்கு அவருக்குக் கடுமையான வயிற்று வலி ஏற்பட்டது. அது அதிகமாகியதே தவிர, குறைவதாகக் காணோம். ஒரு நாள் ஸ்ரீ வேங்கடேசப் பெருமாள் இராமானந்த குரு ஸ்வாமியின் வடிவில் அவர் கனவில் வந்து. ''எனது மற்றொரு இருப்பிடமான பூபதி ராஜபுரத்திற்குச் செல். அங்கு உன் வயிற்று வலி நீங்கும். உன் பிறவியின் பயனையும் நீ பெறுவாய்'' என்று கூறினார்.

திருமலையிலிருந்து புறப்பட்டவர். யாத்திரை செய்து கொண்டே தஞ்சைத் தரணிக்கு வந்தார். மத்தியார்ச்சுனம் என்ற திருவிடைமருதூரில் தங்கி ஸ்ரீமகாலிங்க சுவாமியைத் தரிசனம் செய்து கொண்டு அங்கு சிறிது காலம் தங்கி யிருந்தார்.

அப்போது அங்கு சச்சிதானந்த சுவாமிகள் என்ற துறவி யார் பல சீடர்களோடு எழுந்தருளியிருந்தார். அன்னாரைத் தரிசித்து கருத்துக்களைப் பரிமாறிக் கொண்டார். நாராயண தீர்த்தரின் பக்தியின் ஆழத்தையும், மனப் பக்கு வத்தையும் கண்ட சுவாமிகள், அவரைத் திருவையாறு தலத்திற்குச் சென்று வாசம் செய்யும்படி அருளினர்.

அதன்படி தீர்த்தர், பஞ்சநதத்தலத்திற்கு வருகை தந்து, மேட்டுத் தெருவிலுள்ள ஒரு வில்வ மரத்தடியில் சில காலம் அமர்ந்திருந்தார்.

பின்னர், அங்கிருந்து புறப்பட்டு விளாங்குடி இலுப்பைத் தோப்பில், ஒரு மரத்தடியில் ஏகாந்தமான கிருஷ்ண தியானத்தில் நிலைத்திருந்தார். அடுத்தபடியாக, கொள்ளிடத்திற்கு வடபால் அமைந்துள்ள சிறந்த சிவத் தலமான திருமழப்பாடிக்கு வந்து தங்கினார்.

அச்சமயம் அங்கு ஒரு வேதியர் வந்தார். அவர் திருவையாற்றைச் சேர்ந்தவர். ஆன்றோரிடம் அடக்கம் கொண்டவர். வறுமை மிக்கவர். நாராயண தீர்த்த சுவாமிகள் பக்திப் பரவசத்தில் மெய்ம்மறந்திருக்கும் நிலையைக் கண்டு உள்ளம் பூரித்தார். இறையுணர்வே உணவாகக் கொண்ட அவரது உடல் வாடியிருப்பதைக் கண்டு நெஞ்சம் நெகிழ்ந்தார். திருவையாறு வீதிகளில் வீடு வீடாகச் சென்று யாசித்த அரிசியை அமுதாக்கி, மகானிடம் எடுத்துச் சென்று உண்ணும்படி கேட்டுக் கொண்டார்.

அந்தணரின் திருப்திக்காகவும், அவர் நற்கதியடையும் பொருட்டும் நாராயண தீர்த்தர் அவர் கொண்டு வந்த அமுதத்தில் காக்கைக்குச் சிறிது படைத்துவிட்டு தாம் சிறிது உண்டு, கிருஷ்ணயோகத்தில் ஆழ்ந்து விட்டார். தவஞானி உண்டமிச்சத்தை அந்தணர் உண்டார். அன்று தொடங்கிய இந்தப் பழக்கம் நாளும் தொடர்ந்தது.

ஒரு நாள் அந்த வேதியர், யாசித்த அரிசியை அமுதாக்கி எடுத்துக் கொண்டு ஆச்ரமத்தை நோக்கி அவசர அவசரமாக வரும்போது கொள்ளிடத்தின் மணற்படுகை அனலாகத் தகித்துக் கொண்டிருந்தது. அதில் கானல் நீர் ஓடுவது தெரிந்தது. அப்படியிருந்தும், மகான் பசியோடு காத்திருப்பாரே என்று சுடுமணலில் இறங்கி விரைவாக நடந்தார் அவர்.

ஆச்ரமத்தில் அவர் கண்ட காட்சி அவர் மனதைக் குமுறச் செய்தது. நாராயண தீர்த்தரின் முகம் வாடியிருந்தது. உடல் வியர்த்திருந்தது. பெருமூச்செறிந்துக் கொண்டிருந்தார். அருகில் அமர்ந்த வேதியர், சுவாமிகளின் உள்ளங் கால்களை உற்றுக் கவனித்தார். சுடுதணலில் நடந்தவர் போன்று அங்கு கொப்புளங்கள் இருந்ததைக் கண்டு ரத்தக் கண்ணீர் வடித்தார். ''சுவாமி தங்களுக்கு இந்தக் கஷ்டம் எவ்வாறு நேர்ந்தது?'' என்று வேதனையோடு வினவினார்.

அப்போது சுவாமிகள், ''அப்பனே, எனக்காக நீ கொதிக்கும் மணலில் நடந்து வந்தாயே, உனக்காக நான் இந்த இன்னலை ஏற்றுக் கொண்டேன். உனக்கு ஏதாவது தரவேண்டும் என்று விரும்புகிறேன், என்ன வேண்டுமோ கேள்'' என்றார். உடனே அந்த வேதியர், ''என் வறுமை நீங்க எனக்குப் பொன் தந்தருளுங்கள்'' என்று யாசித்தார். சுவாமிகளுக்குத் தூக்கிவாரிப் போட்டது. படித்தறிந்தவருக்கு இன்னும் மனப்பக்குவம் வரவில்லையே என்று வருத்தமுற்றார்.

''பொருளை யாசிப்பதற்காகவா சுடுமணலில் நடந்து இங்கு வந்தாய்?'' என்று கேட்டு, பொருளினால் வரும் துன்பங்களை விரிவாக எடுத்துக் கூறி உபதேசம் அருளி, அந்தணரை அனுப்பி வைத்தார்.

அதன் பின்னர் குணசேகரன் என்ற தலத்தில் சிலகாலம் தங்கியிருந்தார். ஒரு நாள் மகாவிஷ்ணு அவரது கனவில் தோன்றி, தசாவதாரக் கோலங்களைக் காட்டியருளினார். இறுதியில், கலியுகத்தில் மக்கள் உய்யும் பொருட்டு எடுத்த அவதாரமாகிய ஸ்ரீநிவாசப் பெருமானாகத் தரிசனம் தந்தார். நல்வாக்கும் அருளினார்.

''விரைவிலேயே வராகம் ஒன்றைக் காண்பாய். அதன் பின்னாலேயே நீ நடந்து செல். அது காட்டும் இடத்தை அடைந்தால், நீ பிறவியெடுத்ததன் பயனை அடைவாய்.''

சில நாட்கள் கழித்து காவேரியின் வடகரையில் சுவாமிகள் நடந்து கொண்டிருந்தபோது குறுக்கே ஒரு நல்ல பாம்பு சென்றது. அவர் பயணம் தடைப்பட்டது. ஆதிசேஷனே வந்து தன் வழியை மறிப்பதாக நினைத்த அவர், காவிரியைக் கடந்து தென்கரைக்கு வந்தார். குட முருட்டியாற்றின் கரையிலுள்ள நடுக்காவேரி கிராமத்தை அடைந்தார். என்ன ஆச்சரியம்! பிள்ளையார் கோயிலின் அருகில் பன்றி ஒன்று சிலையாக நின்று கொண்டிருந்தது. இவரைக் கண்டதும் அது நகரத் தொடங்கியது. சற்று வேகமாக நடந்தது. கனவில் ஸ்ரீநிவராசன் இட்ட கட்டளையின்படி, வராகத்தின் பின்னே நடக்கத் தொடங்கினார் சுவாமிகள்.

வராகம் நேரே பூபதிராஜபுரம் என்ற கிராமத்துக்குச் சென்றது. ஸ்ரீ வேங்கடேசர் ஆலயத்தினுள் புகுந்தது. உடன் உள்ளே சென்றார் சுவாமிகள். ஆனால், எங்கு தேடியும் அந்த வராகத்தைக் காண முடியவில்லை.

வராகவதாரம் ஏற்ற மாயவன் தானே வராகமாக வந்திருந்தார்! நன்றாகப் புரிந்துவிட்டது மகானுக்கு. கருணைத் தெய்வத்தின் கழலடி நினைத்தார். கண்ணீரால் நனைந்தார். கரம் குவித்துத் தொழுதார்...

கிருஷ்ண கிருஷ்ண க்ருபாஸிந்தோ
பக்தஸிந்து சுதாகரா!
மாமுத்ர ஜகந்நாதா
மாயா மோக மகார்ணவாத்!!

மாயாஜால மாதவனின் புகழ்பாடுவதும் அவனது மகிமைகளில் மனம் லயிப்பதுமாக ஏழு நாட்கள் இன்ப சாகரத்தில் மூழ்கியிருந்தார் சுவாமிகள். ஸ்ரீ வேங்கடாசல பதியின் ஆலயத்தைப் புதுப்பித்தார். அங்கு தங்கி முறையாக ஆராதனைகள் செய்தார். புரட்டாசி மாத சனிக்கிழமைகளில் சிறப்பாகப் பூஜைகள் செய்வித்தார்.

கோகுலாஷ்டமி உற்சவத்தையும் கொண்டாடினார். வெகு காலமாக இருந்துவந்த அவரது வயிற்று நோய் அறவே நீங்கியது; கனவாக மறைந்தது.

வாழ்க்கையின் லட்சியம் ஈடேறியதும், அதற்காகக் கலியுக வரதனால் வரவழைக்கப்பட்ட வயிற்று வலி மறையத்தானே வேண்டும்!

சில நாட்கள் கடந்தன. ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா தீர்த்த நாராயண சுவாமிக்குக் கனவில் தோன்றினார். ''நம்முடைய லீலைகளைப் பல பேர் எடுத்துரைத்திருந்த போதிலும் உன் வாக்கினால் அதைக் கேட்க வேண்டும் என்று விரும்புகிறேன்'' என்றார். அந்தக் கட்டளையைச் சிரமேற்கொண்டு, சுவாமிகள் கிருஷ்ண ஜனனம் முதல், ருக்மணி கல்யாணம் முடிய அமுத மொழியில் சொல் லோசை இன்பத்துடன் பாடி முடித்தார். அதுவே **ஸ்ரீ கிருஷ்ணலீலா தரங்கிணி** என்ற பக்திக் கவிதை பொழியும் அமர நூல்.

ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா, ஸ்ரீநிவாசனாக ஸ்ரீ நாராயண தீர்த்த சுவாமியை ஆட்கொண்டு திருத்தலம் பூபதிராஜ புரம். சுவேத வராக வடிவில் சுவாமி நாராயண தீர்த்தரை அங்கு அழைத்து வந்ததால், அது வராகபுரி என்றும், வரகூர் என்றும் வழங்கப்படுகிறது.

வரகூர், திருவையாறு தலத்திற்கு மேற்கே ஒன்பது மைல் தொலைவிலிருக்கிறது. திருக்காட்டுப் பள்ளியி லிருந்து கிழக்கே மூன்று மைல். பூதலூர் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கே ஐந்து மைல். தஞ்சைக்கும் திருவையாறுக்கும் இடையேயுள்ள திருக்கண்டியூரி லிருந்து தோகூர் செல்லும் பஸ் பாதையில், திருக்காட்டுப் பள்ளிக்கு முன், இடப்புறம் திரும்பி வரகூருக்குச்சென்றோம். இருபுறமும் வயல்கள் பரந்துகிடக்க, முதல் நாள் பெய்த

மழையின் காரணமாகச் சூழ்நிலை குளிர்ந்திருக்க, எங்கள் பயணம் 'குளு குளு' வென்றிருந்தது.

தொன்றுதொட்டு அங்கு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ வேங்கடேசப் பெருமாள், தீர்த்த நாராயண சுவாமிகளுக்கு லட்சுமி நாராயணமூர்த்தியாகக் காட்சி அந்து ஆட்கொண்டதால், தற்போது அக் கோயிலில் அவரே மூல மூர்த்தியாக அருள் பாலிக்கிறார். பெருமாள், லட்சுமி பிராட்டியை ஆதரவாக அணைத்திருக்கிறார். பிராட்டியும் எம்பெருமானை அன்புடன் தழுவிக் கொண்டிருக்கிறாள். இருவரும் பிரிக்க முடியாத ஒரே சக்தியாக இயங்கி, பக்தர்களை அனுக்கிரகித்துக் கொண்டிருக்கிறார்கள். எனவே, வரகூர் ஸ்ரீ வரத வேங்கடேசப் பெருமானின் தரிசனத்திற்குக் குடும்பத்தோடு, முக்கியமாக தம்பதியாக யாக வருவதே சிறப்பானது என்று கூறப்படுகிறது.

ஸ்ரீதேவி, பூதேவியுடன் எழுந்தருளியுள்ள ஸ்ரீநிவாச வேங்கடேசப் பெருமாளே அங்கு உற்சவ மூர்த்தியாகத் திகழ்கிறார். பக்தவச்சலன் ருக்மிணி, சத்தியபாமாவுடன் கூடிய கோபால கிருஷ்ணமூர்த்தியாகவும், ஸ்ரீ நாராயண தீர்த்தருக்குத் தரிசனம் தந்து அருள் பாலித்திருப்பதும் இத் திருத்தலத்தின் பெருமைகளில் ஒன்றாகும்.

வரகூரில் திருக்கோயில் கொண்டிருக்கும் கலியுக வரதன், பக்தர்கள் கேட்ட வரத்தை அளிக்கக் காத்திருக்கிறான். ஆனால் அவர்கள் தங்களுடைய பிரார்த்தனைகளை ஒழுங்காகச் செலுத்த வேண்டும். தவறினால், தெய்வக் குற்றத்திற்கு ஆளாவார்கள். அதற்கான தண்டனையிலிருந்து அவர்கள் தப்பவே முடியாது.

ஒரு பக்தைக்குத் திடீரென்று கண் பார்வை மங்கத் தொடங்கியது. பார்வை கெடாமலிருந்தால் சுவாமிக்குக் குத்து விளக்கு ஏற்றி வைப்பதாகப் பிரார்த்தித்துக் கொண்டாள். விரைவிலேயே அந்த அம்மாள் பூரண குணமடைந்

தாள். பிரார்த்தனை செய்து கொண்டபடி குத்துவிளக்கொன்று வாங்கி வைத்தாள். எண்ணெய்க்கும் ஏற்பாடு செய்தாள். ஆனால், சில மாதங்களில் எண்ணெய் வருவது நின்று போய் விட்டது; விளக்கு எரியவில்லை.

ஆண்டுதோறும் ஆவணி மாதம் நடைபெறும் ருக்மிணி கல்யாண மகோற்சவத்திற்கு வந்த அந்த அம்மாள், பிரகாரத்தை வலம் வந்து கொண்டிருந்தபோது திடீரென்று கண் பார்வையை இழந்தாள். 'ஓ'வென்று கதறினாள். சந்நிதிக்கு அழைத்து வரப்பட்டாள். அங்கு நின்றிருந்த பக்தர் ஒருவர் மூலம் ஸ்ரீ வேங்கடேசப் பெருமாள் பேசினார்:

''நீ வாக்களித்தபடி இங்கு குத்துவிளக்கு ஒளி வீசவில்லை. அதனால் கண்ணொளியை இழந்தாய். உண்டியலில் ஆறு ரூபாய் பன்னிரண்டு அணாவைப் போடு. ஆறு ரூபாய் எண்ணெய்க்காக. பன்னிரண்டு அணா அபராதத் தொகை.''

அந்த அம்மாள் உடனே உண்டியலில் ஏழு ரூபாயைப் போட்டாள். இம்முறை சுவாமி அர்ச்சகரைப் பேச வைத்தார். ''எனக்குச் சேரவேண்டியது ஆறு ரூபாயும் பன்னிரண்டு அணாதான். மீதி நாலணாவை எடுத்துக் கொள்.''

அவ்வாறே அந்த அம்மாளிடம் நான்கணா திருப்பித் தரப்பட்டது. உறவினர்கள் அந்த அம்மாளை வராக தீர்த்தத்திற்கு அழைத்துச் சென்றார்கள். அதில் நீராடி எழுந்தவள் கண்களைத் துடைத்துக் கொண்டாள். ஐயனின் கருணையால் அம்மையாருக்குக் கண் பார்வை மீண்டது. ஆனந்தக் கண்ணீர் பொங்கிற்று.

தாங்க முடியாத வயிற்று வலியால் துயரமுற்ற ஒருவர் அது குணமானால் வைரக் கிரீடம் சாத்துவதாக வேண்டிக் கொண்டார். அந்த வேண்டுகோளுக்குச் செவி சாய்த்த ஸ்ரீ வேங்கட வரதர், பக்தரின் வயிற்று வலியைக்

குணப்படுத்தினார். ஆனால், வைரக் கிரீடம் வந்து சேர வில்லை. பக்தர் அசிரத்தையாக இருந்து விட்டார்.

வயிற்று வலி திரும்ப வந்தது. இம்முறை சற்றுக் கடுமையாகவே இருந்தது. அவருடைய குடும்பத்தார் பெருங் கவலைக்குள்ளானார்கள். ஒரு நாள் சுவாமி, உறவினர் ஒருவருடைய கனவில் வயோதிகர் வடிவத்தில் தோன்றி, வைரக் கிரீடப் பிரார்த்தனையை நினைவுபடுத்தி னார். உடனே, வெள்ளிக் கிரீடம் ஒன்று செய்து தங்க முலாம் பூசி, சாதாரண வெள்ளைக் கற்களைப் புதைத்துப் பெருமாளுக்கு அளித்தார்கள்.

அப்படியும் வயிற்று வலி குறையவில்லை. மாறாக, அவருடைய மனைவியையும் அந்நோய் பற்றிக் கொண்டது. பெரிய பெரிய டாக்டர்களிடம் காண்பித்தும் குணமேற்பட வில்லை. மறுபடியும் உறவினர் ஒருவரின் கனவில் பெருமாள் தோன்றி வாக்களித்தபடி வைரக் கிரீடம் செய்து வைத்தாலன்றி வயிற்று வலி தீராது என்று கூறி னார். பக்தர் தன் தவற்றை உணர்ந்தார். தெய்வத்தை ஏமாற்றிவிட முடியாது என்பதைப் புரிந்து கொண்டார். தங்கத் தகட்டில், வைரக் கற்களைப் புதைத்து ஒரு கிரீடம் செய்து சாத்தினார். அன்று முதல் தம்பதியின் வயிற்று வலி இருந்த இடம் தெரியாமல் மறைந்தது.

இம்மாதிரியான சில நிகழ்ச்சிகளை வி.ஆர். கிருஷ்ண சாமி ஐயரின் நூலில் படிக்கும் போது வரகூர் ஸ்ரீ வேங்க டேசப் பெருமாளிடம் பக்தியுடன் பயமும் ஏற்படத்தான் செய்கிறது.

கலியுகத்தில் பகவான் புரிந்து வரும் லீலைகள் கணக்கில டங்காது. தன் பக்தர்கள் மூலம் தனது பெருமைகளை உலக றியச் செய்து வரும் அற்புதங்கள் பல நிகழ்ந்துள்ளன. குருவாயூரில் நாராயண பட்டதிரியை ஆட்கொண்டு ஸ்ரீமத் பாகவதத்தை 'நாராயணீய'மாகப் பாட வைத்தார்.

ஒவ்வொரு நிகழ்ச்சியையும் சுலோகங்களாக வடித்துவிட்டு, 'இது உண்மையா, இப்படி நடந்ததா?' என்று பட்டதிரி கேட்கவும், 'ஆதாம், ஆமாம் என்று தலையசைத்து ஆமோதித்தானாம் கண்ணபிரான்.

வரகூரில் நாராயண தீர்த்தரை ஆட்கொண்டு பாகவதத்தின் தசமஸ்கந்தத்தை 'ஸ்ரீ கிருஷ்ண லீலா தரங்கிணி' யாகப் பாடக் கேட்டு மகிழ்ந்திருக்கிறான். அதே கண்ணபிரான், கிருஷ்ண ஜனனத்திலிருந்து ருக்மிணி கல்யாண வைபோகம் வரையில், வசனமாகவும் செய்யுளாகவும் இசையாகவும் தீர்த்தர் படைத்துத் தந்ததைத் தானே ரசித்துப் பாராட்டியிருக்கிறான்.

ஒரு முறை பூஜையை முடித்து விட்டு, திரையைப் போட்டுவிட்டு, ஸ்ரீகிருஷ்ண லீலா தரங்கிணியை ஆனந்தமாகப் பாடிக் கொண்டிருந்தார் நாராயண தீர்த்தர். அப்போது திரைக்குப் பின்னால், 'ஜல்ஜல்' லென்ற சலங்கையொலி கேட்டது. ஸ்ரீ கிருஷ்ணன் தாளம் தப்பாமல் இசைக்கேற்ப நர்த்தனமாடிக் கொண்டிருந்தானாம். நாராயண தீர்த்தர். பேரானந்தத்தில் மிதக்கத் தொடங்கினார். கிருஷ்ணப் பிரேமையில் லயித்தார். ருக்மிணி கல்யாணம் வரை பாடியவரால் அதற்கு மேலும் பெருக்கெடுத்துப் பாய்ந்த இசை வெள்ளத்தை நிறுத்த முடியவில்லை. ஸ்ரீ கிருஷ்ணன் கதையை மேலும் தொடரும் பொருட்டுக் கான மழை பொழியத் தொடங்கினார்.

ஆனால், திரைக்குப் பின்னால் நிசப்தம் நிலவியது. சலங்கையின் தாள ஒலி அடங்கி விட்டது. ஆனந்த நர்த்தனம் நின்று விட்டது.

ஸ்ரீ ருக்மிணி கல்யாணத்திற்குப் பிறகு தன் கதையைப் பாட வேண்டாமென்று ஸ்ரீ கிருஷ்ணன் உணர்த்தியதாகத் தோன்றியது நாராயண தீர்த்தருக்கு. மங்களம் பாடும்படி

உத்தரவு வந்து விட்டதாகக் கருதி அத்துடன் முடித்து விட்டார்.

''நாராயண தீர்த்தர் என்பது ஒரு மலை. அதன் மீது கண்ணனின் கருணை மழை பெய்தது. அதன் பலனாக, கிருஷ்ண லீலா தரங்கிணி என்ற நதி பெருக்கெடுத்து ஓடியது. அந்த நதி, பக்தர்களின் உள்ளங்களாகிய வயல்களில் பாயட்டும்; பக்திப் பயிர்களைச் செழிக்கச் செய்யட்டும்'' என்று தரங்கிணியின் முடிவில் தீர்த்தர் கூறுகிறார்.

வரகூர்வாசிகள் ஸ்ரீ வேங்கடேசப் பெருமாளைத் தங்களது குலதெய்வமாக வழிபட்டு வருகிறார்கள். தங்களது உடல், பொருள், ஆவியை அத்தெய்வத்திற்கு அர்ப்பணித்து, பெருமாளின் சேவையையே பிறவியின் பெரும் பயனாகக் கருதுகிறார்கள்.

இன்றும் இக் கிராமத்தைச் சேர்ந்தவர்களிடையே ஒரு பழக்கம் இருந்து வருகிறதாம். அந்தக் கிராமத்திலிருந்து வேலைக்காக வெளியூர் செல்கிறவர்கள், தங்கள் முதல் மாதச் சம்பளத்தைக் கோயிலுக்காக அனுப்பி வைத்து விடுவார்களாம். உத்தியோக உயர்வு கிடைத்து அதனால் கிடைக்கும் முதல் மாத அதிக ஊதியத்தையும் அனுப்பி வைப்பார்களாம். இவ்வாறு அனுப்பத் தவறியவர்களுக்கு அலுவலகத்தில் பல இடையூறுகள் ஏற்படுவது உண்டாம்.

தங்கள் சொந்த ஊரிலோ, கிராமத்திலோ உள்ள ஆலயங்களுடன் இப்படியோர் அந்நியோன்ய உறவை ஏற்படுத்திக் கொள்வதும், அங்கு உறையும் தெய்வங்களின் அருட்சக்தியின் மீது அசைக்க முடியாத நம்பிக்கை வைப்பதும் பக்தி இயக்கத்தின் இன்றியமையாத தேவைகளாகும். பாரதமெங்கும், கடல் கடந்தும் பரந்து கிடக்கும் பக்தர்கள், வரகூர் காட்டும் வழியைப் பின்பற்றத் தொடங்கினால், இன்று விளக்கிற்கும், நைவேத்தியத்திற்கும் வழியின்றித்

திண்டாடும் பல தமிழக ஆலயங்களில் ஒளி பிறக்க உதவி புரிந்தவர்களாவார்கள்.

ஸ்ரீவரகூர் வேங்கடேசப் பெருமாள் ஆலயத்தின் உள் மண்டபத்திலுள்ள கல்தூண் ஒன்றுல் ஸ்ரீ நாராரண தீர்த் தரின் சிற்பம் வடிக்கப்பட்டிருக்கிறது. அவரை வழி மறித்து திசை திருப்பி, நடுக் காவேரிக்கு அனுப்பி வைத்த ஆதிசேஷன், மேற்குப் பகுதியில் சிற்ப வடிவில் காணப்படு கிறார். நடுக்காவேரியிலிருந்து தீர்த்த சுவாமிகளை வர கூருக்கு அழைத்து வந்த ஸ்ரீ வராககசுவாமிக்கும் அந்த மண்டபத்தில் இடமுண்டு. துவாரபாலகருக்கு அருகில், ஸ்ரீ ஆஞ்சநேயமூர்த்தி எழுந்தருளியுள்ளார். கிருஷ்ண லீலா தரங்கிணிக்கேற்ப ஸ்ரீ கிருஷ்ணன் நர்த்தனம் ஆடியபோது. இவர் தாளம் போட்டு மகிழ்ந்தாராம். அதனால் இவரைத் 'தாளம் கொட்டி ஆஞ்சநேயர் என்று அழைக்கின்றனர்.

கண்ணுக்குத் தெரியாமலிருந்து லீலைகள் புரிவதும், மனித உருவில் வந்து அற்புதங்கள் நிகழ்த்துவதும் தெய்வங் களின் இயல்பு. இத்தகைய வரலாறுகளின் அடிப்படையில் அமைவதுதான். ஆலயங்களின் மகிமைகளும் திருத்தலங் களின் பெருமைகளும. தல புராணங்கள் தெய்வங்களின் லீலைகளையும், தேவர்களின் கதைகளையும், மகரிஷியின் தவ வலிமையையும் விவரிக்கின்றன.

பல மகான்களின் வாழ்க்கைச் சரிதங்கள். நம் ஆல யங்கள் தோன்றிய வரலாறோடும் அவற்றின் வளர்ச்சி யோடும் தொடர்பு கொண்டு, அந்த ஊருக்கே சிறப்புக் களைச் சேர்த்துத் தருகின்றன. இன்றுகூட, பேரருட் சக்தி தனது அருளாட்சிக்கு யாரையாவது அடிமையாக்கிக் கொண்டு, அவர்கள் மூலம் புதிய புதிய ஆலயங்கள் தோன்றச் செய்து, திருத்தலங்களின் பட்டியலைக் கூட்டி மக்களின் இறையுணர்வை இமைபோல் காத்து, பக்தி இயக்கத்தை விரிவுபடுத்திக் கொண்டிருப்பதைக் காண்கின் றோம்.

எத்தனையோ பேரருளாளர்கள், ஆன்மீகத் தொண்டர்கள், கடவுளின் தூதவர்கள், அவரவர்களுக்கு இட்ட பணியை, அவரவர்களுக்குரிய துறையில் நிறைவேற்றிக் கொண்டிருக்கிறார்கள். நமக்குத் தெரிந்து, நம் கண் எதிரே தெய்வப் புகழ் பரப்பும் அருட் கவிகள் நடமாடிக் கொண்டிருக்கிறார்கள். சொற்சுவையும், பொருட்சுவையும் மணக்கும் கவிதைகள் வற்றாத நீரூற்றுகளாகப் பெருகிக் கொண்டிருக்கின்றன. அவரவர்களின் புனித அனுபவங்களாக நாளும் பல அற்புதங்கள் நிகழ்ந்து கொண்டேயிருக்கின்றன. நாம் சரணடைந்து விட்ட சற்குருநாதர், நம் தெய்வ நம்பிக்கையை நிலை பெறச் செய்து, நம் சித்தத்தைத் தூய்மைப்படுத்தி, சிறுகச் சிறுக நம் வாழ்வையும் செம்மைப்படுத்தி, நம் பிறவியைப் பயனுள்ளதாக்கி வருவதை உணருகிறோம். அந்த உணர்வை, நெஞ்சுக்குள்ளேயே பத்திரப்படுத்தி வைத்து, அக்கருணையை நினைந்து நினைந்து, அழுது அழுது, கன்னங்கள் நனைந்து நனைந்து பிறவிப் பெருங் கடலைக் கடந்து கொண்டிருக்கிறோம்.

இவ்வாறு தெய்வ அருளால் ஆட்கொள்ளப்பட்டு, பக்தியால் கரைந்து, பக்தியைப் பரப்பி, நம் வாழ்க்கைக்கு ஒளி கூட்டும் சற்குருநாதர்களில் ஒருவர்தான் ஸ்ரீநாராயண தீர்த்த சுவாமிகள்.

அவர் ஆந்திர தேசத்தில் பிறக்கிறார்; வடக்கே போகிறார்: ஆன்மிக ஒளியும் ஞானமும் பெற்றுத் திரும்புகிறார்; ஏழுமலையான் அவரை ஆட்கொள்கிறார். தெற்கே பயணமாகிறார் — வரகூரில் தெய்வ தரிசனம் பெறுகிறார்; கிருஷ்ணனின் புகழ் பரப்புகிறார்; பிறவியின் பயனை எய்துகிறார்: அநேகமாக, நம் மகான்களின் சரிதங்களைப் படித்தால், அவர்கள் தெற்கேயிருந்து வடக்கேயும், வடக்கேயிருந்து தெற்கேயும் பயணமாகி, பாரதப் புண்ணிய பூமியை வலம் வந்து தங்களது பக்தியாலும் ஆன்மிக

வாழ்க்கையாலும் தாய்த் திருநாட்டின் ஒருமைப்பாட்டை நிலை நாட்டியதை அறியலாம், பாரத தர்மங்களின் அடிப் படை நீரோட்டமாகத் திகழும் ஆழம் காண முடியாத நம் வேதம், கண்ணுக்குத் தெரியாத சரஸ்வதி நதியாகக் கீழே ஓட, சிவ லீலைகளான கங்கையும், கிருஷ்ண லீலைகளான யமுனையும் சங்கமமாகும் தெய்விக திரிவேணித் திருத்தல மாக விளங்குகிறது நம் புண்ணிய பாரத நாடு. எந்தச் சக்தியாலும் அழிக்க முடியாத இந்த ஒற்றுமையின் சின்னங் களாக வாழ்கின்றன நம் ஆலயங்கள். அத்தகைய ஆலயங் களில் ஒன்றுதான் வரகூர் ஸ்ரீ வேங்கடேசப் பெருமாள் ஆலயம். அத்திருத்தலத்திற்குப் பெருமை சேர்த்த மகான் தான் ஸ்ரீ நாராயண தீர்த்தர்.

அவரைக் கருவியாகக் கொண்டு தன் திருவவதாரம் முதல் திருக் கல்யாணம்வரை ஸ்ரீ கிருஷ்ண லீலை தரங்கிணி யாகப் பாடிக் கேட்டு மகிழ்ந்த மாயவன். தமது தூய பக்தனைக் கொண்டே ஆலயத்திற்கான உற்சவங்களையும் ஏற்பாடு செய்து கொண்டு விட்டார்.

ஒவ்வொரு கோயிலுக்கு ஒவ்வொரு விதமான உற்ச வங்கள். ஒவ்வொரு திருத்தலத்திற்கு ஒவ்வொரு விழா வினால் சிறப்பு, பெருமை, மகிமை வரகூர் ஆலயத்திற் கும், ஊருக்கும் உறியடி உற்சவத்தினால் சிறப்பு. ஆவணி மாதம் நடைபெறும் அந்த உற்சவத்தின்போது நாடெங்கும் உள்ள வரகூர்வாசிகள் அங்கு கூடுகிறார்கள். அருகிலிருக்கும் கிராமங்களிலிருந்தெல்லாம் பக்தர்கள் வருகிறார்கள். விருந் தோம்பல் பண்பு சிறக்கிறது. கிருஷ்ண லீலா தரங்கிணியின் முழக்கம் திக்கெட்டும் ஒலிக்கிறது. வயோதிகர்கள் முதல் சிறுவர்கள் வரை ஆண்கள் பெண்கள் அத்தனை பேரும் அந்தக் கோலாகல விழாவில் குதூகலத்துடன் கலந்து கொள்கிறார்கள்.

இந்த உற்சவம் ஒவ்வோர் ஆண்டும் ஆவணி மாதம் காயத்திரி ஜபத்தன்று தொடங்குகிறது. கோகுலாஷ்டமி

வரை ஒவ்வொரு நாளும் தரங்கிணியில் கண்டவாறு பகவானின் லீலைகளைக் காளிங்க மர்த்தனம் முதல் ருக்மிணி கல்யாணம் வரை ஆடிப்பாடிக் களிக்கிறார்கள்.

ஸ்ரீ கிருஷ்ணஜயந்திக்கு மறுநாள் வரகூரில் உறியடி உற்சவத் திருநாள். கிராமமே ஒரு கல்யாண வீடுபோல் பொலிவுற்றுத் திகழ்ந்தது. வரகூரிலேயே வசிப்பவர்களும், வெளியூரிலிருந்து உற்சவத்தில் கலந்து கொள்ள வந்திருந்த அவ்வூர்க்காரர்களும். அவர்களுடைய உறவினர்களும், நண்பர்களும், சுற்று வட்டாரத்தைச் சேர்ந்தவர்களும் குதூகலத்துடன் வளைய வந்து கொண்டிருந்தார்கள். சிறுவர்கள் எவ்விதக் கட்டுப்பாடுகளுமின்றித் தங்களிஷ்டத் திற்கு இரைச்சலிட்டுக் கொண்டும், ஓடிக் கொண்டும், ஆடிக் கொண்டும், பாடிக் கொண்டும், தடுக்கி விழுந்து கொண்டும், ஒருவரையொருவர் அடித்துக் கொண்டும் கும்மாளமிட்டுக் கொண்டுடிருந்தனர், வயோதிகர்கள் திண்ணையில் அமர்ந்தபடி பழைய கதைகளைப் பேசிக் கொண்டிருந்தனர். அந்தப் பக்கம் போகிறவர்களையெல் லாம் வெகு நேர்த்தியான 'வெண்ணெய்த் தாழி, அலங் காரம் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. தஞ்சாவூர் வெங்கடேசன் அலங்காரம் செய்வதில் மும்முரமாக ஈடு பட்டிருக்க, ராமமூர்த்தி பட்டாச்சாரி மூலவருக்குக் கற்பூராரத்தி காட்டி, பக்தர்களுக்குத் தரிசனம் செய்து வைத்துக் கொண்டிருக்கிறார். மண்டபங்களில் புத்தாடை உடுத்திய பக்தர்களின் கலகலப்பான பேச்சையோ, வெகு நாட்களுக்குப் பிறகு சந்திப்பவர்களின் குதூகல விசாரிப்பு கள், சுவாமி புறப்பாடாக இன்னும் எத்தனை நேரம் ஆகும் என்ற அனுமானங்கள், அலங்காரத்தின் முன்னழகை யும் பின்னழகையும் பக்தியோடு ரசிக்கும் சலசலப்புகள். பிராகாரத்தில் பிரார்த்தனையைச் செலுத்தும் அங்கப் பிரதட்சிணம், அமைதியாகப் பின் தொடர்ந்தபடி நடந்து கொண்டிருக்கும் உற்றாரும் உறவினரும்...

நின்ற திருக்கோல மூர்த்தி, தவழும் வடிவம் பெற்று இடக்கையால் பெரிய வெள்ளிக் குடத்தை அணைத்திருக்கிறார். அதில், வெண்ணெயும் பாலும் தளும்புகிறது. அக் காட்சியைக் காணும் நம் உள்ளம் ஆனந்தத்தில் துள்ளுகிறது.

'உறியடியோ கோவிந்தோ'
'உறியடியோ கோவிந்தோ'

கிராமமெங்கும் நாமகீதம் இன்ப முழக்கமாய் எதிரொலிக்கிறது, எங்கும் பரபரப்பு மிகுதியாகிறது. சிலருக்குப் பொறுமை எல்லை மீறுகிறது,

'எட்டு மணிக்கே அபிஷேகம் முடிஞ்சு சுவாமி கருட மண்டபத்துக்கு வந்தாச்சு. இன்னும் அலங்காரம் முடிஞ்ச பாடில்லே.'

'பத்து மணிக்கு மேல் புறப்பாடுன்னு நோட்டீஸ்லே போட்டிருக்கே. பன்னண்டு மணிக்காவது புறப்படவேண்டாமோ. மணி ஒண்ணாகப் போறது...வெய்யிலோ தகிக்கிறது...எதுக்கு நாழி பண்றாள்னே புரியலே...'

இந்த முணுமுணுப்புகள் நிர்வாகிகள் காதில் விழுகிறது. ',ஆச்சு ஆச்சு...தீபாராதனை ஆனதும் புறப்பட வேண்டியதுதான்'' என்று அவர்களை சமாதானப் படுத்துகிறார்.

நடு வீதியிலுள்ள கிணற்றுக்குப் பொருத்தப்பட்டுள்ள மோட்டார் தீடீரென்று சுழல்கிறது. ரப்பர் குழாயைப் பிடித்துக் கோயிலுக்கு எதிரில் நீர் பாய்ச்சுகிறார் பாலகிருஷ்ணன். புழுதி அடங்குகிறது; ஆனால், சூடு தணியவில்லை.

கோபுரத்திற்கு நேர் எதிரே உயரமான தென்னை மரத்தைவிட உயரமான பச்சை மூங்கில்கள் உறியடிக்காக நின்று கொண்டிருக்கின்றன. குறுக்கு மூங்கிலில் சீடையும்,

முறுக்கும் அடைக்கப்பட்ட கூடை கட்டப்பட வேண்டியது தான் பாக்கி. அந்த மூங்கில் கூடை ஒரு வீட்டில் தயாராகிக் கொண்டிருக்கிறது. அந்தப் பணிக்கென்று ஒரு குடும்பம். அந்தப் பரம்பரையைச் சேர்ந்தவர்தான் உறியடிக் கூடையைத் தயாரிக்க வேண்டும்.

இந்த உற்சவத்தில் ஒவ்வொரு குடும்பத்தினருக்கும் ஒவ்வொரு பரம்பரைக்கும், ஒவ்வொரு கோத்திரக்கார ருக்கும் ஒவ்வொரு பணி ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. அதை அவரவர்கள்தான் செய்யவேண்டும்.

வழுக்குமரம் உறியடி மூங்கிலுக்குச் சற்று தெற்கே நடப்படும். அந்தச் சடங்கு இரவுதான் நடைபெறும்.

வழுக்குமரம் ஒரு வீட்டில் வைக்கப்பட்டிருக்கிறது. அது நாலைந்து நாட்கள் தண்ணீரில் ஊறியிருக்கிறது. ஐந்தாறு நாட்கள் தன் மீது 'வழுக்கு'ப் பூச்சுகள் பெற்றி ருக்கிறது. முதலில் புளியங் கொட்டையை இடித்து, பின்னர் அரைத்துப்பசையாகக் காய்ச்சிப் பூசுவார்கள். வெங்காயத்தை அரைத்துக் கூழாக்கித் தடவுவார்கள். நடுவதற்கு முன் விளக்கெண்ணெய் வேறு பூசுவார்கள். நட்ட பிறகு தண்ணீர் அடித்து இன்னும் வழுவழுப்பாக்கி விடுவார்கள்! புளியங்கொட்டைக் கூழையும் வெந்தயக் கூழையும் வழுக்கு மரத்தில் பூசும் பணி கிராமச் சிறுவர்களின் கைங்கரியம்,

தஞ்சாவூரிலிருந்து ஒரு ஸ்பெஷல் பஸ் வருகிறது. அதிலிருந்து இருபது முப்பது பேர் அவசர அவசரமாக இறங்குகிறார்கள்.

ஒவ்வொரு கோஷ்டி ஒவ்வொரு வீட்டுக்குள் நுழை கிறது. குசலப்பிரச்னம் தொடங்குகிறது.

''வாங்கோ, வாங்கோ! என்னடா வரலையேன்னு நினைச்சுண்டிருந்தேன். ருக்மிணி வரேன்னாளே, அழைச்

சுண்டு வரலையா...? பெரியப்பா; இது யார் தெரியறதோ? கல்கத்தா ராமசந்திர ஐயரோட அண்ணா மாப்பிளே — பானுவோட ஆத்துக்காரர்.''

தலை போகிற காரியமாக வயதான சுமங்கலி அம்மாள் அங்கு வருகிறார்.

''மாமி, விளக்குலே எண்ணெய் ஆயுடுத்து? பாருங்கோ.''

''பத்து மணிகே விட்டு வெச்சேன். ஆகாம இருக்குமா, இப்படி லேட்பண்றாளே...இந்தாங்கோ, இந்த எண்ணெயை விடுங்கோ,''

''உறியடியோ கோவிந்தோ''—முழக்கம் கனம் பெறுகிறது. கோபுர வாசலில் பரபரப்பு அதிகமாகிறது.

சிவாமி புறப்பாடாகி விட்டது. பிராகாரத்தைச் சுற்றி வருகிறது. இன்னும் ஐந்து நிமிடங்களில் பட்டுப் பல்லக்கு கோபுர வாசலைக் கடந்து வெளியே வந்துவிடும்.

இதோ வந்து விட்டது. யசோதை இளஞ் சிங்கம் பவனி புறப்பட்டு விட்டான். நவநீதசோரகிருஷ்ணன் திருவிளையாடல்கள் புரியத் தொடங்கி விட்டான். வரகூர், பிருந்தாவனமாகிறது. அத்தனை பெரும் யாதவர்களாகவும், கோபிகைகளாகவும் மாறி மகிழ்ச்சிக் கடலில் மிதக்கத் தொடங்கி விட்டார்கள்.

''உறியடியோ கோவிந்தோ''

கிராம வீதியில் பல்லக்கு ஒவ்வொரு வீடாக நிற்க, கற்பூராரத்தி நடைபெறுகிறது. வயதானவர்களின் மேற்பார்வையில் இளைஞர் பட்டாளம்தான் பல்லக்குப் பவனி. எத்தனை பக்தி! எத்தளை உற்சவம், எத்தனை ஆர்வம் வாழையடி வாழையாகப் பெருகிவரும் இவ்வூர் இளை

ஞர்களின் இந்தப் பக்திப் பணி வரகூர் தலப் பெருமையைப் பன்மடங்காக்குகிறது.

காலை பதினொரு மணியிலிருந்தே தனிப்பட்டவர் களின் இல்லங்களில் நடைபெறும் விருந்துகள் ஒருபுறம்; அரியூரைச் சேர்ந்த அன்பர் கிட்டுவின் குடும்பத்தினர் தனி வீடு ஒன்று ஏற்பாடு செய்து கொண்டு மளிகைச் சாமான் கள், பாத்திரங்கள், தேவையான ஆட்கள் உட்பட இங்கே வந்து வருபவர்களுக்கெல்லாம் விருந்தோம்பும் பண்புடன் அளிக்கும் அறுசுவை உண்டி மற்றொரு புறம்.

பல வருடங்களாக் கிட்டு தவறாமல் உற்சவ நாளன்று இரு வேளையும் விருந்து அளித்து வருகிறாராம். அவரு டைய மகனுக்குத் திடீரென்று தோலில் வெண்மையான தழும்பு ஒன்று தோன்றி, அது உடலெங்கும் பரவிவிடுமோ என்று கவலையளித்த போது, வரகூர் வெங்கடேசப் பெருமாளிடம் பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறார். கை மேல்பலன் கிடத்தது. அந்த வருஷம் முதல் எவ்விதச் சிரமத் தையும் பாராமல் தொடர்ந்து இந்தக் கைங்கரியத்தைச் செய்து வருகிறார் இவர்.

வேத பாராயணம் பின் தொடர, சுவாமி கிராமத்தின் வடக்கு எல்லையான 'கடுங்கால்' என்ற வாய்க்காலின் கரைக்கு வந்து சேரும்போது மாலை நான்கு மணி ஆகிவிடு கிறது. அங்கிருக்கும் சிறிய மண்டபத்தில் அவர் எழுந் தருளிகிறார். வனபோஜனம் தொடங்குகிறது. அனை வருக்கும் வயிறாரப் பிரசாதங்கள் வழங்கப்படுகின்றன. பின்னர், கூட்டம் கலைந்து சற்று ஓய்வு எடுத்துக் கொள்கிறது.

இரவு எட்டு மணி சுமாருக்குக் கிராமம் மறுபடியும் சுறுசுறுப்பாகிறது. ஆலய கோபுரத்திற்குச் சற்றுத் தெற்கே வழுக்கு மரம் நடும் சடங்கு நடந்து முடிந்ததும்

மீண்டும் சூடு பிடிக்கிறது. பிருந்தாவனமாயிருந்த வரகூர் ஆயர்பாடியாகிறது! அவ்வூரிலுள்ளவர்களெல்லாம் யாதவர்களாகி விடுகிறார்கள். 'நாமக் காணிக்கை'யாக நாலணாவைச் செலுத்தி அதற்காக அமர்ந்திருக்கும் ஒருவரிடம் திருமண் தரிசித்துக் கொள்கிறார்கள். சிறுவர், பெரியவர் என்ற வேற்றுமையின்றி அத்தனை பேர் நெற்றிகளும் பளிச்சென்று துலங்குகின்றன.

கடுங்கால் கரையில், 'வெண்ணெய்க்குட' கிருஷ்ணனாகத் தவழ்ந்த திருமேனிக்கு அலங்காரம் மாறுகிறது. தற்போது ஸ்ரீதேவி, பூதேவியுடன் கூடிய வெங்கடேசப் பெருமாளாகக் காட்சி தருகிறார். சுவாமி புறப்பாடாகி மீண்டும் கோயிலருகில் வந்து தீபாராதனை ஆன பின்னர் தான் உறியடி நிகழ்ச்சியும், அதைத் தொடர்ந்து வழுக்கு மரவிளையாட்டும் நடைபெற வேண்டும். அதற்காக அந்தக் கிராமமே இரவெல்லாம் விழித்துக் கொண்டிருக்கிறது.

காலையைப் போன்றே இரவிலும் சுவாமி புறப்பாடுக்கு நேரமாகிறது. வந்திருப்பவர்களுக்கோ பொழுது போகவில்லை. என்ன செய்வதென்று புரியாமல், கோயிலிலிருந்து கடுங்காலுக்கும், கடுங்காலிலிருந்து கோயிலுக்கும் கால் கடுக்க நடந்து கொண்டிருக்கிறார்கள். கிழக்கு வானில் சின்ன சந்திரன் சிறிய ஒளியை வீசிக் கொண்டிருக்கிறான். 'ஜிலுஜிலு'வென்று சுகமான காற்று வீசுகிறது. குளக்கரையில் தென்னை மரங்கள் சலசலக்கின்றன. மனத்துக்கு மிக மிக இதமாயிருக்கிறது.

நடுநிசியைக் கடந்தும் கிராமம் பகல் போல் காட்சியளித்தது. ஒரு மணிக்குப் பிறகு கடுங்கால் மண்டபத்தருகே பரபரப்புத் தொடங்குகிறது. வாண வேடிக்கைகள் அமர்க்களப்பட்டன.

சுவாமி புறப்பட்டு விட்டார். அவர் உறியடி உற்சவத்தில் கலந்து கொள்ளத் தயாராகி விட்டார். முன்னால் பஜனை கோஷம் முழங்குகிறது. முப்பதுக்கும் மேற்பட்ட

வர்கள், புழுதியும் சேறும் கலந்த தங்கள் உடலால் வரகூர் மண்ணுக்குப் புண்ணியம் சேர்த்துக் கொண்டே சுவாமிக்குப் பின்னால் அங்கப் பிரதட்சிணமாக புரண்டு வருகிறார்கள்.

கோயிலுக்கு எதிரே ஒரு வீட்டில் அமளிதுமளிப்படு கிறது. உள்ளே அடைக்கப்பட்ட கிராமச் சிறுவர்கள் வீட்டை ரெண்டு பண்ணிக் கொண்டிருக்கிறார்கள். கதவுகள் தூள் தூளாகிக் கொண்டிருக்கின்றன. கிஷ்கிந் தையோ!

இல்லை. கோகுலம்தான்! அவர்களெல்லாம் பசுக்களா கவும் கன்றுகளாகவும் அடைக்கப்பட்டிருக்கிறார்களாம். கொட்டிலைத் திறந்துவிடும்படி கலாட்டா செய்கிறார்கள். 'உறியடியோ கோவிந்தோ' என்று முழக்கமிட்டுக் கொண் டிருக்கிறார்கள். உறியடி உற்சவத்தின்போது இப்படியும் ஒரு விளையாட்டு!

உறியடிக்கான ஏற்பாடுகள் ஜரூராகிக் கொண்டிருக் கின்றன. அண்டாக்களில் நீர் நிரப்பப்பட்டு விட்டது. அனுபவ மிக்க சூத்ரகாரி, குறுக்கு மூங்கிலும் பிரசாதம் உள்ள மூங்கிற் பெட்டியும் சீராக இருக்கின்றனவா என்று பார்வையிடுகிறார்.

கோயிலுக்கருகில் சுவாமி வந்து சேர்ந்த போது விடியற் காலை இரண்டரை மணியாகி விட்டது. அவர் பந்தலில் வந்து அமர்ந்ததும், 'யாதவர் தலை'வருக்கு மரியாதைகள் செய்யப்படுகின்றன. யாதவராக வேஷம் போடுகிறார்கள் ஒரு குறிப்பிட்டக் குடும்பத்தைச் சேர்ந்தவர்தவருக்குத் தான் பட்டாச்சாரி பரிவட்டம் கட்டி, பூரண கும்பம் அளித்து, தீபாராதனை காட்டி சுவாமியிடம் அழைத்துச் செல்கிறார். பின்னால் 'யாதவர்' கூட்டம் செல்கிறது. அவர்களைத் தொடர்ந்து 'சப்பாணிகள்' செல்கிறார்கள். உடல் ஊனமுற்றவர்களும், அவர்களுக்காகப் பிரார்த்தித்து கொள்பவர்களும் தரையில் அமர்ந்தபடியே 'தத்தித் தத்தி' செல்கிறார்கள். அவர்களுக்குப் பின்னால் 'பசுக்களும்

கன்றுகளும்.' இவர்கள் சாக்குப்படுதாவிற்குள் மறைந்துக் கொண்டு அட்டகாசம் செய்கிறார்கள். முரட்டுக் காளை களை அடக்குபவர்கள் போன்று உடன் செல்லும் பெரிய வர்கள் திணறிப் போகிறார்கள். இங்கு இதுவும் ஒரு வேடிக்கை!

அங்கப்பிரதட்சிணம் செய்பவர்கள், சப்பாணிகள், இந்த முரட்டுப் 'பசுக்கள்' அனைவரும் மும்மறை சுவா மியை வலம் வந்ததும், தலைமை யாதவர் சுவாமிக்குக் காணிக்கை செலுத்தி, உறியடிக்கு அவரிடமிருந்து கழியைப் பெறுவதாக ஒரு சடங்கு நடந்த பின்னர், உறியடி தொடங்குகிறது.

அது அதிக நேரம் நீடிக்கவில்லை. அரை மணிக்குள், மத்தளம் போன்ற மூங்கில் பெட்டி ஓர் இளைஞரிடம் சிக்கி விட்டது. ஆனால், அதை உடைத்துப் பிரசாதங்களை எடுப்பதற்குள் போதும் போதும் என்றாகி விட்டது!

வழுக்கு மரம் மிகவும் கடினமான விளையாட்டாகி விட்டது. பாவம், இரு கட்சியினரும மிகவும் சிரமப்பட்டு விட்டார்கள். எத்தனை வேட்டிகள்! எத்தனை தடவை கட்டுவார்கள்! எத்தனைன தரம்தான் அது வழுக்கிக் கொண்டு கீழே வரும்! உண்மையிலேயே இது ஒரு பெரிய சோதனைதான்.

உறியடியும் வழுக்கு மரமும் விளையாட்டுக்கள் மட்டு மல்ல; ஸ்ரீ கிருஷ்ண லீலைகளான இவற்றுக்குத் தத்துவார்த் தங்கள் உண்டு. மேலே உள்ள சுவாமி பிரசாதய்கள்தான் ஞானம் என்பது, அஞ்சான இருளில் உழன்றுக் கொண்டி ருக்கும் நாம், பல சோதனைகளையும், இடையூறுகளையும் கடந்து, அனுபவங்களினால் அறிவு பெற்று பூரண ஞானத்தைப் பெறுவதுதான் மோட்சம் என்பது. அதுவே பேரானந்த நிலை. அதுவே பெருமாளின் ஈடிணையற்ற பிரசாதம்.

ஸ்ரீ நாராயண தீர்த்த தமது லீலா தரங்கிணியில் இம் மாதிரியான தத்துவார்த்தங்களை விவரித்திருக்கிறார்.

உற்சவங்கள் பக்தி யோகத்திற்குத் துணை புரி கின்றன. அவற்றின் உட்கருத்துக்கள் ஞான சாதனங்களா கின்றன.

உறியடி, உள்ளத்தை உயர்த்த வேண்டும்; வழுக்கு மரம் வாழ்க்கைக்குப் புயன்பட வேண்டும்

மறுநாள் வரகூரிலிருந்து புறப்படும் முன், ஸ்ரீ வேங்க டேசப் பெருமாள் கோயில் இருக்கும். வீதியிலுள்ள சிவன் கோயிலில், ஸ்ரீ கைலாசநாதரையும் ஸ்ரீ ஆனந்த வல்லி யையும் தரிசனம் செய்தோம். பின்னர், பூதலூர் செல்லும் வழியில் உள்ள மந்தக்கரை விநாயகப் பெருமானையும் வழிபட்டோம். அடுத்து ஒரு சாஸ்தா கோயில் உள்ளது.

# கோவிலடி

திருக்காட்டுப் பள்ளியிலிருந்து ஐந்து மைல் வடக்கே இருக்கிறது கோவிலடி என்ற திருத்தலம் காவேரியின் அக்கரையில் உள்ளது. காவேரிக்கும் கொள்ளிடத்திற்கும் இடையே அமைந்திருக்கும் மற்றொரு ஸ்ரீ ரங்கநாதர் ஆலயம் அது. ஆதுரங்கம் என்று அழைக்கப்படுகிறது. அரங்கத்திற்கு அடுத்தாற்போல் உபய காவேரி மத்தியில் திகழ்வதால் 'அப்பாலரங்கம்' என்றும், ஸ்ரீரங்கம் கோவி லுக்குச் சமீபத்தில் இருப்பதால் 'கோவிலடி' என்றும் திருநாமங்கள் பெற்றுள்ளது.

ஸ்ரீவைணவத் திருப்பதிகளில் ஒன்றான இத்தலம் நம்மாழ்வார், பெரியாழ்வார், திருமழிசையாழ்வார்,

திருமங்கையாழ்வார் — ஆகிய நால்வரால் மங்களா சாசனம் செய்யப்பட்டுப் பெருமை பெற்றுள்ளது.

கோயில் சற்று உயர்வான பகுதியில் அமைந்து மாடக் கோயிலாகக் காட்சியளிக்கிறது. கருவறையில் பள்ளி கொண்ட பெருமாள் பாம்பணையின் மீது சயனித்திருக்கிறார், இடக் கரம் உபரிசரவசு என்ற பாண்டிய மன்னனுக்கு ஆசி வழங்கிக் கொண்டிருக்கிறது. அன்புடன் அவன் பெருமாளுக்கு அளித்த அப்பங்கள் நிறைந்த குடம் வலப்புறம் இருக்கிறது. திருமாலின் வலக்கரம் அப்பக் குடத்தின் மீது பதிந்திருக்கிறது. அதனால் 'அப்பக் குடத்தான்' என்ற திருநாமத்தைச் சூடிக் கொண்ட பூரிப்பு அந்தப் புன்னகையில் பிரதிபலிக்கிறது.

இப்பகுதிக்குப் பலாசவனம் — புரசமரக் காடு — என்று பெயர் துர்வாச முனிவரிடம் சாபம் பெற்று, அதனால் செல்வமும் வலிவும் இழந்து அசுரர்களால் இந்திரலோகத்திலிருந்து துரத்தப்பட்ட தேவர்கள், மந்திர மலைக் குகைக்குள் ஓடி ஒளிந்தனர். இந்திரனோ, பலாசவனத்திற்கு வந்து ஸ்ரீமந்நாராயணனைக் குறித்து நெடுங்காலம் கடும் தவமிருந்தான். அப்போது அத்தலம் இந்திர பவனம் ஆயிற்று; அவன் ஏற்படுத்திய தீர்த்தம் இந்திர புஷ்கரணி ஆயிற்று; அவன் வசித்த இடம் இந்திரகிரி என்றும், அவன் வசித்த மாளிகை இந்திர மாளிகை என்றும் பெயர் பெற்றன. திருமால் எழுந்தருள இந்திரனே விமான உருக் கொண்டதால் அது இந்திர விமானம் ஆயிற்று.

தேவேந்திரனின் கடும் தவத்தைக் கண்டு உளம் மகிழ்ந்த பாற்கடலில் பள்ளி கொண்டுள்ள பரமன் அசரீரியாக நல்வாக்கு அருளினார். சிவபெருமானைத் தஞ்சமடைந்தால், இழந்த செல்வத்தை மீண்டும் அடையும் வழியை அவர் காட்டுவார் என்று கூறினார் இந்திரன் மந்திரமலைக்குச் சென்று, அங்கு ஒளிந்து கொண்டிருக்கும் தேவர்களை அழைத்துக் கொண்டு கைலாசம் சென்றான்.

தேவர்கள், அசுரர்களை அழிக்க வேண்டுமானால் மூப்பு இறப்புக்களைப் போக்கவல்ல அமிர்தத்தை அருந்துவது தான் ஒரே வழி என்று சிவபெருமான் யோசனை கூற, அவ் விதமே திருமாலின் ஆசியோடு தேவர்களும் அசுரர்களும் திருப்பாற்கடலைக் கடைய, அதிலிருந்து வெளிவந்த அமிருத்தை மோகினி அவதாரம் எடுத்த பெருமாள் தேவர் களுக்கு மட்டுமே தர, அதனால் வெகுண்டெழுந்து போரிட்ட அசுரர்களை ஒழித்துக் கட்டி, இந்திரனை மீண்டும் தேவலோகத்தின் அதிபராக அமர வைத்தார்.

பலாசவனத்திற்குப் பெருமாள் எழுந்தருளுவதற்கு முன்பே திருமகள் எழுந்தருளினாள். இரு பிராட்டிகளில் பெருமை மிக்கவள் யார்? பூதேவியா, ஸ்ரீதேவியா என்ற பிரச்னையை நாரதர் தூண்ட, பகவான் தராசுத் தட்டு களில் இரு தேவியரையும் அமரச் செய்ய, பூதேவி, அமர்ந் திருந்த தட்டு கீழே செல்ல,அதனால் வருத்தமுற்ற ஸ்ரீதேவி பலாச வனத்திற்குச் சென்று தவமேற்கொண்டாள். அதனால் அதற்கு 'ஸ்ரீநகர்' என்ற பெயர் தோன்றியது. ஆழ்வார்கள் அழகு தமிழில் அந்நகரை 'திருப்பேர்' என்று விளித்தனர்.

பாற்கடலில் யோக நித்திரையில் பள்ளி கொண்டி ருக்கும் பரமன், பலாச வனத்தைத் தன் படுக்கையறை யாக்கிக் கொண்ட காரணம் என்ன? பிருமாண்ட புராணம் அந்தக் கதையைக் கூறுகிறது.

பாண்டிய மன்னனான உபரிசரவசு ஒருநாள் வேட்டை யாடச் சென்றான். மதம் பிடித்த யானை, ஒன்று காட்டில் அலைந்து கொண்டிருப்பதையும், இது கௌதம ஆச்ரமத் தில் நுழைவதையும், கண்டு அதன் மீது அம்பொன்று எய்தான். பயந்து ஓடிய யானை. அருகிலுள்ள குளத்தில் அனுட்டானங்கள் செய்து கொண்டிருந்த வேதியர் ஒரு வரை மிதித்துக் கொன்று விட்டது. மன்னன் மற்றோர் அம்பெய்து அந்தயானையைக் கொன்றன். ஆனால் பிரும்ம

ஹத்தி தோஷம் அவனைப் பற்றிக்கொண்டது, தன் நாட்டுக்குச் சென்றான். அரசைத் துறந்தான். வாழ்க்கையில் விரக்தியுற்றவனாய், புண்ணியத் தலங்களை நாடிச் சென்றான்; புனித நீராடினான். குற்ற உணர்வு குறைய வில்லை. மன அமைதிமீளவில்லை. இறுதியாகப்பலாசவனத் திற்கு வந்து, இந்திர புஷ்கரணியில் நீராடி, நோன்புகள் நோற்று, நியம நிட்டைகளோடு கடும் தவத்தை மேற் கொண்டான்.

அவன் முன் சிவபெருமான் தோன்றி, முன்பு பிரும்ம ஹத்தி தோஷம் நீங்குவதற்காக இந்திரனுக்குப் பிரம்மா உபதேசித்த **'ஓம் பத்ம நாபாய நம;'** என்று சாக்கிய சாத்திரத்தில் கூறப்பட்டுள்ள ரகசிய மந்திரத்தைஉபதேசித் தருளினார் தினம் ஆயிரம் தடவை அதை ஜபம் செய்ய வேண்டும். இதனால் பிரும்ம ஹத்தி முதலிய தோஷங்களை நீக்குவதோடு மனோவியாதி, சரீர வியாதி, மரணம், வறுமை முதலியவற்றையும் போக்கவல்லது என்றும், எல்லா செல்வங்களையும், இறுதியாக மோட்சத்தையும் தரவல்லது என்றும் கூறினார். அத்துடன் சித்தர்களுக்கு அபயம் அளிக்கும் சித்தாம்பிகையிடன் கூடிய சித்திகேச்வர ருக்கு அங்கோர் ஆலயம் எழுப்பும்படியும் அருட் கட்டளை யிட்டார், ஸ்ரீயப்பதியான நாராயணனை மனத்தில் தியானம் செய்து கொண்டு அந்தணர்களுக்கு அன்னதானம் செய்து வருமபடியும், அப்படிச் செய் தால் பகவான் மோட்ச பதவியளிப்பார் என்றும் கூறினார் சிவபெருமான். பின்னர், மன்னனின் வேண்டுகோளுக் கிணங்க சிவபெருமான் அங்கேயே எழுந்தருளியிருக்க இசைந்தார். திவ்விய ஞானத்தை வழங்கிய பெருமான் 'திவ்யஞானேச்வரர்என்ற திருநாமத்துடன்விளங்கினார்.

திவ்விய ஞானேச்வரர் ஆலயத்திற்கு வட கிழக்கில் உள்ள சித்தாச்ரமத்தில் சித்திகேச்வரரின் ஆலயத்தை எழுப் பித்து முறைப்படி வழிபாடு செய்து வந்தான் உபரிசரவசு

மன்னன். இந்திர புஷ்கரணியில் நீராடி, மூன்று தினங்கள் மௌன விரதம் பூண்டு, 'ஓம் பத்ம நாபாய நம;' என்ற மந்திரத்தை ஜபித்து வந்தான் சிவபெருமான் பணித்த வாறே, பல்வேறு தின்பண்டங்களுடன் கூடிய அறுசுவை விருந்து படைத்துத்தினமும் அந்தணர்களுக்கும்அன்ன தனம் செய்து வந்தான். அதனால் திருப்தியடைந்தவர்கள் 'உனக்குத் திருமால் அருள் புரிவாராக' என்று வாயார நெஞ்சார வாழ்த்தினர்.

ஸ்ரீமந் நாராயணனுக்கும் நெஞ்சம் குளிர்ந்தது. பக்தனைச் சோதிக்கவும், அவனுக்கு மோட்சம் அளிக்கும் பொருட்டும், பூதேவியைவிட ஸ்ரீதேவிக்கு அதிகப் பெருமை யுண்டு என்று உலகோர்க்கு எடுத்துக் காட்டி, இத்தலத் திற்கு லட்சுமியின் திருநாமத்தைச் சூட்டி மகிழவும் பலாச வனத்திற்கு எழுந்தருளினார். சுய உருவத்தில் அல்ல; ஒரு வயோதிக அந்தணனாக, முடி நரைத்து, அங்கங்கள் தளர்ந்து, உடல் வளைந்து, கையில் தடியை ஊன்றிக் கொண்டு, குரல் நடுங்க வேத மந்திரங்களை உச்சரித்துக் கொண்டு மன்னன் முன் தோன்றினார், 'ஒருவனைச் சாபம் நீக்கி உம்பரான் என்று விட்ட' எம்பிரான்.

முதியவரான அவ்வேதியரைக் கண்டதும் சாஷ்டாங்க மாகத் தரையில் விழுந்து பணிந்தெழுந்தான் மன்னன். பெரியவர் கையியர்த்தி ஆசீர்வதித்து விட்டு, ''மன்னா, எனக்குப் பசியால் காது அடைக்கிறது, மயக்கம் வருகிறது. தாகத்தால் தொண்டையும் நாக்கும், வறண்டு போயிருக் கின்றன. எனக்கு உடனே அன்பும் அளிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்'' என்றார்.

''வேதோத்தமரே! சற்று பொறுத்துக் கொள்ளுங்கள் இதர அந்தணர்கள் ஆற்றங்கரைக்குச் சென்றுள்ளனர். அவர்கள் மத்தியான ஸ்நானம் செய்து அனுட்டானங்களை முடித்துக் கொண்டு வந்ததும் அன்னதானம் நடைபெறும்.

தாங்களும் அங்கு சென்று மதியத்திற்குரிய நியம நிட்டைகளை முடித்துக் கொண்டு வந்து விடுங்கள், எல்லோரும் சேர்ந்து உண்ணலாம்'' என்று அரசன் மிகப் பணிவோடு மொழிந்தான்.

வேதியராக வேடம் புனைந்த வேதப் பொருள் தன் வேடிக்கையைத் தொடர்ந்தது...

''மன்னவனே! நான் மதிய ஸ்நானத்தை ஏற்கெனவே முடித்து இதர நித்திய கர்மானுஷ்டானங்களையும் செய்தாகி விட்டது. இனி செய்ய வேண்டியது எதுவும்இல்லை. அவர்களுக்காக என்னைக் காத்திருக்கச் சொல்வது சரியல்ல. கால தாமதமானால் என் உயிருக்கே ஆபத்து ஏற்படலாம். பசித்தவனுக்கு உடனே ஆகாரம் அளிக்கப் பட வேண்டும் என்று வேதம் முழங்குகிறதே, உங்களுக்குத் தெரியாதா?'' என்று கேட்டார். அடுத்த கணம் எண்ணற்ற வேதியர்களாகத் தன்னை உருமாற்றிக் கொண்டு கூட்டமாக மன்னவனுக்கு ஒரு கணம் தரிசனம் தந்தருளினார் அனந்த நாராயணப் பெருமாள்.

''இதோ பார். நான் மகிழ்ந்தால் எல்லா அந்தணர்களும் மகிழ்வர். உனக்குச் சந்தேகம் வேண்டாம். எனக்கு சீக்கிரம் அன்னம் அளிப்பாயாக'' என்று பாண்டிய மன்னனைப் பார்த்துக் கூறினார் பரந்தாமன்.

பசிக்காகத் தன்னிடம் உணவு நாடி வந்த வயோதிக அந்தணர் சாட்சாத் நாராயணனே என்பது தெரியா விட்டாலும், அவர் அற்புதங்கள் நிகழ்த்திக் காட்டக்கூடிய சக்தி படைத்தவர் என்பத உபரிசரவசு மன்னனுக்குப் புரிந்து விட்டது. அடுத்த கணம் அவரை உபசரிக்கத் தொடங்கி விட்டான். நீரால் அவரது திருவடிகளைத் தூய்மைப்படுத்தினான். ரத்தினங்களாலான இருக்கையில் அமர்த்தி, தங்கத் தாம்பளத்தில் அறுசுவை விருந்து

படைத்து சாமரத்தினால் வீசி, உபசார வார்த்தைகள் பேசி, பசியைத் தீர்த்துக் கொள்ளும்படி அவரிடம் பணிவுடன் கேட்டுக் கொண்டான்.

மன்னவனைப் பரீட்சிக்க வந்த மாதவனாயிற்றே! பரிமாறப்பட்ட அத்தனை அன்னத்தையும் இதர பலகாரங்களையும் ஒரே நொடியில் உண்டு தீர்த்துவிட்டார் அவர். மடைப்பள்ளியில் மிச்சம் மீதி இருந்ததையும் எடுத்து வந்து பரிமாறச் சொன்னான் மன்னன். அதையும் உட்கொண்டார். ஆனால். அவருக்குத் திருப்தி ஏற்படவில்லை! பாதி வயிறுதான் நிரம்பியதாகக் கூறினார். இந்நிகழ்ச்சியை நினைவுபடுத்தும் நம்மாழ்வார்,

'பேரே யுரைகின்ற பிரான் இன்றுவந்து
பேரேனென்று என்னெஞ்சு நிறையப் புகுந்தான்
காரேழ் கடலேழ் மலையேழுலகுண்டும்
ஆரா வயிற்றானை அடங்கப் பிடித்தேனே'

என்று அருளுகிறார்.

வயோதிக விருந்தாளிக்குப் பாதி வயிறே நிரம்பியதென்று அறிந்த மன்னவன் 'அந்தணருக்கு அபசாரம் நேர்ந்து விட்டதே' என்று துயருற்றான்.

''சுவாமி, நான் மாபாவி! பாதி வயிறே நிரம்பும் அளவுக்கு உமக்கு உணவு படைத்துப் பாவம் புரிந்து விட்டேன். சற்றுப் பொறுத்தருள்க. ஒரு நொடியில் மீண்டும் சமையல் செய்யச் சொல்கிறேன். இங்கேயே தங்கி தங்களது பசியை ஆற்றிக் கொண்டு போகலாம்'' என்று கண்ணீர் மல்க வேண்டினான் உபரிசரவசு.

சோதிக்க வந்த சுவாமி சும்மாயிருப்பாரா? ''மன்னா, நான் வயதானவன். நடந்து வந்த அசதியுடன் பாதி ஆகாரம் உட்கொண்ட களைப்பும் சேர்ந்து கொண்டு விட்டது. என்னால் இனி ஒரு கணம்கூட இங்கே அமர்ந்

திருக்க முடியாது. எனக்கு இளைப்பாற வேண்டும் போல் தோன்றுகிறது. நான் சிறிது நேரம் படுத்து ஓய்வுபெற உடனே ஏற்பாடுகள் செய். நல்லதொரு படுக்கையை அமைத்துக் கொடு'' என்று பகர்ந்தார் பள்ளிகொண்ட பெருமான்.

''வேதோத்தமரே! பசி முற்றும் ஆறாத நிலையில் தாங்கள் படுப்பது சரியல்லவே. சற்றுக் காத்திருங்கள். உணவு தயாராகி விடும். அதைச் சாப்பிட்டு விட்டுத் தாங்கள் சிரமப் பரிகாரம் செய்து கொள்ளலாம்'' என்று மன்னன் மீண்டும் வேண்டிக் கொண்டான்.

''அன்பனே! இனி எனக்கு உணவு தேவையில்லை. நான் சிறிது இளைப்பாறிய பிறகு எனக்கு அப்பம் தயாரித்துக் கொண்டு வந்து கொடு, போதும். முதலில் என் படுக்கை தயாராகட்டும்'' என்று பெரியவர் கட்டளை யிடவே, உபரிசரவசு அரண்மனையிலேயே மிக உயர்ந்த வகையில் அழைக்கப்பட்ட படுக்கையறைக்கு அவரை அழைத்துச் சென்று இளைப்பாறச் சொன்னான். சற்று நேரம் யோக நித்திரையில் ஆழ்ந்துவிட்டு ''நீ போய் அப்பங் களைக் கொண்டு வா'' என்றார் பரந்தாமன்.

மன்னன் அங்கிருந்து அகன்றதும் தனது தவத்தை முடித்துக் கொண்ட ஸ்ரீதேவி அங்கு வந்து பள்ளிக்கொண்ட பெருமாளின் பக்கலில் அமர்ந்தாள். மனம் மகிழ்ந்த மாதவன் 'பூதேவியை விட நீயே உயர்ந்தவள்' என்று ஆறுதல் மொழி கூறி, லட்சுமி பிராட்டியைத் தன் திருமார்பில் சேர்த்துக் கொண்டார்.

எண்ணெயில் வெந்ததும், நிறைய வெல்லம் கலந்ததும் அதிக ருசியுடன் தயாரிக்கப்பட்டதுமான அப்பங்களை ஒரு குடம் நிறைய நிரப்பிக் கொண்டு வந்து 'தயை கூர்ந்து

இதை ஏற்றுக் கொள்ள வேணும்' என்று பிரார்த்தித்தான் உபரிசரவசு பாண்டியன்.

பேரானந்தம் அடைந்த பரமதயாளன், அரசன் அன்புடன் கொண்டு வந்து வைத்த அப்பக் குடத்தில் தமது வலக்கரத்தை வைத்து ஆசி வழங்கி விட்டு, அவனுக்குத் திவ்விய தரிசனம் தந்தருளினார். உபரிசரவசு ஆனந்தக் கண்ணீரால் ஆராவமுதனின் திருவடிகளை நனைத்தான். அண்ட சராசரங்களுக்கெல்லாம் அதிபதியான அனந்த சயனன் அக்கணமே 'அப்பக் குடத்தான்' என்ற திருநாமத்தையும் ஏற்றுக் கொண்டான்.

பாண்டிய மன்னன் கருணைக் கடலின் தரிசனம் பெற்றதனால் பூரித்துப் போய், ''கமலக் கண்ணா! இன்றே என் தவமும், தருமமும், தானமும் பயனடைந்தன. சர்வேச்வரா, சர்வ சுதந்திரம் பெற்றிருந்தும், பக்தியொன்றிற்கு மட்டும் நீர் நிச்சயம் கட்டுண்டவராகிறீர். பரமதயாளா, இந்த ஏழை செய்த பிழைகளைப் பொறுத்து நற்கதியளித்தருள வேண்டுகிறேன்'' என்று மனமுருகப் பிரார்த்தித்துக் கொண்டான். பக்தனின் தேவை யறிந்து அருளும் அனாத ரட்சகன், உபரிசரவசுவுக்கு மோட்சம் அளித்து, அப்பால ரங்கத்தில் பள்ளி கொண்ட பெருமாளாய், நாடிவரும் பக்தர்களின் பாவங்களைப் போக்கி அவர்களுக்கு நற்கதியளித்துக் கொண்டிருக்கிறார்.

கோவிலடி திருத்தலம், உபரிசரவசுவின் கதையால் மட்டும் பெருமையடையவில்லை. இங்கு பகவான், மார்க்கண்டேயனுக்குச் சிரஞ்சீவியாக வாழும் வரத்தையும் தந்தருளியிருக்கிறார். அப்பக் குடத்தில் திருக்கரத்தை வைக்கும் அதே நேரத்தில் மார்க்கண்டேயனும் அவரிடம் வந்து சரணடைந்ததால் அவனது சிரசின் மீதும் தன் கருணைக் கரத்தை வைத்து ஆசி வழங்கினார் என்று தல புராணம் கூறுகிறது.

தம் மகன் மார்க்கண்டேயனுக்குப் பதினாறாவது வயதில் உயிருக்கு ஆபத்து ஏற்படப் போகிறது என்று அறிந்த மிருகண்டு மகரிஷி, அவனை அப்பக் குடத்தான் திருத்தலத்திற்குச் சென்று, அங்கு உறையும் திவ்விய ஞானேச்வரரைக் குறித்துத் தவம் இருக்கச் சொல்லவும், மார்க்கண்டேயர் பலாசவனம் வந்து இந்திர புஷ்கரணியில் நீராடி, மனதில் சிவபெருமானைத் தியானித்துக் கொண்டு அன்ன ஆகாரமின்றிக் கடும் தவமிருந்தார். அதைக் கண்டு மகிழ்ச்சியுற்ற சிவபெருமான் அன்னப்பறவை வடிவத்தில் வந்து. அவரது குறையறிந்து, மரணத்திலிருந்து காப்பாற்றுவதாக வாக்களித்தார். பின்னர் இந்திர மலையில் உறையும் ஸ்ரீமந் நாராயணனின் மகிமைகளை யும், பெருமைகளையும் பலவாறாகப் போற்றித் துதித்து விட்டு மார்க்கண்டேயனைப் பார்த்துக் கூறினார்;

''இப்போது உனக்கு சக்தி வாய்ந்த கவசம் ஒன்று அளிக்கப் போகிறேன். அகால மரணத்தை வெல்வதோடு அது உன் ஆயுளையும் நீடிக்க வல்லது. இக் கவசத்திற்கு ரிஷி மகாதேவன்; சந்தம் அனுஷ்டிப்பு; தேவதை ஸ்ரீமந் நாராயணன். கேசவன் உன் தலையையும், நாராயணன் சிகையையும், மாதவன் நெற்றியையும், கோவிந்தன் இரு கண்களையும், விஷ்ணுவும் மதுசூதனனும் இருநாசி, காதுத் துவாரங்களையும், திரிவிக்கிரமன் கழுத்தையும், வாமனன் மேல் உதட்டையும், ஸ்ரீதரன் கீழ்உதட்டையும், ரிஷிகேசன் பற்களையும், பத்மநாபன் நாக்கையும், தாமோதரன் இரு தோள்களையும், சங்கர்ஷணன் மார்பையும், வாசுதேவன் வயிற்றையும், பிரத்யும்னன் முதுகையும், அநிருத்தன் இரு பக்கங்களையும், புருஷோத்தமன் இடுப்பைச் சுற்றியும், அதோக்ஷர் குஹ்யஸ்தானத்தையும், நரசிம்மன் இரு துடை களையும், அச்சுதன் இரு முழங்கால்களையும், ஜனார்த்த னன் கணுக்கால்களையும், உபேந்திரன் கால்களையும், ஹரி கால் நுனிப்பிரதேசங்களையும் கிருஷ்ணன் உடல்

பூராவையும் காப்பாராக. இந்தக் கவசத்தை இந்திரனின் வச்சிராயுதமும் தகர்க்க முடியாது. இதற்கு 'பகவத் கவசம்' என்று பெயர். இதை மனதில் தியானித்து தினமும் இந்திர புஷ்கரணியில் நீராடி ஜபம் செய்துவந்தால் உன் உயிரைப் பறிக்க வரும் எமதூதர்கள் பயந்து ஓடி விடுவார்கள். அவர்களைப் பார்த்ததால் பயம் ஏற்பட்டு அதனால் உனக்கு ஏற்படும் காய்ச்சலிலிருந்து பிழைக்க நீ மீண்டும் நித்திய புஷ்கரணியில் நீராடி, திவ்விய ஞானேச்வரனை ஆயிரத்தெட்டு வில்வத்தளங்களால் அரிச்சனை செய். பூரண குணமடைவாய்'' என்று அன்னப் பறவையின் வடிவிலிருந்த சிவபெருமான் மார்க்கண்டேயரிடம் கூறிவிட்டு மறைந்தார்.

அவ்வாறே யமகிங்கரர்கள் தனது உயிரைப் பறிக்க வந்தபோது, சிவபெருமான் உபதேசித்த பகவத்கவசத்தைப் பாராயணம் செய்து, அவர்களை விரட்டி, பயத்தினால் ஏற்பட்ட காய்ச்சலிலிருந்து தப்பிக்க புஷ்கரணியில் நீராடி திவ்விய ஞானேச்வரரை வழிபட்டார் மார்க்கண்டேயர்.

பகவத் கவசத்தின் மகிமையால மார்க்கண்டேயரின் முன் நிற்க முடியாமல் ஓடிய எமதூதர்கள், ஆத்திரமும், எரிச்சலும் அடைந்தவர்களாக யமனிடம் சென்று முறையிட்டார்கள். அதைக் கேட்டு மிக்க கோபமடைந்த யமன், வலக் கையில் தண்டத்தையும், இடக்கையில் பாசக் கயிற்றையும் எடுத்துக் கொண்டு எருமை மீது ஏறியவனாய், சிவ பூஜையில் ஈடுபட்டிருந்த மார்க்கண்டேயரை நெருங்கினான். நடுநடுங்கிப் போன மார்க்கண்டேயர் வேறு கதியற்றவராய், சிவலிங்கத்தை இறுகத் தழுவிக் கொண்டார். உடனே சிவபெருமான் அவர் முன் தோன்றி, ''குழந்தாய், அஞ்சாதே. என் சூலாயுதத்தினால் யமதர்மராஜனை விரட்டிவிடுகிறேன். நீ ஆதிசேஷன் மீது படுத்திருக்கும் பரந்தாமனிடம் சென்று நீண்ட ஆயுளுக்காகப் பிரார்த்தனை செய்'' என்று அனுப்பி வைத்தார். அவ்வாறே

மார்க்கண்டேயர் அப்பால ரங்கநாதனிடம் சென்று பரம சிவன் கூறியவாறே பிரார்த்தனை செய்து நூறு முறை நமஸ்காரம் செய்தார். காருண்யமூர்த்தியான அப்பக் குடத்தான் அவருக்கு அருளாசி வழங்கி ஆட்கொண்டார்.

இந்தக் கோயிலில் கார்த்திகை சுக்ல பட்சம் கௌசிக துவாதசியன்று சிறப்பான திருமஞ்சன ஆராதனைகளுடன் திருவிழா நடைபெறுகிறது.

ஸ்ரீரங்கநாதர் திண்டுகள் போட்டுக் கொண்டு மிக சௌகரியமாகப் படுத்துக் கொண்டிருக்கிறார். உற்சவ மூர்த்திகளால் பேரழகுடன் திகழ்கின்றன. கிழக்கே கல்லணையிலிருந்து ஐந்து மைலில் இருக்கிறது இத்திருத் தலம், அன்பில் கிராமத்திற்கு எதிரில் நேர் தெற்கில் 2½ மைலில் கொள்ளிட நதியின் வடகரையில் உள்ளது.

இத்தலத்தை ஆதிரங்கம் என்று அவ்வூர்க்காரரர்கள் கூறிக் கொள்கிறார்கள். ஆதிரங்கம் என்பது ஸ்ரீரங்கப்பட்டணம் என்றும், மத்திய ரங்கன் என்பது சிவ சமுத்திரத்திலுள்ள ரங்கநாதர் என்றும், அந்த்ய ரங்கமென்பது ஸ்ரீரங்க மென்றும் கூறப்படுவதுண்டு. மாயாவரத்தை அடுத்துள்ள இந்தளூர் பரிமளக்கரை அந்த்ய ரங்கமாகவும், ஸ்ரீரங்கத்தை ஆதித்ரங்கமாகவும், குடந்தை ஆராவமுதனை மத்ய ரங்க மாகவும் குறிப்பிடுவார்கள். பூதத்தாழ்வார் ஸ்ரீரங்கத்தை தலையரங்கம் என்றும் பெருமைப்படுத்துகிறார்,

## திருச்சென்னம் பூண்டி

திருக்காட்டுப்பள்ளிக்கும் கல்லணைக்கும் இடையில் உள்ள கோவிலடித் திருத்தலம்— சைவ வைணவச் சிறப்புப்

பெற்று விளங்குவதை விளக்கும் தலபுராணத்தைப்படித்துப் பயனடைந்தோம். ஸ்ரீ அப்பக்குடத்தான் என்ற காரணப் பெயர்க் கொண்ட ஸ்ரீரங்கநாதப் பெருமான் கமலவல்லித் தாயாருடன் திருக்கோலம் கொண்டுள்ள அதே தலத்தில், சிவபெருமான் திவ்விய ஞானேச்வாரராக அகிலாண்டேச்வரி அம்பிகையுடன் எழுந்தருளியுள்ளார். உபரிசரவசு மன்னருடனும், மார்க்கண்டேயருடனும் தொடர்பு கொண்ட இவ்விரு திருச்சந்நிதிகளைத் தவிர, புராணத்தில் சித்தேச்வரர் திருக்கோயிலைப் பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளது. சித்தர்கள் நிறைந்துள்ளதால் சித்தாச்ரமம் என்றும், சித்தாரண்யம் என்றும், பலாசவனம் என்றும் அழைக்கப்படும் இப்பகுதியில் சித்தர்களுக்கு அபயமளிப்பவரும் சித்தாரண்யத்தில் விளையாடுபவரும், சித்தர்களுக்குள் முதல்வரும், சித்திகள் பெற்றவரும், அழகிய திருமேனியுடையவரும், சித்தாம்பிகையுடன் சேர்ந்திருப்பவரும், சிததேச்வரன் என்ற திருநாமம் உடையவரும், எப்போதும் மங்களமாயிருப்பவரும், எல்லா மங்களங்களுக்கும் காரணமாயிருப்பவரும், சடைமுடி தரித்தவரும், படிகம் போன்ற நிறதவரும், பராக்கிரமசாலியும், முக்கண்ணருமான சிவபெருமான் திருக்கோயில் கொண்டிருப்பதாகத் தலபுராணம் கூறுகிறது.

இத்தலத்தில் பரமசிவன் சித்தேச்வரனாகத் திருக்கோயில் கொண்டு சித்தர்களைக் காத்துக் கொண்டும், அற்புத லீலைகள் பல புரிந்து கொண்டும் எழுந்தருளியிருந்தார். ஆனால் காலப் பிரளயத்தில் அக் கோயில் மூழ்கி, மறைந்து போயிற்று. அக்கோயிலை மீண்டும் உருவாக்கத் திவ்விய ஞானேஸ்வரர் திருவுளம் கொண்டார். பிரம்மஹத்தி பாவம் நீஙகும் பொருட்டுத் தன்னைக் குறித்துத் தவமிருந்த உபரிசரவசு மன்னனை அதற்குக் கருவியாக்கிக் கொண்டார். விரித்திராசுரனைக் கொன்ற பாவத்திலிருந்து மீட்பதற்காகப் பிரம்மா இந்திரனுக்கு உபதேசித்த அஷ்டாக்ஷர மந்திரத்தை உபரிசரவசுவுக்கு உபதேசித்

அருளினார். பக்தியோடு அதை ஜபித்து, சித்தேச்வரரைப் பிரதிட்டை செய்து, பிரம்மஹத்தி தோஷத்திலிருந்து விடுபட்டான் மன்னன்.

அந்தக் கோயில், கோவிலடிக்கு வடக்கே ஒன்றரை கிலோ மீட்டர் தொலைவில், கொள்ளிடத்தின் தென் கரையில் அமைந்திருக்கிறது. அங்கு உறையும் பெருமான் சித்தேச்வரர் என்றும் அம்பிகை சித்தாம்பிகையென்றும் புராணச் சிறப்பு மிக்க திருநாமங்கள் பூண்டிருக்கிறார்கள்.

தற்போது அந்த இடம் **திருச்சென்னம்பூண்டி** என்று அழைக்கப்படுகிறது. இது முற்காலத்தில் திருப்பேர் நகர் என்று அழைக்கப்பட்ட கோவிலடியைச் சார்ந்த சிற்றூராக விளங்கியிருக்கிறது.... தற்போது கோயில் அருகில் குடியிருப்பு ஏதுமில்லை. ஊர் இருப்பதாகவும் தெரியவில்லை... பல்லவர் காலக் கோயில் ஒன்று இடிந்து போய், தொல் பொருள் ஆய்வுத் துறையினரால் பாதுகாக்கப்படும் சின்னமாக நின்று கொண்டிருக்கிறது. கொள்ளிடத்தின் வெள்ளக் கொடுமைக்கு இலக்காகி, அதன் சீற்றத்திற்கு இரையாகிப் போயிருக்குமோ என்னவோ!

கோவிலடியிலிருந்து திருச்சென்னம்பூண்டி செல்வதற்கு பஸ் பாதையோ, வண்டிப் பாதையோ கிடையாது. வயல் வரப்புகளில் ஏறி இறங்கி, ஓடைகளையும், வாய்க்கால்களையும் தாவித் தாவித்தான் செல்ல வேண்டும். வெளிச்சத்தோடு போய்விட்டுத் திரும்புவதே நல்லது!

கோவிலடி திவ்விய ஞானேச்வரர் ஆலயத்தின் அர்ச்சகர் வழி காட்ட, நாங்கள் நடந்து சென்றோம். வழியில் லாங் ஜம்ப், ஹைஜம்ப் எல்லாம் பழகிக் கொண்டே செல்ல வேண்டியிருந்தது. அங்கங்கே சதுப்பு நிலத்தில் சறுக்கி விழாமல் சாமர்த்தியமாக 'பாலன்ஸ்' செய்யவும் வேண்டியிருந்தது. சுற்றிச் சுற்றி, வளைந்து வளைந்து சென்றதால் வெகு தொலைவு செல்வது போலிருந்தது.

கோயிலுக்குச் சென்றதும் நம்மை வரவேற்பது ஒரு போர்டு. அது தொல் பொருள் ஆய்வுத் துறையினரின் உபயம்! அதைப் படித்தால் கீழ்க்கண்ட செய்திகளை அறிய லாம்....

இக்கோயிலில் உறையும் சுவாமி திருக்கடைமுடி மகாதேவன் என்றும் திருச்சடைமுடி மகாதேவர் என்றும் அழைக்கப்படுகிறார். (ஏனோ இறைவியின் பெயர் குறிப் பிடப்படவில்லை!) ஊரின் இன்றைய பெயர், திருக்கடை முடி. நாட்டுப் பிரிவு, தென்கரை இடையாற்று நாடு. இக் கோயிலுடன் தொடர்புடைய மன்னர்கள், தெள்ளாற்றெ றிந்த நந்தி நிருப தொங்க வர்ம பல்லவன். பராந்தக சோழன், — முத்தரையர் — கோ இளங்கோ முத்தரையர்.

இக்கோயில் கட்டப்பட்ட காலம் ஒன்பதாம் நூற் றாண்டு. ஊர்ச் சபையார், அறுகை வணிகர், ஓடக்காரர். வேளாலர் இன்னும் பிறர் இக்கோயிலில் நொந்தா(1) விளக்கெரிக்கப் பொன் அளித்துள்ளனர்! (தற்போது விளக் கொன்றும் எரியவில்லை. இருப்பினும் அவர்களது பொன் மனம் வாழ்க!)

தெள்ளாற்றெறிந்த நந்தி வர்மரின் மாதேவி, அடிகள் கண்டன் மாறன் பாவை என்பவள், மாசி மகத் திருவிழா நடைபெறப் பொன் கழஞ்சுகள் அளித்துள்ளாள். பழு வேட்டைரையர் மகள் பராந்தகன் தேவி அருள்மொழி நங்கை என்பவள் பரிசுகள் அளித்திருக்கிறாள். இந்தக் கோயிலில் மொத்தம் இருபத்தொரு கல்வெட்டுக்கள் உள்ளன.

தொல் சிறப்புக்கள் பெற்று விளங்கும் இக்கோயில் தற்போது தொல்பொருள் ஆய்வுத் துறையினரின் கருணை யால் இந்த நிலையிலாவது நின்று கொண்டிருக்கிறது. இடிந்து, சரிந்து, புதர்கள் மண்டி. மண் மூடியிருந்த கற்

கோயிலை மீட்டு, செப்பனிட்டு, அவர்கள் பாதுகாத்து வருகிறார்கள்.

முன் மண்டபம் இடிந்து விழுந்திருக்கிறது. விமான கோபுரம் மூளியாகியிருக்கிறது. கருவறை மண்டபத்தின் வெளிப் புறம் இராமயணச் சிற்பங்கள் செதுக்கப்பட்டிருக் கின்றன. அம்மனுக்குத் தனிக் கோயில் இருக்கிறது.

வெள்ளிதோறும் பூஜை நடைபெறுவதாகவும், விசேஷ நாட்களில் முடிந்த அளவு அபிஷேக ஆராதனைகள் செய்ய பட்டு வருவதாகவும் அறிந்தோம்,

திருக்காட்டுப்பள்ளிப் பகுதியில் சில ஆலயங்களுக்கு உடன் வந்ததோடு, திருச் சென்னம்பூண்டியிலுள்ள இப் புராதனக் கோயிலைப் பற்றி எனக்குச் செய்திகள் சேகரித் துத் தந்து உதவி புரிந்தவர் திருக்காட்டுப்பள்ளி சர். சிவசுவாமி ஐயர் உயர்நிலைப் பள்ளி தமிழ்த் துறையில் பணியாற்றி வரும் புலவர் சண்முக மாரி ஐயா. அவரது ஆர்வமும், புலமையும், இலக்கியத்திலும், வரலாற்றிலும் இறையுணர்விலும் அவருக்குள்ள ஈடுபாடும், எல்லாவற் றிற்கும் மேலாகத் தன்னடக்கமும் இக்கால இளைஞர் களுக்கு நல்ல உதாரணங்களாகும். தாங்கள் வாழும் பகுதி யைப் பற்றிய பழம் பெருமைகளை ஆராய்ந்தறிவதோடு, அக் குறிப்புகளைச் சேகரித்து, பிற்கால சந்ததியினருக்காக அவற்றை எழுதி வைப்பது அரும் பெரும் பணியாகும். இவ்வகையில், மறைந்த பேராசிரியர் பத்தன் எஸ். ஆர். பாலசுப்பிரமணியம், மறையாத பயனுள்ள தொண்டு புரிந் திருக்கிறார். அவரது ஆராய்ச்சி நூல்கள் நமது கோயில் களின் மகிமைகளையும், சமயப் பணி புரிந்த மன்னர்களின் பெருமைகளையும், நமது பண்டைய கலைச் செல்வங்களின் சிறப்பியல்புகளையும் கோடிட்டுக் காட்டுகின்றன. அவர் விட்டுச் சென்ற பணியை ஆர்வமுள்ளவர்கள் தொடர வேண்டும். ஆலய தரிசனம் மேற்கொள்பவர்களுக்கு இது பயனுள்ள வழிகாட்டியாக அமையும்.

இப்பகுதிக்குத் திருச்சென்னம்பூண்டி என்று பெயர் ஏற்பட்டதற்கு ஒரு காரணம் கூறப்படுவது உண்டு. புலவர் பொய்கையாரைச் சேர அவையிலிருந்து சோழ அவைக்குப் பெறுவதற்காக நடந்த போர் இப்பகுதியில்தான் நிகழ்ந்த தாம். போரின் மூலம் புலவர் பொய்கையார் 'களவழி நாற்பது' பாடல்களைப் பாடித் தமிழுக்கு ஆக்கமளித்தார். சென்னன் (சோழன்) வெற்றி பூண்ட இடம் 'சென்னன் பூண்டி' என்று வழங்கி, சென்னம் பூண்டியாகி, திரு என்னும் அடைமொழி சேர்க்கப்பட்டு, திருச்சென்னம் பூண்டி என்று வழங்கலாயிற்று.

இக்கோயில் பெரிய புராணத்தில் 'சடை முடியார் பயில்பதி' என்று திருஞானசம்பந்தர் வரலாற்றில் குறிக்கப் பட்டுள்ளது. சம்பந்தர் தமது தேவாரத்தில் 'கடை இடைப் புனல் வைத்த சதுரன் இடம் கடைமுடி அதன் அயல் காவிரியே' என்றும் 'பொன் திகழ் காவிரிப் பொருபுனல் சீர் சென்றடை கடை முடி' என்றும் கூறுகிறார்.

சம்பந்தர் காவிரி வடகரைத் தலங்களைத் தரிசித்து வரும் போது மேற்கு நோக்கி வருகிறார். மழபாடி திருக் கானூர்' அன்பில்லாந்துறை இவற்றை வணங்கிப் பாடி, சடை முடியார் பயில் பதியும் பணிந்து பாடி, வடகரை அணைந்தார்' என்று கூறுகிறார் சேக்கிழார்.

கல்வெட்டுகளில், திருக்கடைமுடி மகாதேவர் கோயில் என்றிருப்பது, தேவாரத்தில் சடைமுடியார் கோயில் ஆயிற்று, இறைவியின் திருநாமம் — அபிராமியம்மை.

## பூதலூர் — கோயில்பத்து

பூதலூர், திருக்காட்டுப்பள்ளிக்கு அருகில், அதன் தெற்கேயுள்ள சிற்றூர். தஞ்சை-திருச்சி ரயில் பாதையில்

ஸ்டேஷன் இருக்கிறது. அங்கு சென்றால் விஜய கோதண்ட ராமனைத் தரிசிக்கலாம் சிறிய கோயிலாக இருந்தாலும் ஸ்ரீராமபிரானின் அருள் வெள்ளத்தால் நிறைந்திருக்கிறது. அடித்தளம் கருங்கல்லால் ஆனது. அழகான பெரிய விமான கோபுரத்தில் விளங்கும் சுதை பிம்பங்கள் அருமையாக இருக்கின்றன. நவராத்திரி, ஸ்ரீராம நவமி நாட்களில் முறையான உற்சவங்கள் நடைபெறுகின்றன.

பூதலூரில் இரண்டு சிவாலயங்கள் இருக்கின்றன. ஒன்று மிகப் பெரியது! மற்றொன்று மிகச் சிறியது. இரண்டுமே அர்ச்சகர் பி.கே. நாராயணசுவாமி குருக்களின் ஆர்வத்தாலும் பக்தியாலும் சிரத்தையாலும் பூஜையற்றுப் போகாமல் காப்பாற்றப்பட்டு வருகின்றன என்பதை நேரில் கண்டேன்.

கோயில்பத்து என்ற பெயர் கொண்ட அடுத்த கிராமத்தில் பெரிய சிவன்கோயில் இருக்கிறது. தனிக் கிராமமாக இன்று கருதப்பட்டாலும், முன்பு இரண்டும் ஒரே ஊராகத்தான் இருந்திருக்கின்றன. முன் காலத்தில் பூதலூர் கோயில்பத்துக்கு அந்தணர் வீதியாகத் திகழ்ந்திருக்கிறது.

பூதலூர் பெருமாள் கோயிலிருந்து ஒன்றரை பர்லாங் தொலைவிலிருக்கிறது கோவில் பத்து சிவாலயம். அதைக் காணும் வரை இச்சிறு கிராமத்தில் இத்தனை பெரிய கோயிலைக் காணப் போகிறோம் என்று நினைத்துக்கூடப் பார்க்கவில்லை. எல்லா குக்கிராமங்களிலும் இருப்பது போன்ற ஒரு சிறிய கோயிலைத்தான் கற்பனை செய்து கொண்டு சென்றேன். ஆனால்... ஆனால்! பண்டையப் பெருமைகளைப் பறைசாற்றிக் கொண்டு, பிரமாண்டமானதொரு கோயில் காட்சி தந்ததைக் கண்டு பிரமித்துப் போனேன். அதே நேரத்தில், கேட்பாற்று, கவனிப்பாரற்று, சுவர்களெல்லாம் இடிந்து, காரைகள் உதிர்ந்து, மண்டபங்கள் பிளந்து, முட்புதர்கள் மண்டி, பரிதாப

நிலையில் அந்தப் புராதன ஆலயம் நின்று கொண்டிருந்த போது நெஞ்சு குமுறத்தான் செய்தது.

அடேயப்பா! எத்தனை அகலமான வெளிப்பிராகாரம்! சில கேரள ஆலயங்களில் உற்சவ காலங்களில் பத்துப் பன்னிரண்டு யானைகள் ஒரே வரிசையில் அலங்கார பவனி வருவதற்கு ஏற்றவாறு பிராகாரங்கள் அமைந்திருப்பதைப் போல் இந்தக் கோயிலின் பிராகாரம் காட்சியளிக்கிறது. ஆனால் இன்று அந்தப் பிராகாரத்தை வலம் வர முடியாது. அடர்ந்த காடுபோல் மரம், செடிகள் வளர்ந்திருக்கின்றன.

நாங்கள் உள் கோபுரத்தின் வெளியே நின்று பார்த்தோம். தொலைவில் மொட்டைக் கோபுரம் ஒன்று தெரிந்தது. இந்தக் கோயிலுக்கு ராஜகோபுரம் கட்டுவதற்காக யாரோ அதை எழுப்பியிருக்கிறார்கள். அது பாதியிலேயே நின்று போய் 'ராயகோபுரமாக—மொட்டை கோபுரமாக'— அப்படியே நின்று கொண்டிருக்கிறது. அதன் மீது சிறு காடு ஒன்று வளர்ந்திருக்கிறது! அத்தனை பெரிய கோபுர வாயிலுக்கு எத்தனை உயரமான மதிற் சுவர்கள் இருந்திருக்க வேண்டும்! இது எத்தனை பிரமாண்டமான கோயிலாகத் திகழ்ந்திருக்க வேண்டும்!

வெளிப் பிராகாரத்தில் அம்பாள் சந்நிதி தனிக் கோயிலாக இருந்திருக்கிறது. ஆனால், அது தற்போது இடிந்து போய், மரம், செடிகளால் சூழப்பட்டிருக்கிறது. அம்பாள் சிலை அங்கிருந்து அகற்றப்பட்டு சுவாமி கோயிலில் நந்தி மண்டபத்தில் வைக்கப்பட்டிருக்கிறது. பெரிய, அழகிய அபூர்வ சிலை!

வெளிப் பிராகாரத்திலிருந்து உட் பிராகாரத்திற்கு ஒரு கோபுர வாயிலைக் கடந்துதான் செல்ல வேண்டும், அந்தக் கோபுரம் அத்தனைச் சிதிலமடையவில்லை. பெரிய மண்டபங்கள் பாழடைந்து காணப்பட்டாலும் அவை யனைத்தும் ஓரளவு பழுது பார்க்கப்பட்டிருக்கின்றன.

அந்த வேலைகள் அனைத்தையும் முடித்து, மருந்து சாத்தி சிறிய அளவில் அண்மையில் திருப்பணி செய்யப்பட்டிருக்கிறது.

ஸ்ரீ ஆபத்சகாயர் திருச்சந்நிதிக்கு வெளியே பெரிய கணபதி அமர்ந்திருக்கிறார். அவர் முன்பு வெளிப் பிராகாரத்தில் அவருக்குரிய மூலையில் இருந்தவர். அந்த சந்நிதி சீலமடைந்து விட்டதால், அந்தக் கணபதிக்கு இங்கே அடைக்கலம் தந்திருக்கிறார்கள்! இக்கோயிலுள்ள தட்சிணாமூர்த்தி நம் கவனத்தைக் கவருகிறார். அவர் வலக் கால் பாதத்தை நேரே வைத்துக் கொண்டிராமல் பக்கவாட்டில் வைத்திருப்பது அபூர்வமாயிருக்கிறது. சூரியன், பைரவர், நவக்கிரஙகள், பெரிய சண்டிகேச்வரர் அனைத்துச் சிலைகளுமே அழகிய வடிவங்கள்.

இக் கோயிலில் சோழர் காலக் கல்வெட்டுகள் நிறைய இருக்கின்றன. பின்னர் புலவர் சண்முக மாரி ஐயாவுடன் பேசிக் கொண்டிருந்தபோது, சில சரித்திரச் செய்திகள் கிடைத்தன.

கி பி. 1178 முதல் 1218 வரை சோழ நாட்டை ஆண்ட திரிபுவன சக்கரவர்த்தியாகிய மூன்றாம் குலோத்துங்கனின் அரசியல் அதிகாரிகளில் ஒருவனாகிய பாண்டிய குலாசனி வள நாட்டு—எயில் நாட்டு—வளம்பக்குடி என்னும் ஊரைச் சார்ந்த திருநட்ட மாடியான விசயாலய முத்தரையன் இக் கோயிலைக் கட்டினான். அரசரின் மீது இவன் வைத்திருந்த பற்றின் காரணமாக இக் கோயிலுக்குக் 'குலோத்துங்க சோழீச்வரமுடையார் கோயில்' என்று பெயரிட்டான். இக் கோயிலுக்கு சரபோஜி மன்னர் அபிஷேகக் கட்டளைக்காக ஒரு வேலி நிலம் வைத்துள்ளார்.

சடாவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் இவ்வூர்ச் சபையார்க்கு இக்கோயிலுக்காகச் சில நிலங்களும் வழங்கப் பட்டுள்ளன.

'வளம்பக்குடி' என்னும் சிற்றூர் பூதலூருக்கு அருகில் உள்ளது. இங்கு வாழ்ந்த குடிமகன் ஒருவன் அரசனுக்காக இத்தனை பெரிய கோயில் எழுப்பியிருப்பது, அவனுக்கு மன்னன் மீது இருந்த பெருமதிப்பைக் காட்டுகிறது.

இந்த வளம்பக்குடி முத்தரையன்தான் திருவையாறு சப்த ஸ்தானத் தலங்களில் ஒன்றான திருப்பழனம் ஆலயத்தில் திருக்காமக் கோட்டத்தையும் கட்டியவர். அக் கோயிலில் உறையும் சுவாமியின் பெயரும் ஆபத்சகாயர் தான்.

பூதலூரின் மற்றொரு சிவன் கோயில் பஸ் பாதையின் மேற்குப்புறத்தில் வயல்களுக்கு நடுவே உள்ளது. வாய்க் காலைக் கடந்து செல்ல வேண்டும். நாராயண சுவாமி குருக்கள் எங்களை ஜாக்கிரதையாக அழைத்துச் சென் றார். அவரைத் தவிர அங்கு வேறு யாராவது வருகிறார் களா என்பதே சந்தேகம். சிறிய கோயில்; எதிரில் பெரிய திருக்குளம். நாகநாதேச்வரரும், விசாலட்சியும் உறையும் அக் கோயிலைச் செப்பனிட்டு தரையைப் பூசி, விரிசல் களைப் பழுது பார்த்து ஓரளவு காப்பாற்றி வருபவர் நாராயண சுவாமி குருக்கள். எல்லாம் அவருடைய சொந்தத் திருப்பணி. அருகிலுள்ள மேட்டில் இருக்கும் சாஸ்தா கோயிலுக்கும் இவர்தான் அர்ச்சகர்.

அவர் ஒரு பழைய கதையைக் கூறினார்.

அரசர் காலத்தில் இங்கு நெசவுத் தொழிலாளர் குடும்பங்கள் நிறைய இருந்தன. அவர்கள் அனைவரும் பெரும் பணக்காரர்கள். தங்கள் வீடுகளிலெல்லாம் பெரிய விளக்குகள் ஏற்றி வைப்பது வழக்கமாம்.

ஒரு நாள் அரசர் அவ்வழியே திருக்காட்டுப் பள்ளிக்குச் சென்று கொண்டிருந்தார். தொலைவிலிருந்து விளக்கு ஒளியைப் பார்த்தவர், 'அது என்ன கோயில்?' என்று

கேட்டாராம். 'கோயில் இல்லை, வீடுகள்' என்று மந்திரி கூறியபோது, குடிமக்களில் ஒருபகுதியினர் இவ்வளவு ஆடம்பரமாக வாழ்கிறார்களா என்று ஆத்திரம் கொண்டா னாம் அந்த மன்னன். உடனே அவர்களது வீடுகளையெல் லாம் அழித்து விடும்படி உத்தரவிட்டான். நெசவாளர் களெல்லாம் உயிருக்குப் பயந்து, எல்லையைக் கடந்து சென்று முசிறிக்கு அருகில் குடியேறி விட்டார்கள். அந்தப் பரம்பரையைச் சேர்ந்தவர்கள். இன்றும் ஒவ்வோர் ஆண்டும் பூதலூருக்கு வந்து தங்கள் குல தெய்வ மான ஐயனாருக்கு அபிஷேக ஆராதனைகள் செய்து விட்டுப் போகிறார்கள்.

பூதலூரில் நாராயணசுவாமி குருக்கள் செய்து வரும் தெய்வத் திருப்பணி போற்றுதற்குரியது. இந்த நற்பணி யில் அவருடைய குமாரர் சுப்பிரமணியம் தந்தைக்குப் பெருமளவு உதவி புரிந்து வருகிறார். தங்கள் வறுமையை யும் பொருட்படுத்தாமல், வீட்டையும், குடும்பத்தையும் காட்டிலும் கோயிலையே முக்கியமாகக் கருதி சரீரத்தாலும் பணததாலும் தொண்டு புரிந்து வரும் ஓர் தந்தையையும் மகனையும் காண்பது அரிதிலும் அரிது.

கோயில்பத்து சிவன் கோயிலில் உறைபவர் ஆபத்சகா யேச்வரர். அம்பிகை, ஆனந்தவல்லி, இவர்களது கோயி லுக்கு ஆபத்து ஏற்பட்டு விட்டதே என்று மனம் உடைந்து போய், இந்த உத்தம அர்ச்சகர், தன்வாலான சகாயம் செய்து ஆனந்தமடைந்து வருகிறார். படிக்காசு நாயனார் சரித்தைப் படித்து நெஞ்சம் நெகிழ்ந்த ஒவ்வொருவரும் நம் வாழ்நாளிலும் தன்னலம் கருதாது தெய்வத் தொண்டு புரியும் அர்ச்சகர் ஓரிருவர் இருக்கிறார்கள் என்பதைக் கண்டு புளகிதம் அடைய வேண்டும் என்பதற்காகவே இதைக் குறிப்பிடுகிறேன். செந்தலை ராமமூர்த்தி பட்டாச் சாரியாரும், பூதலூர் நாராயண சுவாமி குருக்களும், குட விளக்காய் வாழ்ந்து கொண்டிருக்கும் பிற அர்ச்சகர்களும்

நம் நன்மதிப்பிற்கும் நன்றிக்கும் உரியவர்கள். எங்கோ ஒரு குக் கிராமத்தில், எந்தவிதப் பிரதிபலனும் எதிர்பாராமல் அமைதியாக, ஆர்வமுடன் கடவுள் பணி புரிந்து கொண்டிருக்கும் இத்தகைய அர்ச்சகர்களை 'தெய்விகத் தியாகிகள்' என்று அழைப்பதில் தவறில்லை.

இத்தனை பெரிய கோயில் இந்தக் கதியில் இருக்கிறதே என்றுவேதனைப்பட்ட நான், இம் மாதிரியான தியாகிகள் இருக்கும்வரை ஆண்டவன் கதியற்றுப் போய்விடமாட்டான் என்ற உறுதியான நம்பிக்கையோடு பூதலூரிலிருந்து திரும்பினேன்.

தஞ்சை மாவட்டத்தில் கிராமம் கிராமமாக நுழையும் போதுதான், சிறு கோயில்களெல்லாம் ஆதரிப்பாரற்றுப் பாழடைந்து இருக்கும் நிலைமையைக் காண முடிகிறது. பொதுவாகச் செல்வம் குறைந்து விட்டாலும், செல்வாக்கோடு வாழ்ந்தவர்கள் மறைந்து விட்டாலும், கிராமத்தைச் சேர்ந்த செல்லக் குழப்தைகள் பிழைப்புத் தேடி வெளியூர்களுக்கும், வெளிநாடுகளுக்கும் குடிபெர்ந்து சென்றுவிட்டாலும் தற்போது அங்கு வசித்துக் கொண்டிருப்பவர்கள் தமது கோயில்களை நல்லமுறையில் பாதுகாக்கவேண்டும். பழுது பார்த்து, திருப்பணி செய்து எப்படியாவது குடமுழுக்குச் செய்துவிட வேண்டும் என்ற ஆர்வத்தோடு இருக்கிறார்கள். பெரியவர்களை விட இளைஞர்களுக்கு இந்தத் தாபமும் உற்சாகமும் அதிகம் இருப்பதைக் காணும்போது நம்பிக்கை பிறக்கிறது. ஒரு கிராமத்தைப் பற்றிப் படித்ததும், 'எங்கள் கிராமத்துக்கும் வரத் தவறாதிர்கள். எங்கள் கோயிலைப் பற்றி எழுதுங்கள் அதைப் படித்துவிட்டு வெளியூர்களில் வசிக்கும் எங்கள் கிராமத்தாருக்கு அக்கறை பிறக்கும். கேட்பாரற்றுக் கிடக்கும் கோயில்களுக்குக் கதி மோட்சம் ஏற்படும்' என்று ஆதங்கத்தோடு எழுதுகிறார்கள். இந்த விழிப்பு உணர்ச்சியும் மறுமலர்ச்சியும் உற்சாகப் படுத்தப்பட வேண்டிய ஒன்றல்லவா? பல கிராமக் கோயில்

களில் தலபுராணம் என்று குறிப்பிட்டுக் கூறும்படி எதுவும் இல்லையென்றாலும், இறையுணர்வைத் தூண்டவும் பக்தி இயக்கத்தைப் பெருக்கவும் ஆன்மிக வாழ்வுக்கு அடித்தளம் அமைக்கவும் நமது கோயில்கள் நல்ல முறையில் பராமரிக்கப்பட வேண்டியது மிகமிக அவசியமானதால் அதை சீரோடும் சிறப்போடும் விளங்க நம்மால் முடிந்ததைச் செய்யக் கடமைப்பட்டிருக்கிறோம்.

காவேரிக்கு அக்கறையிலுள்ள நாங்கள் புதுச்சத்திரம் கிராமத்திற்குச் சென்று கொண்டிருந்தோம். எதிரில் சற்று வாடிய முகத்துடன் அன்பர் ஒருவர் வந்தார். அடுத்த கிராமமான நேமத்தைச் சேர்ந்தவர் அவர். பெயர் ஐராவதம் என்று நண்பர் யக்ஞராமன் அறிமுகம் செய்து வைத்தார். நேமம் சிவாலயத்தில் உறையும் சுவாமியின் திருநாமம் ஐராவதேச்வரர்.

"ஒன்றும் நினைத்துக் கொள்ளக் கூடாது; நேமம் சிவன் கோயிலைப் பற்றிய தலபுராணத்தை நன்றாக எழுதினீர்கள். ரொம்ப மகிழ்ச்சி. ஆனால், எங்கள் விநாயகர் கோயிலை விட்டு விட்டீர்களே. நாங்கள் அதை நல்ல முறையில் நடத்தி வருகிறோம். அவரைத் தரிசிக்காமல் வந்து விட்டீர்களே" என்று குறைப்பட்டுக் கொண்டார் அந்த அன்பர். அவருடன் சென்றோம்.

உண்மையிலேயே, களை பொருந்திய, ஒளி நிரம்பிய சக்தி மிகுந்த சந்நிதிதான். ஆகமமுறை வழுவாமலும் நித்திய ஆராதனைகளும், நியமம் தவறாமல் மாத, வேத மந்திரங்கள குறையாமலும் வருட உற்சவங்களும் அங்கு நடபெற்று வருவதை அறிந்தபோது மகிழ்ச்சியாயிருந்தது. ஒவ்வொரு மாதமும் ஸ்ரீ காஞ்சி பெரியவர்களின் அனுஷ நட்சத்திரத்தன்று பால மகா கணபதிக்கு அபிஷேகம், அர்ச்சனை முதலியவை செய்யப்பட்டு வருவதை அறிந்த

போது அக்கிராம மக்களின் ஆசாரிய பக்தி நன்கு விளங்கியது.

# புதுச்சத்திரம்

புதுச்சத்திரம். கோவிலடிக்கும் விஷ்ணம்பேட்டைக்கும் இடையேயுள்ள சிறு கிராமம். அங்கு ஸ்ரீ வேணுகோபால சுவாமி பெருமாள் கோயிலும், ஸ்ரீ விச்வநாதர் சிவன் கோயிலும் இருக்கின்றன. பெருமாள் கோயில் ஓரளவு காப்பாற்றப் பட்டிருக்கிறது. ஆனால், சிவன் கோயிலில் பூஜை சரியாக நடப்பதாகத் தெரியவில்லை. மனித நடமாட்டம் அதிகம் இல்லாத காரணத்தால் விளையாட்டுச் சிறுவர்கள் சுவர் ஏறிக் குதித்து, கோயிலில் கும்மாளம் அடிப்பதாக உள்ளூர்க் காரர் கூறி வருத்தப்பட்டுக் கொண்டார். தற்போது கோயிலை நிர்வகிப்பவர் மனது வைத்தால், சொந்தச் செலவிலேயே இதை நல்ல முறையில் நடத்த முடியும் என்று அவர் கூறினார். பாஸ்காரன் என்ற இளைஞரைச் சந்தித்தேன். அவர் அக்கிராமத்தில் நற்பணிமன்றம் ஒன்று நடத்தி வருகிறார். 'உங்கள் கிராமத்திற்குத் தற்போது மிகவும் தேவையான நற்பணி, ஆலயப் பணிதான்' என்று நான் அவரிடம் கூறியபோது, தோழர்களுடன் கலந்தாலோசித்து முடிந்ததைச் செய்வதாக உறுதியளித்தார்.

ஊருக்கு ஊர் பக்தியுள்ளமும் நல்லொழுக்கங்களும் கொண்ட இளைஞர் இருக்கத்தான் செய்கிறார்கள், முதல் நாளன்று கோயில்பத்து கிராமத்தில், மார்கழி மாதம் கோயிலில் இசைத் தட்டுகளை ஒலிபரப்பப் போவதாகக் கூறி சில இளைஞர்கள் நோட்டுக்குடன் வந்து நன்கொடை கேட்டார்கள். அவர்களிடம் ''அதுவும் செய்யுங்கள், அப்படியே பிராகாரத்தைச் சுத்தம் செய்ய உதவி

புரியுங்கள். நீங்கள் செய்வதைப் பார்த்து இன்னும் சிலபேர் வந்து உங்களுடன் சேருவார்கள். நம் மனதை மட்டும் ஆண்டவனுக்கு அடிமையாக்கி விட்டால் போதாது. பக்தியுடன் இருப்பது மட்டும் போதாது. அவன் கொடுத்த சரீரத்தையும் அவன் சேவைக்கு அர்ப்பணிக்க வேண்டும்'' என்று நான் எடுத்துக்கூறியபோது, அவர்கள் ஆலய சேவை செய்வதாக ஒப்புக் கொண்டார்கள்.

## விஷ்ணம்பேட்டை

புதுச் சத்திரத்திலிருந்து நாங்கள் விஷ்ணம்பேட்டை கிராமத்திற்குச் சென்றோம். அங்கு உறையும் பெருமாள் ஸ்ரீ சந்தான வேணுகோபால சுவாமி. ருக்மிணி சத்திய பாமாவுடன் எழுந்தருளியுள்ளார். உற்சவரின் திருநாமம் ஸ்ரீ ராஜகோபாலன்.

ஸ்ரீராம நவமி உற்சவத்திற்குத் தனி உற்சவமூர்த்தி இருக்கிறது. இந்தக் கிராமத்தில் உறியடி உற்சவம் தவறாமல் நடைபெற்று வருகிறது. மண்டபத்தில் அழகான கருடன் இருக்கிறர். முன்னால் இருக்கும் தகரக் கொட்டகையைப் பிரித்து அழகிய முன் மண்டபம் ஒன்று கட்டினால் எத்தனை நன்றாக இருக்கும் என்று மனதிற்குள் நினைத்துக்கொண்டேன். கருவறை விமானத்திலுள்ளசிற்பங்களும், முகப்பு மண்டபத்தின் மேலேயுள்ள ஸ்ரீ வேணுகோபால சுவாமியின் பிம்பமும் அழகாக இருக்கின்றன.

விஷ்ணம்பேட்டை சிவன் கோயிலில், அன்னை காமாட்சியிடன் ஸ்ரீ கைலாசநாதர் எழுந்தருளியுள்ளார். சுவாமி சந்நிதி சற்று உயரத்தில் இருக்கிறது. மூல சந்நிதியின் அடித்தளம் கருங்கல்லால் ஆனது. கணபதி,

சுப்ரமணியர் சந்நிதிகள் தனி விமானத்துடன் விளங்கு கின்றன. நன்றாகக் கவனிக்கப்பட்டும் வரும் அழகிய கோயில். தூண்களில் உள்ள சிற்பங்களும் சிறப்பாக இருக் கின்றன. பூஜை நல்ல முறையில் நடைபெற்று வருகிறது. திருவாதிரை, வருஷப் பிறப்பு தினங்களில் சுவாமி புறப்பாடு உண்டு. அங்கு செல்லியம்மனும் கோயிலும் உண்டு.

சிவன் கோயிலுக்குக் கிழக்கே கிராம தேவதையான செல்லியம்மன் கோயில் இருக்கிறது.

## பவனமங்கலம்

விஷ்ணம்பேட்டையிலிருந்து கூத்தூர் சென்று கொண் டிருந்தபோது, இடப்புறம் புதிய வண்ணங்கள் தீட்டப் பட்ட ஒரு கோபுரம் பளிச்சென்று தெரிந்தது. காரை நிறுத்தி விசாரித்தபோது, அது பவனமங்கலம் என்று அறிந்தோம். சென்று பார்த்தபோது, அது பொன்னி அம்மன் கோயில் என்று தெரிந்தது. அம்மனைத் தவிர, அங்கு ஐயனார், மதுரைவீரன், கருப்புசாமி சந்நிதிகளும் உள்ளன. எதிரில் குளம் ஒன்று இருக்கிறது. நான்கு வருடங்களுக்கு முன் கும்பாபிஷேகம் செய்திருக்கிறார்கள். அங்கிருந்த ஓர் அம்மாள் இந்த விவரத்தை உற்சாகத்துடன் கூறினார்.

கிராமத்தில் சிவன், பெருமாள் கோவில்கள் உண்டா என்று விசாரித்தபோது, ''விஷ்ணம்பேட்டையில் இருக்கிற சிவன், பெருமாள் கோவில் தாங்க எங்களுக்கும். இங்கே ஒரு பெருமாள் கோவில் இருக்குதுங்க. ஆனா, அதுலே பூஜை கிடையாது. புள்ளையார் கோயில் இருக்குதுங்க'' என்றார் அந்த அம்மாள்.

# திருக்கானூர்

கூத்தூர் கிராமத்துக்குச் செல்லும் முன் நாம் திருக்கானூர் திருத்தலத்தைத் தரிசிக்கப் போகிறோம். விஷ்ணம் பேட்டையிலிருந்து இரண்டு கிலோ மீட்டர் வடக்கே, கொள்ளிடக்கரையில் இருக்கிறது அக் கோயில். மிகமிகப் பழமையான அக்கோயில் தற்போது புத்தம் புதியதாகக் காட்சி தருகிறது.

பாடல் பெற்ற தலங்களில் இது ஐம்பத்தாறாவது தலமாகும். பெரிய புராணத்தில் சம்பந்தர் வரலாற்றில் அவர் இங்கு வந்து தரிசித்துப் பதிகம் பாடிய செய்தி 'அதன் மருங்கு கடந்தருளால் திருக்கானூர் பணிந்தேத்தி ஆன்ற சைவ முதன்மறையோர் அன்பிலாலந் துறையின் முன்ன வனைத் தொழுது போற்றி...!' என்று குறிக்கப்படுகிறது.

இக்கோயிலில் திருஞானசம்பந்தர் ஒரு பதிகமும் திருநாவுக்கரசர் சுவாமிகள் ஒரு பதிகமும் பாடியுள்ளனர். ஊர்த்தொகையில் சுந்தரர் '...கருகற் குரலாய் வெண்ணிக் கரும்பே கானூர்க் கட்டியே பருகப் பணியாய் அடியார்க் குன்னைப் பவளப் படியானே...' என்று கூறுகிறார்.

சுவாமியின் திருநாமம், கரும்பேச்வரர். அம்பிகை, சௌந்தரநாயகி. தலபுராணத்தில், அம்பிகை சிவயோகத்தில் ஆழ்ந்திருந்த போது, ஈச்வரன் ஜோதிப் பிழம்பாய்த் தோன்றித் தரிசனம் அளித்ததாகக் கூறப் பட்டுள்ளது. அதனால், சுவாமிக்குச் 'செம்மேனிநாதர்' என்றும், அம்பாளுக்குச் 'சிவயோக நாயகி' என்ற திருநாமங் களும் உண்டு.

கொள்ளிடக் கரையின் வெகு அருகில் உள்ளது இக்கோயில். சுற்றிலும் பனைமரங்களும இலுப்பை

மரங்களும் அடர்ந்த சோலைகள். வெகு அமைதியான, தியானத்திற்கு ஏற்ற சூழ்நிலை. ஆலயம், நில மட்டத்திற்குச் சற்றுக் கீழே காணப்படுகிறது. உயர்ந்த மதிற் சுவர்கள் — வெள்ளம் பெருகினால் ஆலயம் பிளந்து விடாதபடி அண்மையில் எழுப்பப்பட்டிருப்பது தெரிகிறது.

மூன்று நிலைகள் உள்ள அழகிய, வெண்ணிறக் கோபுரம். ஒவ்வோர் ஆண்டும் ஏப்ரல் மாதத்தில், முதல் வாரத்தில் மூன்று நாட்கள் சூரிய கிரணம் அவற்றின் வழியே நுழைந்து கருவறையினுள் புகுந்து, சுவாமியின் மீது படுகிறது. மூன்று நாட்களும் கரும்பேச்வரரை சூரிய பகவான் ஆராதிப்பதாகக் கூறப்படுகிறது. அன்று சிறப்பு அபிஷேக. ஆராதனைகள் உண்டு.

உள்ளே நுழைந்து, தெற்கு நோக்கியுள்ள தனி அம்பாள் கோயிலைத் தரிசித்துக் கொள்கிறோம். எதிரில் தளவரிசை போடப்பட்டு, பளிச்சென்றிருக்கிறது. ஓரே ஒரு பிராகாரம் தான். செப்பனிடப்பட வேண்டிய நிலையிலுள்ளது. வலம் வந்தோம். மேற்குப் பிராகாரத்தில் விநாயகர், முருகன் கோயில்களும், வடக்குப் பிராகாரத்தில் சண்டீச்வரர், துர்க்கை கோயில்களும் உள்ளன. கோஷ்டங்களில் முறைப்படி தட்சிணாமூர்த்தி, அர்த்தநாரீச்வரர், பிரும்மா முதலியவர்கள் இருக்கிறார்கள்.

நந்தி மண்டபத்தைக் கடந்து சுவாமி கோயிலுக்குள் சென்றால், மண்டபத்தில் விநாயகர், சாஸ்தா, மகாவிஷ்ணு, சூரியன், சந்திரன், நால்வர் முதலியோரின் பிரதிஷ்டைகள் காணப்படுகின்றன.

சுவாமிக்குக் கரும்பேச்வரர் என்ற பெயர் தோன்றியதற்குக் காரணமாகச் செவி வழி வந்த செய்தி ஒன்று கூறப்படுகிறது.

ஒரு காலத்தில் இந்தக் கோயில் முற்றிலும் மணலால் மூடப்பட்டிருந்ததாம். அப்பகுதியில் மாடு மேய்த்துக்

கொண்டிருந்த சிறுவன் ஒருவன், கரும்பொன்று முளைத்திருப்பதைக் கண்டு அதை வேரோடு பிடுங்க முயற்சித்த போது, கோபுரக் கலசம் தென்பட்டதாம். பின்னர் கிராம மக்கள், அந்த இடத்தைத் தோண்டிப் பார்த்ததில் கோயில் இருப்பது தெரிந்ததாம். கரும்பு முளைத்திருந்த காரணத்தால் அங்கிருந்த சுயம்பு மூர்த்திக்கு கரும்பேச்வரர் என்ற திருநாமம் ஏற்பட்டதாம். இந்த நிகழ்ச்சி சுந்தரர் காலத்திற்கு முன்பு நடந்ததா அல்லது பின்னர் நடந்ததா? சுந்தரர் 'வெண்ணிக் கரும்பே, கானூர்க் கட்டியே' என்று கூறியிருப்பதற்கும் இக்கதைக்கும் தொடர்பு உண்டா? அல்லது, சுந்தரர் வாக்கிற்கு விளக்கம் தரும் பொருட்டு, இப்படி ஒரு கதை புனையப்பட்டதா? எதுவாக இருந்தாலும் இதைப் பற்றிய ஓர் ஆராய்ச்சி தற்போது தேவையில்லை!

செம்மேனிநாதர் சுயம்புமூர்த்தி, அப்பர் சுவாமிகள் கூறுகிறார்:

ஓமத் தோடயன் மாலறி யாவணம்
வீமப் பேரொளி யாய விழுப்பொருள்
காமற் காய்ந்தவன் கானூர் முளைத்தவன்
சேமத் தாலிருப் பாவதென் சிந்தையே.

அவன் எவ்வாறு முளைத்தான்?

திருவின் நாதனுஞ் செம்மலர் மேலுறை
உருவ னாயுல கத்தி னுயிர்க்கெலாம்
கருவ னாகி முளைத்தவன் கானூரில்
பரம னாய பரஞ்சுடர் காண்மினே.

கானூரில் எழுந்தருளிய பரஞ்சுடராகிய இறைவன் திருமகள் கேள்வனாகவும், நான்முகனாகவும் உலக உயிர்களுக்குக் கருப்பொருளாகவும் முளைத்தவன்.

சுயம்புவாகத் தோன்றிய பரஞ்சுடராகிய சுயம் பிரகாசப் பரமன் எவ்வாறு இருக்கிறார்?

கல்வியாகவும் ஞானமாகவும் கலைப் பொருளாகவும் விளங்குகிறார். இரவும் பகலும் அவன் பெயரைச் சொல்லி நம் துயரங்களைத் தீர்த்துக் கொள்ளலாம்.

கல்வி ஞானக் கலைப்பொரு ளாயவன்
செல்வம் மல்கு திருக்கானூ ரீசனை
எல்லி யும்பக லும்மிசை வானவா
சொல்லி டீர்நுந் துயரங் கள்தீரவே.

திருஞானசம்பந்தப் பெருமான் 'கானூர்மேய' பெருமானைப் பலவாறாகப் புகழ்கிறார். தன் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட 'உள்ளங் கவர் கள்வன்' எப்படி வந்தார் என்று கூறுகிறார்...

மூவாவண்ணர் முளைவெண் பிறையர் முறுவல்
செய்திங்கே
பூவார்கொன்றை புனைந்து வந்தார்
பொக்கம்பல பேசிப்
போவார்போல மால்செய்துள்ளம் புக்கபுரிநூலர்
தேவார்சோலைக் கானூர்மேய தேவ தேவரே.

கானூரில் உறையும் தேவ தேவர் மூவா அழகினராய் பிறைசூடி, கொன்றை மாலை அணிந்து புன்முறுவல் செய்து கொண்டே வந்தார். பல பொய்களைப் பேசி மயக்குகிறவர்களைப் போல் என் சிந்தையை மயக்கி என் மனத்துள் புகுந்து கொண்டார். அவர் மேலும் கூறுகிறார்:

கானூர்மேய பெருமான் பிரும்மாவாலும் திருமாலாலும் அடிமுடி அறியப்படாதவன். சிந்தையிலும் நாவிலும் சென்னியிலும் மன்னி நின்றவன். என் மனத்திற்குள் புகுந்து காலையும் மாலையும் உலாவுகின்றான்.

காட்டுப் பகுதியில் தோன்றிய இறைவனுக்கு, அப்பரையும் சம்பந்தரையும் ஆட்கொண்ட ஆண்டவனுக்கு, எந்தக் காலத்தில் யார் கோயில் கட்டியது என்று தெரிய

வில்லை. ஆலயத்திலுள்ள கல்வெட்டுகளிலிருந்து அது கண்டுபிடிக்கப்பட வேண்டும். அண்மையில் தொல் பொருள் ஆராய்ச்சித் துறையினர் ஆலயத்திற்கு வந்து கல்வெட்டுகளை ஆராய்ந்து சென்றுள்ளார்கள் என்றும், அவை பற்றிய விளக்கங்கள் விரைவிலேயே தெரிய வரலாம் என்றும் செயல் அலுவலர் ஜெயபாலன் கூறினார்.

திருக்கானூர் மிகச் சிறிய கிராமம். கொள்ளிடத்தில் பரிசில் செலுத்துவோரும், மீன் பிடிப்போருமே தற்போது அங்கு தங்கியுள்ளனர். கொள்ளிடத்தில் அவ்வப்போது ஏற்பட்ட வெள்ளக் கொடுமையின் காரணமாக, முன்பு அங்கு வாழ்ந்த மக்கள் குடிபெயர்ந்து, தெற்கே வந்து விட்ட தாகவும், அவர்கள் குடியேறிய கிராமமே விஷ்ணம்பேட்டை என்றும் கூறப்படுகிறது.

கொள்ளிடத்தின் சீற்றத்திற்குள்ளான இந்தக் கோயில் அநேக வருடங்களாக மண்மூடிப் போய், பூஜைகளும் நின்று போயிருக்கிறது. பின்னரே இது கண்டுபிடிக்கப்பட்டி ருக்கிறது. சுற்றிலும் மணல்மேடுகள் இருந்திருக்கின்றன. சுற்றிலும் மேடாகி விட்டதால் கோயில் தாழ்ந்த பகுதியில் இருக்கிறது.

கால் நூற்றாண்டுக்கு முன் மணல் அரக்கனிடமிருந்து மீட்டுத் தந்து, அக்கோயிலில் திருப்பணிகள் செய்து குடமுழுக்குச் செய்ய வேண்டும் என்று மக்களைத் தூண்டி யவர் ஒரு சந்நியாசி. அந்த உண்மைக் 'கதை' இக்கோயி லின் அண்மைக்கால 'தலபுராணம்'! நம் வாழ்நாளில், நம் கண்முன்னே நடப்பதும் புராணம்தான். தற்காலத்தில் நடப்பதுதானே பிற்காலத்தில் புராணமாகிறது!

திருச்சி மாவட்டம், வேலூரைச் சேர்ந்தது பரமத்தி கிராமம். அங்கு பிறந்தவர் கணபதிசுப்ரமணியம். அவர் ஒரு பி.ஏ., பட்டதாரி. நாட்டு விடுதலை இயக்கத்தில் தீவிர ஈடுபாடு கொண்ட தேச பக்தர். அந்நியர் ஆட்சியில் சிறை

சென்ற தியாகி. சுதந்திர இந்தியா அவருக்கு சுதந்திரம் அளித்தது.

அவர் ஒரு பிரும்மச்சாரி. தேச விடுதலைக்காக இன்னல்களை ஏற்றுக் கொண்ட உள்ளம், ஆன்மிக விடுதலையில் நாட்டம் கொண்டது. சந்நியாசியானார். சச்சிதானந்த சரஸ்வதி என்று திருநாமம் பெற்றார். ஊர் ஊராகச் சுற்றினார். திருக்காட்டுப்பள்ளிக்கு வடக்கேயுள்ள விஷ்ணம்பேட்டை கிராமத்தையும் கடந்து, வடக்கு நோக்கி நடந்தார். நீராடுவதற்கும் அமைதியாகத் தியானம் செய்வதற்கும் கொள்ளிடக் கரை அருமையான சூழ்நிலையாக அமைந்தது. அங்கேயே, ஓர் ஆலமரத்தடியில் அமர்ந்து விட்டார். கானூர் மேவிய பெருமான் இவர் உள்ளத்தில் புகுந்து, ஆலயத்தின் திருப்பணி நடைபெற இவரைக் கருவியாக்கிக் கொண்டு விட்டார்.

எப்படி?

ஸ்ரீ சச்சிதானந்த சரஸ்வதி சுவாமிகள் திருக்கானூருக்கு 1955-ம் ஆண்டு வந்தார். தங்கள் ஊருக்கு ஒரு சாது வந்திருக்கிறாரே என்று மகிழ்ச்சியடைந்த விஷ்ணம்பேட்டை வாசிகள் அவரை உபசரிக்க முன்வந்தனர். ஒவ்வொரு நாளும் ஒவ்வோர் இல்லத்தார் அவருக்குப் பிட்சையளித்து வந்தனர்.

ஸ்ரீ கரும்பேச்வரர் கோயிலைச் சுற்றிலும் எல்லாப் பக்கங்களிலும் மணல்மேடுகள் இருந்ததைக் கண்டார் ஸ்ரீ சச்சிதானந்த சரஸ்வதி சுவாமிகள். முக்கியமாக ராஜகோபுரத்தின் முன்னேயிருந்த உயரமான மேடு அவர் கவனத்தைப் பெரிதும் கவர்ந்தது. அது முதலில் அகற்றப்பட வேண்டும் என்று அவர் கருதினார். சிவலிங்கத்தின் 'பார்வை'யை அது மறைத்துக்கொண்டிருப்பதால்தான், அக்கோயில் அந்நிலைக்கு வந்ததாக அவருக்குத் தோன்றியது. முதலில் ஊர் மக்களை இப்பணியில் அவர் ஈடுபடுத்தி

வார். அங்கு ஆடு, மாடு மேய்த்துக் கொண்டிருந்த சிறுவர்களைத் தமக்குத் துணை புரியும்படி பணித்தார். கிராம மக்கள் தமக்குத் தினமும் அளித்து வந்த பிட்சையின் அளவை அதிகரிக்கும்படி கேட்டுக் கொண்டு, மிகுதியை அச்சிறுவர்களுக்கு அன்புடன் அளித்தார். அவர்களும் உற்சாகத்துடன் தொண்டு புரிந்தனர். கிழக்கேயிருந்த அந்த மணல்மேடு அகற்றப்பட்டது. சுவாமிகள் ஆனந்தம் அடைந்தார். அக்கோயிலில் திருப்பணி செய்து கும்பாபிஷேகம் செய்து பார்த்து விட வேண்டும் என்று தீவிரமாக முனைந்தார். அதன் தலபுராணத்தைக் கேட்டறிந்து, கிராம மக்களுக்கும் எடுத்துரைத்து அவர்களை இந்தத் திருப்பணியில் அக்கறை கொள்ளச் செய்தார். விஷ்ணம்பேட்டை கிராம மக்களின் ஆர்வம் கரை புரண்டோடியது.

கிராம மக்களிடையே ஒரு விழிப்பு உணர்ச்சியை ஏற்படுத்திவிட்டு வேறு அலுவல் காரணமாக அங்கிருந்து புறப்பட்டு ஆந்திரப்பிரதேசம் சென்று விட்டார் சுவாமிகள். அவர் இருந்த இடம் ஒருவருக்கும் தெரியவில்லை. இருப்பினும் கிராம மக்கள் சுவாமிகள் தொடங்கிய பணியை சிரமேற்கொண்டு 1959-ம் ஆண்டு ஒரு திருப்பணிக் கமிட்டி அமைத்துத் தீவிரமாகச் செயல்படத் தொடங்கினர். சில தடங்கல்களுக்குப் பின்னர், 1962-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் குடமுழுக்கு விழா நிச்சயிக்கப்பட்டது பெரிய வெற்றியிலும் கிராம மக்களுக்கு மன நிறைவு இல்லை. இப்பணியைத் தொடங்கி வைத்து, பிறருக்குத் தூண்டுகோலாக இருந்த சுவாமிகள் இருக்குமிடத்தைக் கண்டுபிடிக்க முடியவில்லையே, அவரைக் குடமுழுக்கு விழாவிற்கு வரவழைக்க முடியவில்லையே என்ற மனக்குறையால் அவர்கள் பெரிதும் ஏக்கமுற்றனர்.

குடமுழுக்குத் திருநாள், கோயிலில் ஏராளமான கூட்டம். தமிழக அரசின் அன்றைய கூட்டுறவு அமைச்சரான சர்க்கரை மன்றாடியார் விழாவில் கலந்து கொள்ள வந்திருந்ததால் அதிகாரிகள் குழுமியிருந்தனர். காவல்

துறையினரின் நடமாட்டம் வேறு. வேத மந்திரங்களின் முழக்கம் ஒருபுறம்; மறுபுறம் தேவார, திருவாசகப் பாடல்களின் இன்ப இசை. யாகசாலையிலிருந்து புனித தீர்த்தக் குடங்களைத் தாங்கிய அர்ச்சகர்கள் மந்திர ஒலியுடன் புறப்படும் நேரம். இதனை அறிவிக்கும் அதிர்வேட்டு வானைப் பிளக்கிறது.

ராஜகோபுரத்தின் உச்சியில் ஒருவர் மஞ்சள் நிறப் பட்டாடையுடன் தயாராக நின்று கொண்டிருக்கிறார். குறித்த நேரத்தில் அவர் அதை விசியதும், ஒரே லக்னத்தில் ராஜகோபுரத்திலும், சுவாமி, அம்பாள், நந்திகேச்வரர், சுப்ரமண்யர், தட்சிணாமூர்த்தி மற்றும் இதர பரிவார தேவதைகளின் கோபுரங்களிலும் குடமுழுக்கு நடைபெற வேண்டும் என்ற ஏற்பாடு. அத்தனை மனங்களும் ஒரே மனமாக, அத்தனை கண்களும் ஒரே கண்ணாக, கோபுரத்தையே பார்த்துக் கொண்டிருக்கின்றன.

மங்கள இசை முன்னே வர யாக சாலையிலிருந்து புனித நீர்க் குடங்களின் ஊர்வலம் கிளம்பி, கோயிலை வலம் வந்து கொண்டிருக்கிறது. பக்தியுணர்ச்சி பரவச நிலையடைந்து, உச்சகட்டத்தை நெருங்கிக் கொண்டிருக்கும் அந்த நேரத்தில்...

ஒரு பெரிய கார் கோபுர வாயிலில் வந்து நிற்கிறது. அதனின்று ஒரு சந்நியாசி பரக்கப் பரக்க இறங்குகிறார். சந்தேகமில்லை, அவர் ஸ்ரீ சச்சிதானந்த சரஸ்வதி சுவாமிகள்தான். புளகிதம் பொங்க, மக்கள் கூட்டம் அவர் பாதங்களில் விழுந்து வணங்குகிறது. ஆனந்தக்கண்ணீர் அத்தனை பேர் கண்களிலும் திரையிடுகிறது.

சுவாமிகள் பறந்தோடிச் சென்று அம்பாள் விமானத்தில் இருந்த சாரத்தின் மீது ஏறுகிறார். அடுத்த கணம் கருடன் ஆலயத்தின் மீது வட்டமிட, மகாகும்பாபிஷேகம் நடைபெற்றது.

ஸ்ரீ சச்சிதானந்த சுவாமிகள் சரியான நேரத்தல் எப்படி அங்கு வந்து சேர்ந்தார்?

ஸ்ரீ காஞ்சி காமகோடிப் பெரியவர்களின் முகாமில் தினமும் நடைபெறும் எத்தனையோ அற்புதங்களில் ஒன்று 1962-ம் ஆண்டு செப்டம்பர் 2-ம் தேதியும் நடைபெற்றது. அன்று பெரியவர் திருச்சி மாவட்டம் வள்ளூரில் முகாமிட்டிருந்தார். அத் திருச்சந்நிதியில் பிறபக்தர்களுடன் திருக்கானூர் சுவாமிகளான ஸ்ரீ சச்சிதானந்த சரஸ்வதியும் நின்றிருந்தார். அன்று திருக்கானூரில் கும்பாபிஷேகம் நடைபெறப் போகும் செய்தியே அவருக்குத் தெரியாது.

ஸ்ரீ காஞ்சிப் பெரியவர் அங்கிருந்த ஒரு செல்வந்தரைப் பார்த்து. ''இந்த சுவாமிகளை உன் காரில் உடனே விஷ்ணம்பேட்டைக்கருகிலுள்ள திருக்கானூருக்கு அழைத்துக் கொண்டு போ. அவர் தொடங்கி வைத்த பணி இன்று பூர்த்தியாகி, அக்கோயிலில் கும்பாபிஷேகம் நடைபெறப் போகிறது. இவர் அங்கு போனால் கிராம மக்களுக்கு எவ்வளவோ சந்தோஷமாயிருக்கும்'' என்று கூறினார். ஆசாரிய சுவாமிகளிடமிருந்து ஆணைபிறந்து விட்டது. மறு கணம் செல்வந்தரின் கார் சந்நியாசியை ஏற்றிக் கொண்டு திருக்கானூர் நோக்கிப் புறப்பட்டு விட்டது. ஸ்ரீ காஞ்சிப் பெரியவரின் பெருங்கருணையினால் சுவாமிகள் கும்பாபிஷேகத்திற்கு வந்து சேர்ந்து விட்டார். விஷ்ணம்பேட்டை வாசிகளின் மகிழ்ச்சி இரட்டிப்பாயிற்று.

இதற்குப் பிறகு ஸ்ரீ சச்சிதானந்த சரஸ்வதி சுவாமிகள் தர்மத் தொண்டிலும் ஆன்மிகத் துறையிலும் தம்மை ஈடுபடுத்திக் கொண்டதாகவும், 1965-ம் ஆண்டில் ஸித்தியடைந்ததாகவும் தெரிய வருகிறது. திருக்கானூரைத் தவிர அவர் வேறு எங்கெல்லாம் தங்கியிருந்தார். வேறு நற்பணிகள் என்னவெல்லாம் புரிந்தார், எங்கே ஸித்தியடைந்தார் என்ற விவரமெல்லாம் விஷ்ணம்பேட்டை வாசிகளுக்குத் தெரியவில்லை.

மேலே கண்ட விவரங்களை எனக்கு வேணுகோபாலன் என்ற அன்பரும், ஓய்வுபெற்ற உதவி தலைமை ஆசிரியர் ஸ்ரீ. சுவாமிநாத ஐயரும் கூறினார்கள். இவர்கள் 1980-ம் ஆண்டில் நடந்த கும்பாபிஷேகத்தைப் பற்றியும் மகிழ்ச்சியுடன் குறிப்பிட்டார்கள்.

நாங்கள் காரில் அங்கு சென்று, காரை சற்றுத் தொலைவில் நிறுத்தி விட்டு, கோயிலுக்கு நடந்து சென்றோம். விஷ்ணம்பேட்டையிலிருந்து திருக்கானூர் செல்வதற்குச் சீரான பாதை அமைக்கப்பட்டால், வெளியூர் பக்தர்கள் தரிசனத்திற்கு வருவது எளிதாக இருக்கும். பஸ் பாதையில் விஷ்ணம்பேட்டைக்குத் திரும்பும் தெருமுனையில், 'பாடல் பெற்ற திருக்கானூர் கரும்பேச்வரர் ஆலயத்திற்குச் செல்லும் வழி' என்ற ஒரு போர்டும் தேவை.

பின்னர் கிராமத்திலுள்ள ஸ்ரீ வேணுகோபால சுவாமி ஆலயத்திற்கும் ஸ்ரீ கைலாசநாதர் கோயிலுக்கும் நாங்கள் சென்றோம்.

கோகுலாஷ்டமி உற்சவத்தின் போது பெருமாள் கோயிலில் எட்டு நாட்களும் இரவில் பஜனை நடைபெறும் என்றும் எட்டாவது நாள் ஸ்ரீ கிருஷ்ண ஜனனம் கொண்டாடப்படும் என்றும் அறிந்தேன். ஒன்பதாவது நாள் காலை, வரகூரில் நடைபெறுவது போன்றே ஸ்ரீ கிருஷ்ணன் வெண்ணெய்த்தாழி அலங்காரத்துடன் வீதி உலா புறப்பட்டு, மதியம் 12 மணிக்குக் கிராமத்தின் அருகிலுள்ள திருக்குளத்திற்கு வந்து சேருவார். மாலையில் மீண்டும் புதிய அலங்காரம் செய்யப்பட்டு, இரவு 9 மணிக்குப் புறப்பாடு ஆரம்பமாகும். வரகூர் போன்றே இங்கும் பிரார்த்தனை செய்து கொண்டவர்கள் அங்கப்பிரதட்சிணம் செய்வார்கள். பத்து மணிக்கு வீதியில் அமைக்கப்பட்ட ஒரு பந்தலில் சுவாமி அமருவார். வரகூர் போலவே உறியடி, வழுக்குமரம் முதலிய லீலைகள் நடைபெறும். 'இங்கேதான் உறியடி நடைபெறும். இதோ, இதுதான் வழுக்குமரம்.

நடப்படும் குழி' என்று வரகூரைப் போலவே இங்கும் பெருமையுடன் காட்டுகிறார்கள்.

கிராமத்தின் ஈசானிய மூலையில் உள்ள ஸ்ரீ கைலாச நாதர் கோயிலில், ஸ்கந்த சஷ்டியன்று மாலை ஸ்ரீ சுப்ர மணியர் ஊர்வலம் வந்து சூரஸம்ஹாரம் நிகழ்ச்சி நடை பெறுவது கண்கொள்ளாக் காட்சியாயிருக்குமாம். கார்த் திகை மாதம் திருக்கார்த்திகையன்று ஆலயம் ஒளிமயமா யிருக்குமாம்.

## கூத்தூர்

திருக்காட்டுப்பள்ளியிலிருந்து திருவையாறு செல்லும் பாதையில், காவிரியாற்றுக்கும் கொள்ளிடத்திற்கும் இடையே விஷ்ணம்பேட்டையையும் பவனமங்கலத்தையும் அடுத்துள்ள சிறுகிராமம் கூத்தூர். அங்குள்ள ஸ்ரீ தர்ம சாஸ்தா கோயிலால் அந்தச் சிற்றூருக்குப் பெரும் புகழ் சேர்ந்துள்ளது.

கிராம தேவதையான ஸ்ரீ தர்ம சாஸ்தா கோயில், பஸ் பாதையிலேயே அமைந்துள்ளது. அதற்குச் சொந்தமாக நிலமோ, வேறு சொத்துக்களோ கிடையாது. மக்களுடைய பக்தியும் ஆதரவுமே அக்கோயிலின் பெரும் சொத்து. ஊர் மக்களின் திடபக்தியை விட ஓர் ஆலயத்திற்குப் பெரிய சொத்து வேறொன்று இருந்து விட முடியுமா?

தொண்ணூறு ஆண்டுகளுக்கு முன் பெரிய அளவில் கும்பாபிஷேகம் முடிந்து நித்திய பூஜைகளும், பத்து நாள் திருவிழாவும் கோலாகலமாக நடைபெற்று வந்திருக் கின்றன. அடுத்து, 1948-ல் திருப்பணி நடந்து மீண்டும் ஒரு கும்பாபிஷேகம் நடைபெற்றது. கடைசியாகக் காப்புக்கட்டி

உற்சவம் நடைபெற்றது, 1956-ல் தான். பின்னர், நித்திய பூஜைகள் மட்டும் நடைபெற்று வருகின்றன.

இப்பகுதியில் இவருக்கு 'சாஸ்தா பிள்ளையார்' என்று பெயர். பெயர் சற்று வித்தியாசமாக இருக்கவே, விசாரித்தேன். அக்கோயிலில், கருவறைக்கு வெளியே ஒரு கணபதி அமர்ந்திருக்கிறார். தங்குவதற்கு நல்ல இடம் தேடி வந்த சாஸ்தாவுக்கு, அங்கிருந்த பிள்ளையார் தமது இடத்தை அளித்து விட்டுச் சற்று ஒதுங்கி அமர்ந்தாராம்! அக்கோயிலில் சாஸ்தாவும் பிள்ளையாரும் எழுந்தருளியிருப்பதால் 'சாஸ்தாவும் பிள்ளையாரும்' என்பதைச் சுருக்கி, 'சாஸ்தா பிள்ளையார்' என்று அழைக்கிறார்கள் என்பது புரிந்தது.

ஸ்ரீ தர்மசாஸ்தா பூர்ண - புஷ்கலையோடு, இடக் காலை மடக்கி, வலக் காலைத் தொங்க விட்டுக் கொண்டு அமர்ந்திருக்கிறார். மதுரைவீரன், கருப்பன்சாமி சந்நிதிகள் வெளியே இருக்கின்றன. யானையும் குதிரையும் பழைய பெருமைகளை பறைசாற்றிக் கொண்டு காட்சியளிக்கின்றன.

1965-ம் வருஷம் இக்கோயிலின் உற்சவ விக்ரகம் திருட்டுப் போய், ஐந்தாறு தினங்களில் சுவாமியும் ஓர் அம்பாளும் கிடைத்து விட்டதாகவும், மற்றோர் அம்பாள் பின்னப்படுத்தப்பட்ட நிலையில் பின்னர் கோர்ட் மூலம் கிடைத்ததாகவும் காமகோடி ஸ்ரீமடம் முத்ராதிகாரி கே. என். ராஜாமணி ஐயர் கூறினார்.

பின்னமான அம்பாளுக்கு மாற்றாக வேறு ஒரு விக்ரகம் செய்து வைத்து விட்டார்களாம். இங்கு தக்க பாதுகாப்பு இல்லாத நிலையில், அந்த விக்ரகங்கள் தற்போது கூத்தூரை அடுத்துள்ள மகாராஜபுரம் சிவன் கோயிலில் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. தெய்வங்களுக்கும் 'லாக்கர்'களும் 'வால்ட்'களும் தேவைப்படுவது குறித்துச் சமுதாயம் வெட்கித் தலை குனியத்தான் வேண்டும்.

கூத்தூர் கிராமத்தைச் சேர்ந்த இளைஞர்கள், வெளியூர்களில் வசதியுடன் வாழும் கூத்தூர் வாசிகளிடமிருந்து பணம் வசூல் செய்து ஸ்ரீலட்சுமி நாராயணப் பெருமாள் கோயிலுக்குப் புதிதாக மின் இணைப்புக் கொண்டு வந்திருப்பதாக அறிந்தேன். தங்கள் ஊர் ஆலயத்தின் மீது இவர்கள் கொண்டுள்ள அக்கறையும், காட்டி வரும் ஆர்வமும் என் மனத்தையும் கவர்ந்து விட்டதில் வியப்பென்ன? நம் இளைஞர்களுக்கு நம் ஆலயங்களின் மீது பற்றும் பாசமும் ஏற்பட்டு விட்டால், சமுதாயத்திற்கு நல்ல காலம் பிறந்து விட்டது என்றே பொருள். அவர்கள் பக்தியுடனும், திட வைராக்கியத்துடனும், தியாக உணர்வுடனும், தொண்டு உள்ளத்துடனும் ஆலயங்களில் நுழையத் தொடங்கி விட்டால்; பரம்பரை பரம்பரையாக உண்டு கொழுத்துக் கொண்டிருக்கும் பழைய பெருச்சாளிகளெல்லாம் வெளியே ஓடி விடும்! ஆலயத்தைக் கப்பியுள்ள அந்தகாரம் அகல அகல, கிராமத்துக்கும் நல்லது; நாட்டுக்கும் நல்லது.

இக்கிராமத்திலுள்ள காசி விசுவநாதர்—விசாலாட்சி கோயில் இடிந்து போய், அநேக வருடங்கள் பூஜைகளற்று இருந்திருக்கிறது. ஸ்ரீகாஞ்சிப் பெரியவரின் புனிதப் பயணங்களின் பலனாகப் புத்துயிர் பெற்ற ஆயிரக்கணக்கான கோயில்களில் இதுவும் ஒன்று. 1920-ல் பாலாலயம் செய்யப்பட்டு, சுமார் இருபது வருடங்கள் கீற்றுக் கொட்டகையிலும், பிறகு ஓட்டுக் கொட்டகையிலும் பூஜைகள் நடந்து வந்தது. பின்னர், கிராம மக்களின் உதவியோடு சிறுகச் சிறுகத் திருப்பணிகள் முடிந்து 1980-ம் ஆண்டு கும்பாபிஷேகம் நடைபெற்றுள்ளது. பார்க்க நம் ஊர் கோயில் போல் இல்லையென்றாலும், இந்த அளவுக்காவது ஒரு கட்டடம் கட்டிப் பூஜை நடந்து வர ஏற்பாடு செய்த கூத்தூர் கிராம மக்களை நெஞ்சார வாழ்த்தி வணங்கினேன்.

ஸ்ரீகாஞ்சிப் பெரியவரின் திட்டப்படி கும்பாபிஷேகக் காலயத்தில் வீடுதோறும் தினமும் ஒரு பிடி அரிசி வசூலிக்கப் பட்டு நித்திய நைவேத்தியத்திற்குப் பயன்படுத்தப்படும் செய்தி அமிர்தமாக இனித்தது.

கிராமத்திலுள்ள மற்றொரு சிவன் கோயில், நாராயண கிரீச்வரர் ஆலயம். அது பரிதாபமாகக் காட்சியளித்தது. கோயிலுக்குச் சொந்தமான சொத்து மீட்கப்பட்டால் ஒருவேளை இந்தக் கோயிலுக்குக் கதிமோட்சம் ஏற்படலாம்.

கூத்தூரில் உள்ள காளியம்மன் கோயிலும் சக்தி வாய்ந்தது. அங்கு வைகாசி மாதம் உற்சவம் நடைபெறு கிறது.

## வானராங்குடி

விஷ்ணம்பேட்டைக்கு வடக்கே திருக்கானூர் ஸ்ரீசெம்மேனி நாதர் கோயில் இருப்பது போல், கூத்தூருக்கு வடக்கே இரண்டு கிலோ மீட்டர் தொலைவில் வானராங் குடி என்ற கிராமத்தில் நாகநாதசுவாமி — நாகாம்பிகை ஆலயம் இருக்கிறது. திருக்கானூர் ஆலயத்தைப் போன்றே இதுவும் ஒரு காலத்தில் கொள்ளிடத்தின் சீற்றத்திற்கு இரையாகியிருக்கிறது ஆனால், திருக்கானூர் ஆலயத் திற்குப் 'புனர் ஜென்மம்' கிடைத்திருக்கின்றது. வானரங் குடி ஆலயத்திற்கு இனிமேல்தான் மறுவாழ்வு கிடைக்க வேண்டும். தற்போதுள்ள நிலையைக் கண்டால், அக் கோயில் புதுப்பிக்கப்படுமா, அங்கு மீண்டும் ஆராதனைகள் தொடங்குமா? என்ற சந்தேகம் நிச்சயம் எழத்தான் செய்யும்.

சுமார் எழுநூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன் இந்தக் கோயில் தோன்றியதாகத் தெரிகிறது. அப்போது உறை

யூரில் வாழ்ந்து கொண்டிருந்த சோழ மரபினர் பாண்டிய னால் தோற்கடிக்கப்பட்டு அவ்வூரைவிட்டு வெளியேற வேண்டிய சூழ்நிலை உருவாயிற்று. அப்படி வெளியேறிய வர்களில் பலபத்திரச் சோழன் ஒருவன். அவன் விண்ணூர்ப் பட்டி என்ற ஊரில் வந்து தங்கியதாக அவ்வூர் செப்புப் பட்டயம் ஒன்று கூறுகிறது.

உறையூரிலிருந்து வெளியேறிய மற்றொரு சோழன் 'வானவ தேவன்' என்பவன். அவன் திருக்கானூருக்கு கிழக்கே ஓரிடத்திற்கு வந்து தங்கினான். அந்த இடம் அவன் பெயரால் 'வானவ தேவர்குடி' என்று அழைக்கப் பட்டது. அதுவே பின்னர் வானவராங்குடி என்று மருவி தற்போது 'வானராங்குடி' ஆகியிருக்கிறது.

இவ்வூர் அக்காலத்தில் பழநாட்டைச் சேர்ந்ததாக இருந்தது. அப்பெயரில் 'பழநாட்டு வாய்க்கால்' என்ற ஒரு வாய்க்காலும் ஓடுகிறது.

வானராங்குடியைத் தலைநகராகக் கொண்டு, பழ நாட்டை நல்லதம்பி என்பவன் ஆண்டு வந்திருக்கிறான். இங்கு 'நாட்டுக்கு ஒரு நல்லதம்பி' என்றும், நாட்டுக்குப் பாதி, நல்லதம்பிக்குப் பாதி என்றும் பழமொழிகள் வழங்கி வந்திருப்பதாகக் கூறப்படுகிறது.

இவ்வூரை அமைத்த வானவ தேவனே இக்கோயிலை யும் அமைத்து, ஊர் முழுவதையும் இக்கோயிலின் சொத் தாக்கினான்.

இத்தலம் தேவர்களாலும் சித்தர்களாலும் வணங்கப் பட்டது. இக்கோயிலில் தேவர்கள் வணங்கும் இடமாகக் கருதப்படும் தேவாசியரின் மண்டபம், இந்தக் கூற்றுக்குச் சான்றாக அமைந்துள்ளது.

திருக்கானூரைப் போன்றே இக்கோயிலிலும் ஆண்டில் சில நாட்கள் சூரிய ஒளி மூலவரின் மீது படுகிறது. அதனால் இது சூரியன் வணங்கிய தலமாகவும் கருதப்படுகிறது.

திருவையாறு ஸ்ரீ ஐயாறப்பர் கோயிலை மையமாகக் கொண்டு சுற்றிலுமுள்ள ஆறு கோயில்களை இணைத்து சப்தஸ்தான விழாக் கொண்டாடப் படுவது போல் முன் காலத்தில் இவ் வானராங்குடி, திருச்சடை வளந்தை, செந்தலை திருக்காட்டுப்பள்ளி, நேமம், திருச்சென்னம் பூண்டி, திருக்கானூர் ஆகிய ஏழு ஊர்களும் சப்த ஸ்தான விழாக் கொண்டாடியதாகக் கூறுகிறார்கள். கொள்ளிட ஆற்றில் பெருகிய வெள்ளக் கொடுமையால், திருச்சென்னம்பூண்டி, திருக்கானூர், வானராங்குடி கோயில் ஆகியவை சேதமடைந்த காரணத்தால் அந்த விழா நின்று போயிருக்க வேண்டும்.

திருக்கானூர், கோயிலைப் போன்று திருச்சென்னம் பூண்டி வானராங்குடி கோயில்களும் மீண்டும் கட்டப் பட்டு, பூஜைகள் தொடங்கி, பழையபடி சப்தஸ்தான விழாவும் கொண்டாடும் நற்காலம் பிறக்க வேண்டும் என்று பிரார்த்திப்போமாக! கனவுகள்தானே ஒரு நாள் நனவாகின்றன!

இடிந்தும்,, பிளந்தும், மண்மூடியும், செடி கொடிகள் வளர்ந்தும், சுற்றிலும் முட்புதர்கள் அடர்ந்தும் அழிவுச் சின்னமாக நிற்கும் அந்தக் கோயிலைக் காணும்போது கண்களில் கண்ணீர் முட்டி நிற்கிறது. இதைக் குறித்து அவ்வூர்க்காரர்களும் வேதனைப்படத்தான் செய்கிறார்கள். எப்பாடு பட்டாவது, ஓரளவுக்காவது சீர்திருத்தம் செய்து, இரண்டு கால பூஜையாவது நடைபெறச் செய்யவேண்டும் என்று விரும்புகிறார்கள். திரு வெங்குடுசாமி சோழகர் என்பவரைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தேன். கோயிலுக்கு இரண்டு ஏக்கர் நிலம் சொந்தமாக இருப்பதாகவும், ஆறாயிரம் ரூபாய் வரை பணம் சேர்த்து வைத்திருப்பதாகவும் அவர் கூறினார்.

மகா மண்டபத்திற்குள் எங்களை அழைத்துச் சென்றார் சோழகர். கும்மிருட்டாக இருந்தது. கருங்கற்கள்

பெயர்ந்து எந்நிமிடமும் விழலாம் என்ற அபாயம் வேறு. அச்சம் மனத்தை அழுத்த, டார்ச்சைப் போட்டுப் பார்த்தோம். இருட்டின் கனம் ஒளியின் கனத்தை மங்கச் செய்தது. மங்கிய ஒளியிலும் நிதானம் புரிந்தது. கல் மண்டபத்தின் முன்னாள் கம்பீர அழகும் தெரிந்தது.

கருவறையை நெருங்கவே அச்சமாயிருந்தது. நின்ற இடத்திலிருந்தே டார்ச்சைப் போட்டு சிவலிங்கத்தைத் தரிசித்தோம். அப்போது கருவறையிலிருந்து இரண்டு, மூன்று பள்ளிச் சிறுவர்கள் வெளியே ஓடி வந்தார்கள். அந்த மையிருட்டில், விஷ ஜந்துக்கள் வாசம் செய்யக் கூடிய அந்தப் பயங்கர கிடங்கில் இவர்கள் எப்படிப் போனார்கள்? இளங்கன்று பயம் அறியாதுதான்! இருந்தாலும், இத்தனை துணிச்சலா? இந்த அசட்டுத் தைரியத்திற்குப் பெரியவர்களிடம் நன்றாக வாங்கிக் கட்டிக் கொண்டு ஓடி விட்டார்கள் அவர்கள்.

மண்டபத்தில் வைக்கப்பட்டிருந்த கருங்கல் சிலைகளை ஒவ்வொன்றாகப் பார்த்தோம். அத்தனையும் பெரிய சிலைகள், அழகான சிற்பங்கள், பின்னமாகாத வடிவங்கள். அம்பாள், ஸ்ரீவள்ளி தேவசேனா சமேத சுப்ரமணியர், தட்சிணாமூர்த்தி... ஆகா! இடிபாடுகளுக்கிடையே அமைதியாக, மௌனமாக, நல்லதொரு காலம் பிறக்கும் என்ற நம்பிக்கையோடு அவர்கள் தவமிருக்கிறார்கள் அங்கே!

கார்த்திகை மாதத்தில் அத்தனை தெய்வங்களும் அங்கே அந்தரத்தில் மூழ்கியிருப்பதைக்காண கஷ்டமாயிருந்தது. அங்கிருந்த ஓர் அகலை எடுத்து அம்பாள் பீடத்தில் வைத்து, எண்ணெயும் திரியும் கொண்டு வரச் சொல்லி விளக்கேற்றி வைத்து விட்டு வந்தோம்.

ஈரேழு லோகங்களுக்கும் ஒளி வழங்கும் அன்னை, விரைவிலேயே அக்கோயிலில் விளக்கெரியும்படி செய்ய மாட்டாளா?

# திருச்சடைவளந்தை

கூத்தூரிலிருந்து மகாராஜபுரத்திற்குச் சென்று கொண்டிருந்தபோது (விழிக்க வேண்டாம், இங்கேயும் ஒரு மகாராஜபுரம் இருக்கிறது!) இடப்புறம் ஒரு பெரிய கருங் கல் பீடம் தெரிந்தது. காரை நிறுத்தி விசாரித்தபோது, அது, கோயில் கருவறை ஒன்றின் அடித்தளம் என்று தெரிந் தது. அருகில் சென்று பார்த்தபோது மத்தியில் ஒரு சிவ லிங்கம் இருப்பதும் தெரிந்தது. அதன் மீது மூங்கில் — ஓலைகளால் ஒரு தற்காலிக கூரையும் போடப்பட்டி ருந்தது.

அத்தச் சிற்றூக்குத் 'திருச்சடை வளந்தை' என்று பெயர். அங்கு பழைய கோயில் ஒன்று இருந்ததாகவும் ஐம்பது அறுபது வருடங்களுக்கு முன் அங்கு வசித்த விராலிமலை சுவாமியார் என்று அழைக்கப்பட்டவர் பாழடைந்திருந்த அக்கோயிலை மீண்டும் கட்ட முயன்ற தாகவும், ஆனால் அது நிறைவு பெறாமலேயே அவர் மறைந்து விட்டதாகவும் செய்திகள கிடைத்தன.

அந்தச் சுவாமியார் பெரிய கனவு கண்டு, பெரிய திட் டமாகத் தீட்டியிருந்தார் என்பது சொல்லாலே புரிந்தது. திருவண்ணாமலையிலிருந்து அவர் கருங்கற்களை வர வழைத்திருக்கிறார்.

அக் கல்தச்சர்களை அங்கேயே தங்க வைத்து, வேலை வாங்கியிருக்கிறார். பழைய செங்கல் கட்டடத்தின் மீது கட்டி முடிக்கப்பட்டிருக்கும் கருங்கல் அடித்தளத்தின் வேலைப்பாடுகள் பிரமாதமாயிருக்கின்றன. கோமுகத்தின் அமைப்பு காண்போரைக் கவரும் வண்ணம் அமைந்திருக் கிறது. கருங்கல் பாறைகள் ஆங்காங்கே சிதறிக் கிடக் கின்றன. ''நான் அரைதறையாக நின்று கொண்டிருக்

கிறேன். யாராவது முயன்று என்னை முற்றிலும் கட்டி முடித்துக் குடமுழுக்குச் செய்ய மாட்டீர்களா?'' என்று அப் புராதனக் கோயில் அறைகூவல் விடுப்பது காதில் லேசாக விழுந்தது!

நாங்கள் சென்ற சமயம் தேவையான தகவல்களைக் கேட்டறிய அங்கு தக்க நபர்கள் இல்லாததால், அருமை நண்பர் புலவர் சண்முகமாரிஐயாவுக்குக் கடிதம் எழுதி னேன். அவர் திருச்சடை வளந்தைக்குச் சென்று எனக்காகக் கேட்டறிந்து தெரிவித்தச் செய்திகளை வாசகர்களுடன் பகிர்ந்து கொள்கிறேன்.

திருச்சடைவளந்தைக் கோயில் 'திரு' என்ற அடை மொழி பெற்றிருப்பதால், பாடல்பெற்ற தலமாக இருக்க வேண்டும் என்று அவ்வூர்க்காரர்கள் நம்புகிறார்கள். அப்பர் சுவாமிகள் திருவளந்தீச்வரரையும், திருக்கடை அம்ம னாகிய புவனேச்வரியையும் நிச்சயம் தரிசித்துப் பாடியிருக்க வேண்டும் என்றும், அப்பதிகம் கிடைக்காமலே போயிருக்க லாம் என்றும் கூறுகிறார்கள்.

அப்பர் சுவாமிகள் குடந்தைக்கருகில் உள்ள பழையாறையிலிருந்து திருவானைக்கா போகும் வழியில், காவிரியின் இரு கரைகளிலுமுள்ள ஆலயங்களைத் தரிசித்துப் பதிகங்கள் பாடிச் சென்றார் என்று பெரிய புராணத்தில் கூறப்பட்டுள்ளது. எனவே, இவ்வூருக்கும் நாவுக்கரசர் வந்து தரிசித்திருக்க வேண்டும். தரிசிக்காமல் சென்றிருக்க வேண்டிய காரணம் ஏதுமில்லை.

திருநாவுக்கரசரின் க்ஷேத்திரக்கோவையில் 'கடைமுடி' 'சடைமுடி' என இரண்டு கோயில்களைப் பற்றிக் கூறு கிறார். கடைமுடி என்பது கோயிலடிக்கு அருகேயுள்ள திருசென்னம்பூண்டி கோயிலைக் குறிக்கிறதென்றால் 'சடைமுடி' என்பது திருச்சடைவளந்தைக் கோயிலைக் குறிப்பதாக ஏன் எடுத்துக் கொள்ளக் கூடாது?

விராலிமலை சுவாமியார், திருநெல்வேலியைச் சேர்ந்தவர் என்றும், விராலிமலையில் சிறிது காலம் தங்கி, பல சித்துக்களைப் பெற்ற பிறகு இங்கு வந்ததாகவும் தெரிய வருகிறது. அவர் இரும்பைத் தங்கமாக்கக்கூடிய சித்தர் என்று இவ்வூரில் கூறுகிறார்கள். தொழிலாளர்களுக்கு மண்ணை எடுத்துக் கூலியாகத் தருவாராம். அம்மன் அருளால் அவரவர் உழைப்புக்கேற்ற காசாக அது மாறுமாம். அவ்வாறு மண் கூலியைப் பெற்ற வயோதிகர் ஒருவர் தற்போது இவ்வூரில் இருக்கிறராம்.

இத்தனை சக்திகள் பெற்ற சுவாமிகளால் ஏன் இந்தக் கோயில் கட்டி முடிக்கப்படவில்லை என்பதற்கான காரணம் புரியவில்லை.

இவ்விராலிமலை சுவாமிகளுக்கு இங்கு மடத்தைக் கட்டிக் கொடுத்து, அதன் நிர்வாகத்திற்காகப் புஞ்செய் நிலங்களை எழுதி வைத்தவர் விஷ்ணம்பேட்டையைச் சேர்ந்த பொன்னுசாமி ஐயர் என்பவர். எண்பது ஆண்டுகளுக்கு முன் நடைபெற்ற இந்த நிகழ்ச்சியை ஒரு கல்வெட்டு, பறைசாற்றிக் கொண்டிருக்கிறது.

அந்த மடத்தில் ஒரு யாக குண்டம் இருந்ததாம். இரவு நேரங்களில் தீப்பிழம்புகளுக்கு மத்தியில் அமர்ந்து சுவாமிகள் யோகத்தில் ஆழ்ந்திருப்பாராம். அப்போது தலையில் சுண்ணாம்பு பூசி, ஒரு மண் சட்டியையும் கவிழ்த்துக் கொண்டிருப்பாராம்.

ஒரு சமயம் 'ராபர்ட் சதே' என்ற ஆங்கிலேய அதிகாரி இவரது ஆசிரமத்தைக் கடந்து செல்லும்போது வயிற்றுவலி தாங்க முடியாமல், துடித்துப் போய், மயங்கிக் கீழே விழுந்து விட்டார். அதையறிந்த சுவாமிகள், கொஞ்சம் மண்ணை எடுத்து ஒருவரிடம் கொடுத்து, அந்த அதிகாரியின் வயிற்றில் தடவச் சொன்னார். அவ்விதமே அவர் செய்ய, விரைவிலேயே ராபர்ட் வயிற்றுவலி நீங்கி எழுந்தார். சுவாமிகளின் உதவிக்கு நன்றி தெரிவிக்கும் வகையில்

''என்னால் தங்களுக்கு ஏதாவது உதவி செய்ய முடிந்தால் மகிழ்ச்சியடைவேன்'' என்று கூறினார் அந்த அதிகாரி. அதைக் கேட்ட சுவாமிகள், ''காவிரிக்குச் செல்லும் பாதையைச் செப்பனிட்டுத் தாருங்கள். அடுத்துள்ள மகாராஜபுரம் சிவன் கோயிலின் மதிற்சுவரைக் கட்டித் தாருங்கள்'' என்று கேட்டார். அந்த அதிகாரியும் அப்படியே செய்து கொடுத்தார்.

விராலிமலை சுவாமிகள் தீராத நோய்களைத் தீர்த்து வைத்த நிகழ்ச்சிகளையும் அவ்வூர்க்காரர்கள் நினைவு கூர்கிறார்கள். இவர் திருபுவனத்தில் சமாதி அடைந்த தாகத் தெரிய வருகிறது.

## மகாராஜபுரம்

அடுத்துள்ள மகாராஜபுரத்தில் ஸ்ரீ லட்சுமி நாராயணப் பெருமாள் திருக்கோயில் கொண்டுள்ளார். உற்சவ மூர்த்தியின் திருநாமம், ஸ்ரீவரதராஜர். கருடாழ்வாரும், ஆஞ்சநேய மூர்த்தியும் உள்ளனர். இங்கு மாத, வருடாந்தர உற்சவங்கள் நடைபெற்று வருகின்றன. உறியடியும் உண்டு. கும்பாபிஷேகம் நடைபெற்று வெகு ஆண்டுகள் ஆகின்றன. எப்போது என்று தெரியவில்லை.

இப்பகுதியில் நான் அதுவரை பார்த்த கிராமக் கோயில்கள் அனைத்தையும் விட இந்த ஊர் சிவன் கோயில் நன்கு பராமரிக்கப்பட்டு வருவதைக் காண மகிழ்ச்சியாயிருந்தது. சுவாமியின் பெயர் ஸ்ரீமூலநாதர். இறைவி— சிவகாமசுந்தரி. நடராஜ மூர்த்தி அழகாயிருக்கிறார். வெளிப் பிராகாரத்தில் வலம்புரி விநாயகர் நவக்கிரகம், காலபைரவர் திருச்சந்நிதிகள் இருக்கின்றன. சுப்ரமணியருக்கும் தனிச் சந்நிதியிருக்கிறது. தென்புற நுழைவாயில்

மொட்டைக் கோபுரம். அது மூடியிருக்கிறது. மேற்கு நுழைவாயில் திறந்திருக்கிறது.

1947-ம் ஆண்டில் இங்கு கும்பாபிஷேகம் நடைபெற்றிருக்கிறது. கிராம மக்கள் சிவன், பெருமாள் கோயில்களுக்குக் கும்பாபிஷேகம் நடத்த முயன்று கொண்டிருக்கின்றனர்.

காவிரிக்கரையிலுள்ள கணபதி மிகவும் சக்தி வாய்ந்தவர். இருமுறை காவிரியில் வெள்ளம் பெருகியபோது, ஊருக்குள் அது புகாமல் தடுத்தவர் இந்தப் பிள்ளையார் தான் என்று கிராம மக்கள் நம்புகின்றனர்.

மகாராஜபுரத்தில் இருக்கும் வள்ளிதெய்வானை உடனுறை ஸ்ரீசுப்ரமணிய சுவாமி ஆலயமும் நன்றாக இயங்கி வருகிறது.

## சாத்தனூர்

மகாராஜபுரத்திலிருந்து இரண்டு கிலோ மீட்டர் தொலைவில் உள்ள சாத்தனூர் (இங்கும் ஒரு சாத்தனூர் இருக்கிறது!) கிராமத்திற்குச் சென்றோம். இடப்புறமாகத் திரும்புவதற்கு முன், பஸ் பாதையோரமாக வலப்புறம் ஒரு சிறு கணபதி கோயில் இருப்பதைக் கண்டு அவரைத் தரிசித்தோம். அவருக்கு மதகடிப் பிள்ளையார் என்று பெயர். மதகின் பக்கத்தில் அமர்ந்திருப்பதால் அக்காரணப் பெயரைப் பெற்றிருக்கிறார் அவர்.

திருக்காட்டுப்பள்ளி பகுதியில் நான் சென்ற கிராமங்களிலேயே சிவன், பெருமாள் கோயில்கள் இரண்டுமே மிக மிகப்பாழடைந்து இருப்பது சாத்தனூரில்தான். பெருமாள் கோயிலுக்குள்ளே நுழைவதே பெரும்பாடாகி விட்டது.

முள்வேலிகளை ஜாக்கிரதையாக விலக்கிக் கொண்டு போய் ஸ்ரீலட்சுமி நாராயணப் பெருமாளைத் தரிசித்தோம். 'யாருப்பா நீங்கள்? நிச்சயமா உள்ளூர் ஆசாமியாக இருக்க முடியாது. அவர்கள் என்னைத் திரும்பிக்கூடப் பார்ப்ப தில்லையே' என்று ஓர் அசரீரி கேட்டது. கருவறையை நோக்கினேன். அழுக்கேறிய ஆடைகளுடன் எண்ணெயோ, நீரோ பாத்து அறியாத திருமேனியுடன் பெருமாள் காட்சி யளித்துக் கொண்டிருத்தார்!

''பெருமாளே! தங்கள் பிராட்டியின் கடாட்சம் இந்தக் கிராமத்தின் மீது படரச் செய்யுங்கள். உங்கள் அருளாசி சாத்தனூர் வாசி யாராவது ஒருவருக்குக் கிடைக்கச் செய்யுங்கள். அதனால் தங்கள் இல்லம் பொலிவுற்று விளங்கட்டும்'' என்று பிரார்த்தித்துக் கொண்டே திரும்பினோம்.

அக்கிராமத்தில் உள்ள சிவன் கோயிலில் ஸ்ரீவிச்தாதர் — விசாலாட்சி உறைகிறார்கள். பாவம், அவர்களையும் யாரும் கவனிப்பதாகத் தெரியவில்லை. பெருமாள் கோயிலைப் போன்று இங்கேயும் கிராமமக்கள் வந்து போகும் சுவடையே காணாம். அந்தக் கிராமமே மிகவும் நொடித்துப் போய், அதிக ஜன நடமாட்டமே இல்லாமல் காணப்படுகிறது. சின்னஞ்சிறு குருக்கள் பையன் ஒருவன், வீட்டில் வடித்த அன்னதை எடுத்துக் கொண்டு வந்து. குடம் நீரைத் சுவாமி தலையில் கொட்டி, பெயருக்கு விளக்கொன்று ஏற்றி, 'பூஜை' செய்துவிட்டுப் போகிறானாம். நாங்கள் சென்றபோது அவனும் கிராமத்தில் இல்லை. பக்கத்துக் கிராமத்துக் கோயிலுக்குப் போய் விட்டிருந்தான். மறு நாள் அவனைச் சந்தித்து கேட்டபோது, இங்கே இருந்து என்னபிரயோஜனம் சார். மருவூர் சாம்பன் கோயிலுக்குப் போனாலாவது ரெண்டு காசு கிடைக்கும்'' என்று கூறினான். உண்மையைத்தான் சொன்னான் அவன்!

# மருவூர்

சாத்தனூரிலிருந்து இரண்டு கிலோ மீட்டர் தொலைவில் மருவூர் இருக்கிறது. அதை மருகூர் என்றும் அழைக்கிறார்கள். சென்னையில் பிரபலமாயிருந்த 'மைக்' நாராயணன் பிறந்த கிராமம் அது. ஸ்ரீ காஞ்சிப் பெரியவர் 1957-ம் ஆண்டு சென்னைக்கு வருகை தந்து, பல்வேறு இடங்களில் உபந்நியாசங்கள் செய்த போது ஏ.ஆர்.ஏ. நாராயணன், 'மைக்' தொண்டு புரிந்து வந்ததால், பெரியவர் அன்புடன் அவ்வாறு அழைத்தார். ஆனால், நண்பர்களிடையேயும் அவருக்கு அந்தப் பெயர் நிலைத்துவிட்டது. 'திருக்காட்டுப் பள்ளிப் பக்கம் போகும்போது நம்ம கிராமத்தை மறந்துடாதே' என்று 'மைக்' அடிக்கடி நினைவுபடுத்திக் கொண்டிருந்ததால், நாராயணனின் நினைவோடு மருவூரில் நுழைந்தேன். (1991-ம் ஆண்டில் 'மைக்' நாராயணன் மறைந்து விட்டார்)

முன்காலத்தில் படிப்பும், ஆசாரமும், வேத நெறியும், யாகமும், ஓமமும் செழித்தோங்கிய பல கிராமங்கள் இன்று ஆதரவற்ற அநாதைகளைப் போல், செல்வமிழந்து வறுமையில் வாடுபவர்களைப் போல் நிர்க்கதியாய் நிற்கும் அவலத்தை ஏற்கனவே பலமுறை சுட்டிக் காட்டியிருக்கிறேன். அத்தகைய கிராமங்களைக் காணும்போது 'கோல்ட்ஸ்மித்' தின் Deserted Village கவிதைதான் என் நினைவுக்கு வரும்.

பண்டைய சிறப்புகளோடு வாழ்ந்து இன்று வளமிழந்து காணப்படும் கிராமங்களில் மருவூரும் ஒன்று. உள்ளே நுழைந்ததும் ஸ்ரீ வேணுகோபால சுவாமி ஆலயத்தின் முன் பகுதி இடிந்து விழுந்திருக்கும் காட்சி கண்ணில்பட்டது. நெஞ்சம் வெடித்து, சிதறுண்டது.

ஆண்டவா! உன் ஆலயத்தைக் கவனிக்கத் தவறியதால் கிராமம் இந்த நிலைக்குத் தாழ்ந்து போய்விட்டதா! அல்லது கிராமம் தாழ்ந்பேய் விட்டதால் உன்னை இவர்களால் கவனிக்க முடியவில்லையா?' என்று உள்மனம் ஒரு நிமிடம் ஆதாங்கப்பட்டது.

''தினமும் இந்தக் கோரக் காட்சியைப் பார்த்துக் கொண்டு பேசாமலிருக்கிறீர்களே, முயன்றால் கிராமத்தாரால் இதைச் சீர்ப்படுத்த முடியாதா? இந்தக் கிராமத்தைச் சேர்ந்த செல்வந்தர்கள் எங்கேயாவது வாழ்ந்து கொண்டிருப்பார்களே, அவர்கள் உதவி செய்ய மாட்டார்களா?'' என்று வருத்தத்துடன் ஓர் அன்பரிடம் கேட்டேன்.

''என்ன செய்வது? இதைப் பார்க்கும்போது எங்களுக்கும் கஷ்டமாகத்தான் இருக்கிறது. இதைப் பழுது பார்ப்பதற்காக, தற்போது திருச்சியிலிருக்கும் இந்தக் கிராமவாசி ஒருவர் பணம் சேர்த்து வைத்திருக்கிறார். அந்தப் பணம் போதாது. நீங்கள் போட்டோவைப் போட்டு இந்தக் கோயிலின் தற்போதைய நிலையைப் பற்றி எழுதினால், மேலும் பணம் வசூலாகும். திருப்பணியைச் செய்து முடித்து விடுவோம்'' என்றார் அந்த அன்பர் நம்பிக்கையோடு. அவர் கூறியபடியே எழுதி விட்டேன். இந்தியாவிலும் வெளிநாட்டிலும் வசிக்கும் மருவூர்க்காரர்கள் இந்தப் பெரும் முயற்சிக்கு ஒரு கை கொடுத்து உதவுவார்கள் என்று நம்புகிறேன்.

(ஆறு மாதத்திற்குள், வெளிநாட்டிலிருந்து வந்த மருவூர்க்காரர் ஒருவர், இடிந்த மண்டபத்தை செப்பனிட்டு ஆலயத்தில் திருப்பணிகள் நடத்தியதைப் பற்றி எனக்கு மகிழ்ச்சியுடன் கடிதம் எழுதினார்.)

மருவூர் சிவன் கோயில், ஊருக்கு வெளியே பஸ் பாதையையொட்டி இருக்கிறது. ஊருக்குள்ளிருக்கும் பெருமாள் கோயிலுக்கே இந்தக் கதியென்றால், எங்கோ

இருக்கும் சிவன் கோயிலை யார் கவனிக்கப் போகிறார்கள்? சாத்தனூர் சின்னஞ்சிறிய குருக்கள் தினமும் வந்து, தன் கடமையைச் செய்துவிட்டுப் போவதோடு சரி. ஸ்ரீபசுபதீச்வரர் மங்களாம்பிகை உறையும் இக்கோயில், சிற்பங்கள் நிறைந்த கற்கோயில். புராதனமானதாகத் தோன்றுகிறது. கோஷ்டங்களுக்கு உரிய விக்ரகங்களெல்லாம் இருக்கின்றன. அர்த்த மண்டபத்தில் தெற்குப் பார்த்து அழகான ஓர் அம்பாள் சிலை இருக்கிறது. அம்பாள் சந்நிதியொன்றும் வெளியே தனியாக இருக்கிறது. சுவாமி கோயிலில், கணபதியும் நந்தியும் இருக்கிறார்கள். வெளியே பைரவர் சந்நிதி இருக்கிறது.

(இக்கோயிலிலும் திருப்பணிகள் நடைபெற்று குடமுழுக்கான செய்தியும் என் காதுகளில் தேனாகப் பாய்ந்தது.)

சிவன் கோயிலை அடுத்து, சாம்பன்—பாப்பாத்தி கோயில் ஒன்று இருக்கிறது. அங்கு கிராம மக்கள் பிரார்த்தனை செலுத்தப் பெருமளவில் வந்து போகிறார்கள். கோபெருமாள் என்று அழைக்கப்படும் சாஸ்தா கோயிலும் அருகிலேயே இருக்கிறது. ஐயனார் பூர்ணபுஷ்கலையுடன் தரிசனம் தருகிறார். எதிரில் யானை ஒன்று இருக்கிறது.

பஸ் பாதையிலுள்ள மருவூர் மாரியம்மன் கோயிலில் இறங்கியபோது, அறநிலைய அதிகாரிகள் வந்திருப்பதாக நினைத்துக் கொண்டு அரிஜனத் தோழர்கள் காரைச் சூழ்ந்து கொண்டு விட்டார்கள்.

"ஐயா, கோயிலுக்குக் கொஞ்சம் பணம் ஒதுக்குங்க. பூஜை ஒழுங்கா நடக்காட்டி மாரியாத்தா நோயைக் குடுத்துடுவா. நாங்க குடிக்கிற கஞ்சியிலே கொஞ்சம் மீத்து மாரியாத்தாவுக்குத் திருவிழா நடத்திக்கிட்டு வரோம். கொஞ்சம் தயவு பண்ணுங்க" என்று அவர்கள் கெஞ்சிக் கேட்டபோது, நம் நாட்டில் பாமர மக்க

ளிடையே, இறை பக்தியும் தெய்வ நம்பிக்கையும் எத்தனை ஆழமாக வேரூன்றி உள்ளது என்பதைப் புரிந்து கொள்ள முடிந்தது,

## வடுகக்குடி

அடுத்து, நாங்கள் தரிசித்தது வடுகக்குடி ஸ்ரீ கல்யாண சுப்ரமணியர். தென் கைலாயம் என்று சிறப்புப்பெற்ற திருவையாறு திருத்தலத்தின் மேற்கே காவிரியாற்றின் வடபால் அமைந்துள்ள இந்தக் கிராமத்திற்கு ஸ்கந்தபுரம், வடிவேல்குடி என்ற சிறப்புப் பெயர்களும் உண்டு. துளசி மகாராஜா காலத்தில் கட்டப்பட்ட கோயில் அது. உள்ள டங்கிய கல் கட்டடம். ஸ்ரீ வள்ளி தேவசேனையுடன் மேற்கு நோக்கி எழுந்தருளியுள்ளார் முருகப்பெருமான். கருவறை விமானத்தில் சுதை வேலைப்பாடுகள் அருமை யாக இருக்கின்றன. வெளியே, இடும்பன், கடம்பன் சந்நிதிகள் உள்ளன. ஆண்டுதோறும் ஐப்பசியில் ஸ்ரீ கந்த சஷ்டி திருவிழா சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

## திருவையாறு

திருவையாறில் இசையரசருக்கு ஸ்ரீராமன் காட்சி தந்ததைப் பற்றித் தியாகராஜ சரித்திரம் கூறுகிறது. அங்கு சிவபெருமான் நாவுக்கரசருக்குக் கயிலைக் காட்சி தந்து அருளியதைப் பற்றிப் பெரிய புராணம் கூறுகிறது. சிலாத முனிவர் நற்றவம் புரிந்து பரமேச்வரனின் திருவருளால் நந்திகேச்வரரைப் பிள்ளையாய்ப் பெற்ற செய்தியும் இத்தலத்தின் சிறப்பாகும். ஸ்ரீநந்திகேச்வரருக்குத் திருமணம் முடித்து வைக்க சிவபெருமான் குடும்ப சகிதம்

அருகிலுள்ள திருமழப்பாடிக்குச் சென்ற வரலாறும், பின்னர் புதுத் தம்பதியை அழைத்துக் கொண்டு சுற்றிலும் உள்ள ஏழு தலங்களுக்குச் சென்று அவர்களை அறிமுகம் செய்வதற்காக சப்தஸ்தான யாத்திரையைத் தொடங்கி வைத்த வைபவமும் திருவையாறின் தலப் பெருமையைப் பாருக்குப் பறைசாற்றுகின்றன.

திருவையாறு ஐயாறப்பர் ஆலயத்தின் தெற்குக் கோபுர வாசலுக்கு நேரே சுவாமி தீர்த்தம் தந்தருளும் காவிரிப் படித்துறை இருக்கிறது. அதற்கு 'கல்யாண சிந்து' என்று பெயர். இங்கு காவேரி ஸ்நானம் செய்வதைக் குறித்து அப்பரடிகள் சிறப்பித்துப் பாடியுள்ளார். இங்கு நீராடும் பக்தர்களைப் பெருஞ் செல்வமுடையவராக மாற்றுகிறாராம் ஐயாறப்பர். மார்கழி மாதம் கடைசி நாளன்று காவிரி இங்கு தங்கி, ஐயாறப்பரை வழிபட்டு, மறுநாள் தை மாதப் பிறப்பன்று வருணனையடைந்ததாகப் புராண வரலாறு. எனவேதான், பெண்டிர் இன்றும் மார்கழி கடைசி இரவு இங்கு தங்கி, தை முதல் தேதி யன்று படித்துறையில் பொங்கல் படைத்து, தானங்கள் அளித்து வருகிறார்கள். அகலமான படித்துறையும், இருபுறமும் ரதவடிவில் அமைந்திருக்கும் வசந்த மண்டபமும், அதன் சிற்ப எழிலும் கண்ணுக்கு விருந்து படைக்கின்றன. இந்த மண்டபத்தில் தான் பஞ்சநதீச்வரர் என்ற ஐயாறப்பரின் வசந்த விழா நடைபெறுகிறது. அருகில் புண்ணிய காலங்களில் ஐயாறப்பர் எழுந்தருளும் மண்டபமும் உள்ளது.

படித்துறையிலிருந்து கோபுர வாயிலை நோக்கி வரும் போது இடப்புறம் அமைந்துள்ள அறுபத்து மூவர் மடத்திற்குள் நுழைந்தால் அரியதொரு ருத்ராட்ச மண்டபத்தைக் காணலாம். அந்த மண்டபத்தில் தஞ்சாவூர் கலைச்செல்வமான கண்ணாடி சித்திர வேலைப்பாடு களுடன் அமைந்த பெரியபுராண, திருவிளையாடல்

புராண, விநாயக புராண, கந்தபுராண, தேவி மகாத்மிய காட்சிகளைக் கண்டு ரசிக்கலாம்.

தெற்குக் கோபுர வாயிலுக்குள் நுழைந்ததும் இடப் புறம் அமர்ந்திருக்கும் 'ஓலமிட்ட விநாயகரை' முதலில் தரிசித்துக் கொள்ள வேண்டும். அவர்தான் சுந்தர மூர்த்தி நாயனார், ஐயாறப்பரைத் தரிசிக்க உதவியர், நாம் தரிசிக்க உதவுவதற்காகவும் அங்கு காத்திருக்கிறார்.

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர், காவிரி நதி ஆலயத்தையொட்டி ஓடிக் கொண்டிருந்தது. எனவேதான் சுந்தரர் இக்கோயிலைக் 'காவிரிக் கோட்டம்' என்று குறிப் பிடுகிறார். காவிரியின் கரையில்தான் விநாயகப் பெருமான் எழுந்தருளியிருந்தார். அக்காலத்தில் காவிரியின் பெருக்கம் திருவையாற்றிலிருந்து கண்டியூர் வரை பரவியிருந்தது. கண்டியூர் தரிசனத்தை முடித்துக் கொண்ட சுந்தரமூர்த்தி நாயனாரும் சேரமான் பெருமானும், அக்கரையில் தெரிந்த ஐயாறப்பரைத் தரிசிக்கத் திருவுளம் கொண்டனர். ஆனால், பயங்கர வெள்ளம் பெருகிக் கொண்டிருந்தது. எப்படி ஆற்றைக் கடப்பது? இக்கரையிலிருந்தபடியே சுந்தரர் 'பரவும் பரிசென்றறியேன் பண்டேயும்மைப் பயிலாதேன்...' என்று தொடங்கி, 'காவிரிக் கோட்டத் தையாறுடைய அடிகளோ' என்று பாடி முடிக்கவும், அக்கரையிலிருந்து விநாயகர் பெருமான் 'ஓலம்' என்று அபயக்குரல் கொடுத்தாராம். உடனே காவிரி வெள்ளம் மேல்புறமாக ஒதுங்கிப் பளிங்குமலை போல் நின்றது. இரு வரும் மெய்யடியார்களுடன் நடந்து சென்று ஐயாறப்பரை வழிபட்டுத் திரும்பும் போது, காவிரி மீண்டும் இவர்களுக்கு வழி விட்டது.

ஓலமிட்ட விநாயகர் சந்நிதியில் நின்றபடியே கோபுர வாசலுக்கு வெளியே ஒரு குண்டத்தில் தூபம் புகைந்து கொண்டிருப்பதைக் காண்கிறோம். அது இடப்புறமுள்ள துவார பாலகர் சந்நிதிக்காக. அவருக்கு 'ஆட்கொண்டார்'

என்ற சிறப்புக் காரணப் பெயர் உண்டு. தல புராணத்தைப் புரட்டுவோம்.

கௌதம நதி தீரத்திலிருந்து சுசரிதன் என்ற அந்தணச் சிறுவன் பெற்றோரைப் பறிகொடுத்து விட்டு, மனவமைதி தேடியலைந்தான். புண்ணிய நீராடி ஆலய தரிசனம் செய்து கொண்டே திருவையாறுக்குக் கிழக்கே இரண்டு மைலில் உள்ள திருப்பழனம் வந்து சேர்ந்தான். ஓரிரவு கனவில் யமதர்மராஜன் தோன்றி, 'இன்று ஐந்தாவது நாள் நீ மரணம் அடைவாய்' என்று கூறி மறைந்தான். நடுநடுங்கிப் போன அந்தச் சிறுவன், ஐயாறப்பர் ஆலயத்தின் தெற்குக் கோபுர வாயிலை அடைந்து நமசிவாய திருமந்திரத்தைத் தொடர்ந்து ஓதிக் கொண்டிருந்தான். ஐந்தாவது நாள், முன்பு கூறியபடியே யமன் வந்தான். சிறுவனோ, 'ஐயாறப்பா, எனக்கு வேறு கதி யாரப்பா?' என்று கதறினான். கருணாமூர்த்தி, இடப்புறமுள்ள துவாரபாலகரிடம் ஆவிர்பவித்தார். யமனைக் காலடியில் போட்டு மிதித்து, சுசரிதனைக் கருணையோடு ஆட்கொண்டார். அவனுக்கு நீண்ட ஆயுளையும் தந்தருளினார். இந்த விழா கார்த்திகை காளாஷ்டமியில் நடந்து கொண்டிருக்கிறது. ஆட்கொண்டார் காலடியில் யமன் விழுந்து கிடப்பதைக் காணலாம்.

ஆட்கொண்டார் சந்நிதி மிகச் சக்தி வாய்ந்தது. பிரார்த்தனைகள் பலிக்கின்றன. நோய்கள் நீங்கி ஆயுள் பெருகுகிறது. இந்தப் பிரார்த்தனைகளின் அடையாளமே கோபுர வாயிலுக்கு வெளியே நாம் காணும் சாம்பிராணி, குங்கிலிய தூபப் புகை. இத்தலத்தில் காசியைப் போன்றே, இறப்போருக்கு இறுதி மூச்சின்போது இறைவன் தாரக மந்திரத்தை உபதேசம் செய்கிறார். அம்பிகை முந்தானையால் வீசுகிறாள். இதைக் குறிப்பிடத்தான் ஸ்ரீஞானசம்பந்தப் பெருமான் 'ஐம்மேலுந்தி அலமந்த போதாக அஞ்சேலென்றருள் செய்வான் அமருங்கோயில்' என்று கூறுகிறார்.

தெற்குக் கோபுர வாயிலில் இடப்புறம் இருக்கும் துவாரபாலகரின் திருநாமம் ஆட்கொண்டார். வலப்புறம் இருப்பவர் உய்யக்கொண்டார். அவரையும் தரிசித்துக் கொண்டு உள்ளே நுழைந்தால் வலப்புறம் சூரிய புஷ்கரணி என்ற திருக்குளம் இருக்கிறது. சூரியன் தோற்றுவித்த தீர்த்தம் இது. ஸ்ரீ நந்திகேச்வரர் இதில் நின்று தவம் புரிந்ததால் இத்தீர்த்தம் மேலும் புனிதம் பெற்றது. புராணத்தை மீண்டும் புரட்டுவோம்...

சிலாத முனிவருக்கு மக்கட்பேறு இல்லை. ஐயாறப் பரைக் குறித்துத் தவமிருந்தார். புத்திரகாமேஷ்டி யாகம் செய்யும்படி ஈச்வரன் பணித்தார். யாகத்திற்குப் பிறகு பூமியை உழும்போது ஒரு பெட்டகம் கிடைக்கும் என்றும் அதில் ஒரு குழந்தை இருக்கும் என்றும் அவன் பதினாறு வயது வரைதான் வாழ்வான் என்றும் கூறினார்.

சிலாத முனிவர் பூமியை உழுதபோது கிடைத்த பெட்டியில், நான்கு தோள்களும், மூன்று கண்களும், மதி யணிந்த முடியும் கொண்ட ஒரு மூர்த்தி காணப்பட்டது. அதைக் கண்டு வணங்கினார் முனிவர். அப்போது 'பெட்டியை மூடித் திற' என்று ஓர் அசரீரி கேட்டது. அப்படியே செய்தார் முனிவர். அப்போது அம்மூர்த்தி அழகியதொரு குழந்தையாக மாறியது. ஆனந்தக் கண்ணீ ருடன் உச்சி முகர்ந்த சிலாத முனிவர், கிடைத்தற்கரிய அச் செல்வனுக்கு செப்பேச்வரன் என்று பெயரிட்டார்.

செப்பேச்வரனுக்குப் பதினான்கு வயது நிரம்பியது. அதற்குள் அவர் சகல சாஸ்திரங்களிலும், கலைகளிலும் வல்லவரானார். மிருகண்டு மகரிஷி, மார்க்கண்டேயனைக் குறித்து வருந்தியது போல், சிலாத முனிவரும் அவரது துணைவியாரும் துயரமுற்றனர். தவமிருந்து பெற்ற மகனை இன்னும் இரண்டாண்டுகளில் யமனிடம் பறி கொடுத்தாக வேண்டுமே! பெற்றோரின் மனக்குமுறல் மகனை வாட்டியது. விதியை மாற்றுவதற்கு மார்க்கம்

இருக்கும் என்று நம்பினார். சூரிய புஷ்கரணியின் மத்தியில் ஒற்றைக் காலில் நின்று ஐயாறப்பரை நினைத்துக் கடுந்தவமிருந்தார்.

நாட்கள் கடந்தன. நீர் வாழும் பாம்பும், மீன்களும் செப்பேச்வரரின் உடலை அரித்தன. எலும்புக்கூடாகி விட்டார். பெற்றோர் வேதனையுற்றனர். மகன் உயிரோடு திரும்புவானா? அல்லது ஐயாறப்பர் கைவிட்டு விடுவாரோ? சூரிய புஷ்கரணியில் சந்திர புஷ்கரணி, கங்கை, காவேரி, பாலாறு முதலிய நதி தீர்த்தங்களையும் பெருகச் செய்து, செப்பேச்வரனுக்குப் பழைய உருவத்தைத் தந்தருளினார். இவ்வைந்து நதிகளும் கலந்ததனால் இத்தலத்திற்கு 'ஐயாறு' என்ற பெயர் ஏற்பட்டதாகப் புராணம் கூறுகிறது.

சிவபெருமான், கங்கை நீர், பிரம்மனின் கமண்டல நீர், உமையம்மையின் கொங்கை நீர், கொண்டல் நீர், இடபத்தின் வாய் நுரை நீர்—இவற்றைக் கொண்டு அபிஷேகம் செய்து செப்பேசரை கணநாதராக்கியதால் இத்தலத்திற்குப் பஞ்சநதம் என்று பெயர் வந்ததாக மற்றொரு புராணம் கூறுகிறது.

'தஞ்சையிலிருந்து வரும்போது வடவாறு, வெண்ணாறு, வெட்டாறு, குடமுருட்டி, காவிரி என்ற ஐந்து ஆறுகளைக் கடந்து வருவதால் இதற்கு ஐயாறு என்ற பெயர் தோன்றியது என்ற கூற்று சரியல்ல. அப்படியானால் குடந்தையிலிருந்தும், கல்லணையிலிருந்தும், அரியலூரிலிருந்தும் திருவையாறுக்கு வரும்போது ஐந்து ஆறுகளைக் கடக்கிறோமா?' என்று பொருள் பொதிந்த புன்முறுவலோடு கேட்டார் தமிழ்ப் பேராசிரியரும் சைவத் தொண்டருமான சுவர்ணகாளீச்வரன். திருவையாறு தலப் பெருமையை அறிவதிலும், பஞ்சநதீஸ்வரர் திருக்கோயிலையும் சப்தஸ்தான தலங்களைத் தரிசிக்கவும் எனக்கு அருந்துணையாக இருந்து உதவியவர் அவர்.

சுவர்ணகாளீச்வரன் 'ஐயாறு' என்ற பெயருக்கு தத்துவ விளக்கமும் தந்தார். 'ஐ' என்றால் கபம். மனிதனின் இறுதிக் காலத்தில் இந்தக் கபம்தானே நெஞ்சுக் குழியில் தங்கி மூச்சையடைக்கிறது. அச்சமயத்தில் அஞ்சேல் என்று அபயம் தந்து, ஆறுதலளித்து ஈச்வரன் அருள் செய்கிறான். ஐயடிகள் காடவர் கோனும் 'ஐயாறு வாயாறு பேசாமுன் ஐயாறு வாயாலழை' என்று நெஞ்சைப் பார்த்துக் கூறுகிறார். பட்டினத்து அடிகளோ, 'மண்ணும் தணலாற, வானும் புகையாற, எண்ணியதாயும் இளைப்பாற, அயன் கையாற, அடியேன் காலாற' என்று ஐயாறப்பனிடம் ஐந்து ஆறுதல்களை வேண்டுகிறார்.

செப்பேசரின் கதையைத் தொடருவோம். சிவபெருமான் அவருக்கு நல்லுபதேசம் செய்தருளி, நந்திகேச்வரனாக, சிவகணங்களுக்குத் தலைவனாகச் செய்து, கைலாசத்தின் முதல் திருவாயிலைக் காத்தருளும் பணியைத் தந்து, சைவாசாரியருள் முதற்குருவான ஸ்தானத்தையும் அளித்தார். பங்குனி புனர்பூச நட்சத்திரத்தன்று திரு வசிஷ்டரின் பௌத்திரியும், வியாக்ரபாதரின் புத்திரியும், உபமன்யுவின் தங்கையுமான சுயசாம்பிகையை திருமழபாடி தலத்தில் திருமணமும் முடித்து வைத்தார்.

கைலாசத்தில் ஈச்வரன் தெற்கு வாயிலில்தான் அருள் புரிவான் என்பதற்கேற்ப, இப்பூலோக கைலாசத்திலும் உற்சவ காலங்களில் தெற்குக் கோபுர வாயில் வழியாகத் தான் சுவாமி வீதியுலா புறப்படுவார். அச்சமயங்களில் தான் நான்காம் பிராகாரத்தையும் மூன்றாம் பிராகாரத் தையும் இணைக்கும் திருவோலக்க மண்டபத்தின் கோபுர வாயில் திறக்கப்படும். இதர சமயங்களில் அது மூடப்பட்டு இருக்கும்.

மாட வீதிகள் உட்பட ஐந்து பிராகாரங்களை உடையது இத் திருக்கோயில். நாம் தற்போது நான்காம்

பிராகாரத்தின் தென்புறம் இருக்கிறோம். மேற்கு நோக்கி வலம் வரும்போது நமக்கு இடப்புறம் ஒரு கோயிலைக் காண்கிறோம். அதற்குத் தென் கைலாயம் என்று பெயர். அப்பர் பெருமான் திருக்கயிலைக் காட்சி கண்ட வைபவத்தை நினைவுபடுத்தும் கற்கோயில் இது. இக் கோயிலைக் கட்டியவர் முதலாம் ராஜேந்திரனின் மனைவி யான பஞ்சவன்மா தேவியார். இங்குள்ள இறைவனின் திருநாமம் பஞ்சவாணர்; இறைவி, அஞ்சலை. இக்கோயி லில் அப்பர் சுவாமிகளின் திருவுருவம் இருக்கிறது. திரு மாளிகைப் பத்தி சூழ்ந்திருக்கிறது. கர்நாடக ஹோய்சால கலைச் செல்வமான கருநிறக் கல்லில் குடைந்த சிற்பத் தூண்களைக் காண்கிறோம். கிருஷ்ணராஜ உடையார் திருமதில்களைத் திருப்பணி செய்திருக்கிறார்.

திருநாவுக்கரசருக்கு கைலாசத்தைத் தரிசிக்க வேண்டும் என்று தணியாத ஆசை. புறப்பட்டு விட்டார். காசியைக் கடந்து, காடு மேடுகளில் தனியாகச் செல்கிறார். கால்கள் தேய தள்ளாடித் தள்ளாடி நடக்கிறார். கைகளை ஊன்றி நடக்கிறார். முட்டிகள் தேய்ந்தன. இரத்தம் கொட்டு கிறது. மேனியெங்கும் ரணங்கள். மார்பினால் தவழ்ந்து செல்கிறார். அடியார்களின் துயர் கண்டு பொறுக்காத சிவ பெருமான் முனிவர் வடிவத்தில் நாவுக்கரசரின் முன் தோன்றி, 'அப்பனே, இம்மானிட உடலோடு கயிலையைக் காண்பது இயலாது' என்று கூறுகிறார். அப்பர் நெஞ்சு தளரவில்லை. '...ஆளும் நாயகர் கயிலையில் இருக்கை கண்டல்லால் மாளும் இவ்வுடல் கொண்டு மீளேன்' என்று கூறுகிறார். ஈச்வரனுக்கு வேறு வழி தோன்றவில்லை. 'அப்படியானால் இந்தக் குளத்தில் மூழ்கி திருவையாற்றில் எழுந்திரு. அங்கு நீ கயிலை காட்சி காண்பாய்' எனறு கூறவும், நாவுக்கரசர் 'வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி' என்று துதித்து, திருவைந்தெழுத்தை ஓதி அக் குளத்தில் இறங்கினார். அடுத்த கணம் திருவையாற்றில், கோயிலுக்கு வடமேற்கே மேட்டுத் தெருவில் இருக்கும்

சமுத்திர தீர்த்தத்திலிருந்து எழுந்தார். அந்தக் குளத்தைத் தற்போது 'உப்பங்குட்டை' என்று அழைக்கிறார்கள். அதன் நீர் உப்புக் கரிக்கிறது. இக்குளத்திற்கு எதிரில் அபீஷ்டவரத கணபதிக்கும், அப்பருக்கும் சந்நிதிகள் அமைந்துள்ளன.

திருக்குளத்திலிருந்து வலமாகப் புறப்பட்ட அப்பர் பெருமான், சராசரங்கள் தங்கள் துணையோடு கூடி விளங்கும் தோற்றத்தைக் கண்டு வியந்து கொண்டே கோபுர வாயிலுக்கு வருகிறார். அது கைலாச மலையாகக் காட்சி தர, அங்கு உமையம்மையோடு கயிலைநாதனைத் தரிசித்து, ஆனந்தம் பொங்க 'மாதர்ப் பிறைக்கண்ணி யானை மலையான் மகளொடு' என்று தொடங்கி, 'கண்டேனவர் திருப்பாதம் கண்டறியாதன கண்டேன்' என்று திருப்பதிகம் பாடித் தொழுதார். இந்த விழா ஆடி அமாவாசையன்று தென் கயிலாயக் கோயிலில் நடைபெறுகிறது.

இக் காட்சியை மானசீகமாகக் கண்டு களித்துவிட்டு, தென் மூலை விநாயகரை வழிபட்டு மேற்கு கோபுரத்தை அண்ணாந்து பார்க்கிறோம். அடடா! எத்தனை அழகு, எத்தனை கம்பீரம். அதிலுள்ள பதுமைகளையெல்லாம் நம்மோடு பேச வைத்துள்ள சிற்பியை நெஞ்சார வாழ்த்துகிறோம். இக்கோபுரத்தைக் கட்டிய அச்சுதப்ப நாயக்கருக்கு நினைவாஞ்சலி செலுத்துகிறோம். அத் தம்பதியின் சிலைகள் கோபுர வாயிலில் அமைக்கப்பட்டிருந்தனவாம். ஆனால், தற்போது அவர்களது திருப்பாதங்கள் மட்டும் தான் மிஞ்சியிருக்கின்றன. நன்றி பிறவா நம் மனம் அவற்றைத் தொழுகிறது.

தெற்குப் பிராகாரத்தில் உள்ளது போல் வடக்குப் பிராகாரத்திலும் ஒரு கோயில் இருக்கிறது. அது வட கயிலாயம். ஓலோகமாதேவீச்சுரம் என்று பெயர். இராஜ இராஜனுடைய மனைவி ஓலோகமா தேவியார்

திருப்பணி செய்தது. இந்தக் கோயிலுக்குத் திருமுறைகளைத் தேடித் தந்த பெருமை உண்டு. ராஜராஜசோழன் இங்கு வழிபட வந்தபோது, ஓதுவார் தேவாரம் ஓதிக்கொண்டிருந்தார். அதைக் கேட்டுப் பரவசமான அரசன், அச்சுவடிகளைக் காணவேண்டும் என்று கூறினானாம். அவையனைத்தும் செவிவழி வந்த பாடல்கள் என்று அறிந்த போது, சுவடிகளை எப்படியாவது தேடிகண்டுபிடித்து விடவேண்டும் என்று உறுதி பூண்டான். பின்னர், சிதம்பரத்தில் ஸ்ரீநடராஜப் பெருமானின் அருளால் திருமுறைச் செல்வங்கள் கிடைப்பதற்கு இது தொடக்கமாக அமைந்தது.

முன் காலத்தில் இக்கோயிலில் நடைபெற்ற திருவிழாக்களைப் பற்றிக் கேள்வியுற்று வியக்கிறோம். ‘அந்த நாட்கள் மீண்டும் வருமா?' என்ற ஏக்கத்துடன் திரும்புகிறோம்.

வலமாக வந்து, பச்சையம்ப முதலியார் மண்டபத் தூணில் பச்சையப்ப முதலியார், அவருடைய இரு துணைவியர் உருவங்களைக் காண்கிறோம். விக்கிரமச் சோழன் காட்டிய கோபுரத்தினுள் நுழைந்து, தங்கக் கொடி மரம் உள்ள மூன்றாம் பிராகாரத்திற்குள் செல்கிறோம்.

மூன்றாம் பிராகாரத்தை வலம் வருபவர்களுக்கு ஓர் அதிசயத்தைக் காட்டுகிறார்கள். மதிற்சுவரின் தென் மேற்குக் கோடியில் நின்று வடக்கு நோக்கி ‘ஐயாறா' என்று உரக்கக் கூவி அழைத்தால், அவ்வொலி எதிரொலியாக நமக்கு ஏழு முறை கேட்கும் என்கிறார்கள். திரு. சுவர்ண காளீஸ்வரன் எங்களுக்காக முழக்கமிட்ட போது மூன்று அல்லது நான்கு எதிரொலிகள்தான் கேட்டன. அந்தக் கோயிலில் ‘முருகா' என்று ஒருவர் இருக்கிறார். அவர் ‘முருகா' என்று முழங்கினால் நிச்சயம் ஏழுமுறை கேட்குமாம். ஆனால், அதைக் கேட்க எங்களுக்குக்

கொடுத்து வைக்கவில்லை. நாங்கள் சென்ற சமயம் அவர் ஆலயத்தில் இல்லை.

அந்தப் பிராகாரத்தை வலம் வந்து தங்கக் கொடி. மரத்தைக் கடந்து உள்ளே சென்றால் திருவோலக்க மண்டபத்தை அடைகிறோம். இங்கு அம்பிகையாம் அறம் வளர்த்த நாயகியோடு ஐயாறப்பர் எழுந்தருளி தீபாராதனை நடைபெறும் காட்சி காணக்கிடைக்காத ஒன்றாகும். சித்திரைப் பெருவிழாவின் கடைசி நாளன்று இங்கு ஏழூர் பல்லக்குகளும் எழுந்தருளும் காட்சியும், ஏழூர் பவனி முடிந்து அம்மையும் அப்பனும் மீண்டும் ஆலயத்திற்குள் எழுந்தருளி, பக்தர்களின் சிவநாம ஒலியுடன் பெருமான் அசைந்து அசைந்து ஆட, அசையாத கல்மனமும் அசைந்து நெகிழும் காட்சியும் பரவசமூட்டும் பக்தி ஓவியங்களாகும். இம் மண்டபத்தில் தான் சித்திரைத் திருவிழாவின் ஐந்தாம் நாளன்று இறைவன் தன்னைத் தானே பூஜை செய்யும் வைபவமும் நடைபெறுகிறது.

தன்னைத்தான் பூஜிக்கும் விழாவின் வரலாறு என்ன?

முன்பு இருபத்துநான்கு சிவாசாரியர்கள் பஞ்சநதீச்வரரைப் பூஜித்து வந்தனர். ஒரு சமயம் ஐந்தாம் நாள் பூஜை முறைக்குரிய சிவாச்சாரியார் ஊரில் இருக்கவில்லை. காசி யாத்திரை சென்றிருந்தவர் நேரத்திற்குத் திரும்ப முடியவில்லை. இதர 23 அர்ச்சகர்களும்,வராத அர்ச்சகருக்குரியப் பங்கைத் தரமுடியாது என்று மறுக்கவே, அவருடைய மனைவி துயரமுற்றாள். ஐயாறப்பரை வேண்டினாள். தன் கணவனின் பங்கு தனக்கு வந்து சேர வேண்டும் என்று மன்றாடினாள்.

அடுத்த கணம் சுவாமி, அர்ச்சகர் வடிவத்தில், காசியிலிருந்து திரும்பியதன் அடையாளமான காவடியுடன் கொள்ளிடக்கரையில் வந்து இறங்கினார். அந்த இடம் திருவையாற்றுக்கு அருகில் உள்ள 'விளாங்குடி' என்ற சிற்றூர். ஆபத்துக் காலத்தில் சகாயத்திற்காக வந்த

சுவாமி. ஆபத்சகாயர் என்ற திருநாமத்துடன் அவ்வூர்க் கோயிலில் எழுந்தருளியுள்ளார். அம்பாளின் பெயர் தர்மாம்பாள். தர்மத்தைக் காக்கும் பொருட்டு வந்த கணவனுக்குத் துணையாக வந்தவள் அல்லவா! இங்கு கொள்ளிடத்துக்குத் திருமஞ்சனக் காவேரி என்று பெயர்.

அன்று திருவோலக்க மண்டபத்தில் அர்ச்சகர் வேடத்தில் இருந்த சுவாமி ஐயாறப்பருக்குப் பூஜை செய்தார். இதுதான் இன்றும் தன்னைத் தான் பூஜிக்கும் விழாவாக நடைபெறுகிறது. இதர இருபத்துமூன்று சிவாச்சாரியர்களும் அவருடைய பங்கை அளித்தார்கள் இந்தச் சமயத்தில் உண்மையான சிவாச்சாரியாரும் காசியிலிருந்து வந்துவிடவே, எல்லோரும் வியப்பில் ஆழ்ந்தார்கள், சிவபெருமான் அவர்கள் முன் தோன்றி, உண்மையான சிவாச்சாரியாரை அடையாளம் காட்டியதோடு இதர அர்ச்சகர்கள் அவருக்கு இரண்டு பங்கு அளிக்க வேண்டும் என்றும் உத்தரவிட்டு விட்டு மறைந்தார்.

அடுத்த பிராகாரத்தில் சோமாஸ்கந்தர் மண்டபம் இருக்கிறது. இங்கு உளியினால் செதுக்கப்படாத விடங்கப் பெருமானின் ஸ்படிக லிங்கம் — அம்மையும் அப்பனும் ஒருருவில் இணைந்த வடிவாக — இருக்கிறது. அருகில் நகரத்தார் ஒருவர் அளித்த மரகத லிங்கமும் இருக்கிறது. இவ்விரு லிங்கங்களுக்கும் இரண்டாம் காலத்தில் அபிஷேக ஆராதனைகள் நிகழ்கின்றன.

அங்கு ஐயாறப்பர் சோமாஸ்கந்த வடிவத்திலும் காட்சியளிக்கிறார். அறம் வளர்த்த நாயகி, விநாயகர், பிட்சாடனர் முதலிய உற்சவ மூர்த்திகளும் உள்ளனர். சோழர் காலக் கலைச் செல்வத்தின் சின்னமாகத் திகழும் இம் மண்டபத்தின் சிற்ப எழிலைக் கண்ணாரக் கண்டு மகிழ்ந்துவிட்டு, பெரிய புராண, சப்தஸ்தான வரலாறுகளை ஓவியங்களாகக் கண்டு களித்து விட்டு தெற்குப் பிராகாரத்தில் நுழைகிறோம்.

காசியிலும், நாகப்பட்டினத்திலும், திருவையாற்றிலும் தான் முக்தி மண்டபங்கள் சிறப்பாகக் கூறப்படுகின்றன. இங்குள்ள செப்பேசர் மண்டபம்தான் முக்தி மண்டபமாகக் கருதப்படுகிறது. இம்மண்டபத்தில் தல விநாயகரான ஆதி விநாயகர் திருச்சந்நிதி கொண்டிருக்கிறார். நவக்கிரகங் களும் பஞ்சபூத லிங்கங்களும் இருக்கின்றன. இவற்றை வழிபட்டு அங்குள்ள பலகணி வழியாகப் பார்த்தால் ஓர் அபூர்வ தட்சிணாமூர்த்தியின் உருவச்சிலையைத் தரிசிக்க லாம். பின்னர், அருகில் சென்று அவரைத் தரிசிப்போம்.

செப்பேசரான நந்தியம்பெருமான் ஜபம் செய்த மண்டபம் இது. அந்த நிலையில் அமர்ந்து நாமும் ஜபம் செய்தால் பெரும் பயனடைவது திண்ணம். தியாக ப்ரம்மமும் கோடகநல்லூர் சுந்தர சுவாமிகளும் இங்கு ஜபம் செய்வது வழக்கமாம். ஸ்ரீ தியாகராஜ சுவாமிகள் இங்கு அமர்ந்து தமது கீர்த்தனைகள் சிலவற்றை இயற்றியதாகவும் கூறப்படுகிறது. சங்கீத வித்வான்கள் திருவையாறு சென்றால், தியாகராஜர் சமாதியைத் தவிர இந்த மண்ட பத்திலும் அமர்ந்து ஒரு கீர்த்தனையாவது பாடிவிட்டு வருவது என்ற வழக்கத்தை ஏற்படுத்திக் கொண்டால், அவர்களுடைய சங்கீத ஞானம் பெருகும். கர்நாடக சங்கீதம் புத்துயிர் பெற்று மீண்டும் பழைய உன்னத நிலையை எய்த அடிகோலும்.

இம் மண்டபத்திலிருந்து கீழே இறங்கினால் மூன்று வட்டங்ளின் மத்தியில் ஒரு பள்ளத்தையும் காண்கி றோம். கரிகால மன்னன் இக் கோயில் திருப்பணி செய்வ தற்கு இங்கு நிதி கிடைத்ததாகச் செவி வழி வந்த கதை யொன்று உண்டு. வலம் வரும்போது சந்திரசேகரைத் தரிசித்து, பக்கத்திலுள்ள சிவலிங்கங்களையும் வழிபட்டு தனுசு சுப்ரமணிய சுவாமி திருச் சந்நிதிக்கு வருகிறோம். வில்லேந்திய வேலவராக முருகன் இங்கே காட்சியளிக்

கிறார். இங்கு மயிலின் முகம் இடம் மாறி சுவாமிக்கு வலப்புறத்திலிருக்கிறது.

'சுப்ரமணிய பராக்கிரமம்' என்னும் பழைய நூல் தனுசு சுப்ரமணிய வடிவத்தின் தத்துவத்தை விளக்குகிறது. ஸ்ரீ ராமபிரானது பிரிவாற்றாமை தாங்காமல் வருந்திய குகன், முருகனை வழிபட்டான். அப்போது, முருகப் பெருமான் கோதண்டராமனாகவும், வள்ளி சீதையாகவும், தெய்வ யானை லட்சுமணனாகவும் காட்சியளித்தார்கள். தஞ்சை பெரியகோயிலில், பெரிய நாயகியார் சந்நிதிக்கு முன்புற முள்ள மண்டபத் தூண் ஒன்றில் ஒன்றரையடி உயர 'கோதண்ட முருகனை'த் தரிசிக்கலாம்.

திருச்செந்தூர் புராணத்தில் வில்லேந்திய முருகனுக்கு குகசுவாமி எனவும் அனந்த நாயகன் எனவும் பெயர்கள கூறப்பட்டுள்ளன.

சுந்தரச் சிலை யிராமன்
தோற்றமும் காட்டிஞான
முந்திய பிரமானந்த
சித்தியும் கொடுத்து வேத
மந்திர குகசுவாமி
என்னவும் வாய்ந்த பேர்
ஆனந்த நாயகனென்று
ஓதுநாமமும் குமரன் பெற்றான்.

வடக்குப் பிராகாரத்தில் துர்க்கா, லட்சுமி, சரஸ்வதி மூவரும் எழுந்தருளியிருக்கும் மண்டபத்தை அடைகிறோம். அறிவாற்றலையும், செல்வத்தையும், நல்ல முறையில் பயன் படுத்திக் கொள்ள வல்லமையும் வேண்டுமாதலின், மூவ ருடைய அருளும் நமக்குத் தேவை. இச் சக்திகளை ஒரே இடத்தில் வழிபட அமைந்திருக்கும் சந்நிதி இக்கோயிலின் தனிச் சிறப்புகளில் ஒன்றாகும். இங்கு ஒரு கிணறு இருக் கிறது. அதிலுள்ள நீரைத் தினமும் பருகித் தலையில்

தெளித்துக் கொண்டால் குடும்ப ஒற்றுமை ஏற்படும் என்றும், இவ்வாறு பல குடும்பங்கள் பயனடைந்துள்ளன என்றும் சுவர்ணகாளீச்வரன் கூறினார்.

அடுத்துள்ள ஜ்வரஹரேச்வரரையும் சண்டிகேச்வரரையும் தரிசித்திக் கொண்டு சபாமண்டபத்தின் மீதேறி ஐயாறப்பரின் கருவறை விமான கோபுரத்தில் மின்னும் பொன் மயமான கலசங்களைத் தரிசித்துப் புண்ணியம் பெற்று, நடராஜரை வழிபட்டு, சப்தஸ்தானத் தலங்களான திருவையாறு, திருப்பழனம், திருச்சோற்றுத்துறை. திருவேதிக்குடி. கண்டியூர், திருப்பூந்துருத்தி, திருநெய்த்தானம் பெருமான்களை சிவலிங்க வடிவில் அங்கு தரிசிக்கிறோம்.

பின்னர், சுவாமி கோயிலுக்குள், நுழைகிறோம். கருவறையில் ஐயாறப்பர், மண் வடிவமாய்ப் புற்றிடங் கொண்டு விளங்குகிறார். புனுகுச் சட்டம் மட்டுமே சாத்தப்பெறும் தீண்டாத் திருமேனிப் பெருமான் ஆவார் இவர்.

பஞ்சநதீச்வரரை வழிபட்டு, வலம் வரும் பொருட்டுத் தென்புறம் வருகிறோம். அங்கு தனி மண்டபத்தில் திருக்கோயில் கொண்டுள்ள ஹரிகுரு சிவயோக தட்சிணாமூர்த்தியைக் கண்டு நம்மை அறியாமல் தியானத்தில் ஆழ்ந்து விடுகிறோம்.

குருமூர்த்தி மேல் வலக் கரத்தில் கபாலமும், இடக் கரத்தில் சூலமும், கீழ் வலக் கரத்தில் அபயஹஸ்தமும், இடக்கரத்தில் சிவஞான போதமும் வைத்திருக்கிறார். தியான நிலைக்குப் புலனடக்கம் இன்றியமையாதது என்பதைக் காட்ட, ஆமையைப் பாதத்தினடியில் அழுத்திக் கொண்டிருக்கிறார் போலும்!

இப்பிராகாரத்தை வலம் வரும் வழக்கமில்லை, ஐயாறப்பரது ஜடாபரம் தொடர்ந்து போவதால் அதைத்

தாண்டக் கூடாது என்பது வழக்கு. இங்கு திருமகள் தவம் செய்து கொண்டிருக்கிறாள் என்பதும் மரபு.

திரும்பும் வழியில், விக்கிரம சோழன் கோபுரத்தைக் கடந்ததும் கிழக்கு வெளிப் பிராகாரத்தின் வலப்புறம் மயில் மண்டபத்தைக் காண்கிறோம். அங்கிருந்தபடியே கீழ் ராஜகோபுரத்தைத் தரிசித்து வடக்கே திரும்பினால் நூற்றுக்கால் மண்டபம் கண்களில் படுகிறது. உள்ளே சென்று தெற்கு நோக்கி எழுந்தருளியுள்ளஸ்ரீஞானதண்டாயுதபாணியை வழிபடுகிறோம். பின்னர் மண்டபத்துக்கு மேற்புறம் காணப்படும் அலங்கார வளைவு வழியாகத் தர்மசம்வர்த்தினி என்னும் அறம் வளர்த்த நாயகி கோயிலை அடைகிறோம். உலகம் உய்ய பெருமானை அம்பிகை வழிபட்டு, ஐயாறப்பர் தந்த இரு நாழி நெற்கொண்டு வையம் வாழ முப்பத்திரண்டு அறங்களையும் வளர்த்த வரலாற்றை மனதிற் கொண்டு, அன்னையை வழிபட்டு நாம் விடை பெறுவோம்.

தஞ்சை மாவட்டத்தில் புகழ்பெற்ற திருவிழாக்களில் திருவையாற்றில் நடைபெறும் சப்தஸ்தானப் பல்லக்கு ஒன்றாகும். பங்குனி மாதம் புனர்வசு நட்சத்திரத்தன்று ஐயாறப்பர், அறம் வளர்த்த நாயகி — இவ்விருவரின் முன்னிலையில், திருமழப்பாடித் திருத்தலத்தில் நந்தியம் பெருமானுக்கும் சுயசாம்பிகைக்கும் நடைபெற்ற திருமணத்தின் தொடர்ச்சியாக இந்த விழா கொண்டாடப் படுகிறது. சித்திரை மாதம் பிரும்மோற்சவம் முடிந்த பிறகு, முழு நிலவின் மறு நாள் இவ்விழாவை நடத்துகிறார்கள். ஐயாறப்பரும் அறம் வளர்த்த நாயகியும் அழகிய பெரிய கண்ணாடிப் பல்லக்கிலும், புது மணத் தம்பதியான நந்தியம் பெருமானும் அவரது துணைவியாரும் சிறிய வெட்டிவேர் பல்லக்கிலும் பவனி புறப்படுகிறார்கள். ஐயாறப்பரின் பல்லக்கை 'பெரிய' பல்லக்கு' என்றும்,

வெட்டிவேர் பல்லக்கை 'மாப்பிள்ளைப் பல்லக்கு' என்றும் குறிப்பிடுகிறார்கள்.

இவ்விரு பல்லக்குகளும் காலை ஆறு மணிக்கு கோயிலை விட்டுப் புறப்பட்டு திருப்பழனம், திருச்சோற்றுத் துறை, திருவேதிக்குடி, திருக்கண்டியூர், திருப்பூந்துருத்தி, தில்லைஸ்தானம் ஆகிய ஆறு தலங்களுக்கும் சென்று மறு நாள் மதியத்திற்குள் திருவையாற்றுக்குத் திரும்பி விடு கின்றன. ஒவ்வோர் ஊரிலும் அந்த ஊர் பெருமானும் பெருமாட்டியும் இவர்களை எதிர்கொண்டழைத்துச் சென்று, ஆலயத்தில் மரியாதைகள் செய்துவிட்டு, தங்களுடைய பல்லக்கில் அடுத்த ஊருக்குக் கூடவே வருகிறார்கள்.

நம் ஆலய திருவிழாக்கள் பெரும்பாலும் தல புராணங் களை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப்பட்டவை யாகும். மக்கள் வேடிக்கை பார்ப்பதற்காகச் சமுதாயத்தின் பொழுது போக்கு அம்சமாக அமைக்கப் பெற்றிருந்தாலும், பொருளாதார ரீதியில், உற்பத்தியாகும் பொருட்களை விற்பனை செய்வதற்கு ஒரு வாய்ப்பு ஏற்படுத்தித் தரப் பட்டாலும், இருக்கும் செல்வம் பலருக்கும் பயன்பட வேண்டும் என்ற சமதர்மத்தின் அடிப்படையில் அது விநியோகிக்கப்பட்டாலும், நம் முன்னோர்கள் முக்கியமாக இறை பக்தியைப் பரப்பும் சாதனங்களாகத்தான் இத் திருவிழாக்களை நடத்தி வந்திருக்கிறார்கள் என்பதில் சிறிதும் ஐயமில்லை. அரிய பெரிய தத்துவங்களைப் புரிந்து கொள்ள முடியாத பாமர மக்கள் இத்தகைய கண் கொள்ளாக் காட்சிகளைக் கண்டு, அவற்றில் தங்கள் மனத்தைப் பறி கொடுத்து, சிந்தையைக் கடவுளிடம் செலுத்தி, இறையுணர்வில் லயித்து, தெய்வீகக் கோட்பாடு களுக்குத் தங்களை அடிமையாக்கிக் கொண்டு நல்லொழுக் கங்களை வளர்த்து,நன்மக்களாக வாழக் கற்றுக் கொள்ளும்

சமயப் பல்கலைக் கூடங்களாக இத்தகைய விழாக்களைப் பயன்படுத்தி வந்திருக்கிறார்கள்.

அதனாலேயே ஒவ்வொரு திருத்தலத்திலும் தொன்று தொட்டு நடைபெற்று வரும் வருடாந்தர ஆலய திருவிழாக்கள் அம்மண்ணோடு கலந்து மக்களின் இரத்தத்தில் ஊறி, பெருமையோடும் பூரிப்போடும் அவர்கள் கொண்டாடும் குடும்ப விழாக்களாக இவை மிளிர்ந்து வருகின்றன.

சப்த ஸ்தானப் பல்லக்கு என்ற இந்த ஏழூர் விழா, அப்பகுதியில் வாழும் மக்களின் மனத்தில் ஆழமாகப் பதிந்திருப்பதால் அவர்கள் குடும்பம் குடும்பமாக, வெய்யிலில் காய்ந்து, நடையாய் நடந்து, இரவில் கண் விழித்து, கிடைத்ததை உண்டு. இரு நாட்களையும் கோலாகலமாகக் கொண்டாடும் வைபவத்தை நேரில் பார்க்கும் வாய்ப்புக் கிட்டியதைப் பெரும் பேறாகக் கருதுகிறேன்.

விடியற்காலையிலிருந்தே திருவையாறு வீதிகளில் பக்தி வெள்ளம் அலை மோதிக் கொண்டிருந்தது. ஆறுமணி சுமாருக்கு பெரிய பல்லக்கும் மாப்பிள்ளைப் பல்லக்கும் ஆலயத்தை விட்டு வெளியே வந்து, கோபுர வாசலில் தீபாராதனை நடைபெற்ற போது, கோபுர தரிசனத்தை முடித்துக் கொண்ட உள்ளூர்க்காரர்கள் அனைவரும் வீடு திரும்பிக் கொண்டிருந்தார்கள். சப்தஸ்தான விழாவில் கலந்து கொள்ள வெளியூர்களிலிருந்து வந்தவர்கள் தெருவெல்லாம் அடைத்துக் கொண்டு, வீடுகளிலெல்லாம் நிறைந்து. மூலை மூலையாக நின்று கொண்டு மகிழ்ச்சிக் கடலில் நீந்திக் கொண்டிருந்தனர்.

வெட்டி வேர் பல்லக்கு முன்னால் சென்று தெற்கு மாட வீதியில் நின்று கொண்டிருந்தது. பெரிய பல்லக்கு தென்கிழக்கு மூலையிலுள்ள செவ்வாய்க் கிழமை படித்துறைக்குச் சென்று விட்டுத் திரும்பிக் கொண்டிருந்தது.

ஆகா! எத்தனை அழகு அந்தக் கண்ணாடிப் பல்லக்கு! வைரமாக ஒளி சிந்தி, தங்கமாக மின்னுகிறது அது. அசைந் தாடும் ரச குண்டுகளும், அலங்காரப் பதுமைகளும், வண்ண வண்ண மலர்த் தோரணங்களும் உள்ளத் தைக்கொள்ளை கொள்கின்றன. அந்தக்கலைச் செல்வத்தை ஆண்டுதோறும் தயாரித்துத் தருப வர்கள் ராவுஜி குடும்பத்தினர். துர்க்காமணி அம்மாள், முந்நூற்றைம்பது வருடங்களுக்கு முன் வைத்து விட்டுச் சென்ற அறக் கட்டளைதான் அதற்கான செலவை ஏற்றுக் கொள்கிறது. அவர்களது மண்டகப்படியை ஏற்றுக் கொள்ளத்தான் அப்பல்லக்கு அத் தெருவுக்குச் சென்று விட்டுத் திரும்புகிறது. அது ஆடி ஆடி வருகிறது. அசைந்த படி வருகிறது. உற்சவ மூர்த்திகளும் தனி அரும்பாளும் பட்டு மெத்தைகளில் கொலு வீற்றிருக்கும் கோலா கலத்தை எப்படி வர்ணிப்பது? அப்பர் பெருமானுக்குக் கயிலைக் காட்சித் தந்த திருத்தலத்தில், சிவபெருமான் நமக்கெல்லாம் திருக்கோலக் காட்சி தந்து கொண்டு பவனி வருகிறார். பராக்!

மெய்யடியார்கள் கூடி வருகிறார்கள்; பெருமான் புகழ் பாடி வருகிறார்கள்; பரவசத்தில் ஆடி வருகிறார்கள். பக்தி மேலிட பக்கத்து ஊர்களிலிருந்து பறந்தோடி வந்த பஜனைக் கோஷ்டிகள் தேவாரம் இசைத்து வருகிறார்கள்; திருப்புகழ் ஓதி வருகிறார்கள்: வந்துகொண்டேயிருக் கிறார்கள்; பெண்டிர் பக்தியில் கரைகிறார்கள்; சின்னஞ் சிறார்கள் நெக்குருகப் பாடுகிறார்கள்; வேதவிற்பன்னர்கள் அடக்கமாக வேத பாராயணம் செய்து கொண்டு மெள்ள நடந்து வருகிறார்கள்.

தென் கோபுர வாயிலில், ஆட்கொண்டார் சந்நிதியில் எழும்பும் குங்குலியப் புகையின் நறுமணம் நம்மைத் தேவ லோகத்திற்கே அழைத்துச்செல்கிறது. எதிரிலுள்ள காவிரிப் படித்துறையில் மண்டகப்படியை ஏற்றுக் கொண்டுதிரும்பிய பெரிய பல்லக்கு, ஆட்கொண்டார் சந்நிதிக்கு நேரே அரை

நிமிடம் நிற்கிறது. அதற்குள் சூரிய பகவான் பஞ்ச நதீச்வரரையும் தர்ம சம்வர்த்தினி அம்பாளையும் ஆனந்த மாகத் தரிசித்துக் கொள்கிறான். தெய்வீக ஒளியால் அபிஷேகம் செய்யப்பட்ட கண்ணாடிப் பல்லக்கு. கந்தர்வ லோகக் காட்சியாக ஒரு கணம் தோற்றமளிக்கிறது. பிறவிப் பயனை எய்தி விட்டதாக எக்காளமிடுகிறது நம் உள்ளம்.

இதற்குள் ஆலயத்தை வலம் வந்து விட்ட மாப்பிள்ளை நந்தியம்பெருமானின் பல்லக்கு, பாவா அக்கிரகாரத்திற்கு வந்து 'பட்டறை'யில் மண்டகப்படியை ஏற்றுக் கொண் டாய் விட்டது மணி ஒன்பது. இன்னும் பெரிய பல்லக்கைக் காணோம், தேடிக் கொண்டு அப்பிரதட்சிணமாகச் சென்றோம். அப்போதுதான் மேற்குக் கோபுர வாயிலுக்கு அருகே அது வந்து கொண்டிருந்தது. காரணத்தை விசாரித்த போது, கடை வீதியில் நேரமாகி விட்டதாகக் கூறினார்கள். வியாபாரிகள் மண்டகப்படியோடு தாராள மாக வேட்டிகளும் தருவது வழக்கமாம். அவை பல்லக்குச் சுமப்பவர்களுக்குச் சொந்தம். கடை வீதியில் அவசரப் பட முடியுமா? அப் புது வேட்டிகளெல்லாம் வெண் குஞ்ச லங்களாக, பல்லக்கின் முன்புறமும் பின் புறமும் கட்டி வைக்கப்படுகின்றன.

அந்தப் பல்லக்கைச் சுமப்பது எளிதான செயலல்ல. மொத்தம் நாற்பது பேர் தேவையாயிருக்கிறது. அம்மாதிரி மூன்று கோஷ்டிகள் மாறி மாறிச் சுமந்து வர ஏற்பாடாகி யிருக்கிறது. அத்தனை பளுவை கடுமையான வெயிலில் சுமந்து செல்வது. அதுவும் ஒவ்வொரு தீபாராதனைக்கும் தனித் தனியே நிறுத்தி நிறுத்திப் புறப்படுவதும் கடினமான தாகும். உடல் சிரமத்தைக் குறைக்க 'ஐயப்பா சரணம்' என்று சுமந்து வரும் அன்பர்கள் முழக்கமிட்டது, 'ஐயாறப்பா சரணம்' என்றே நம் காதுகளில் ஒலிக்கிறது.

பெரிய பல்லக்கு வலமாக நகர்ந்து பாவா அக்கிரகாரத்திற்கு வந்து சேர்வதற்கு முன், கிழக்குமாட வீதியில் சின்னஞ்சிறு பல்லக்குகள் ஓரிரண்டு கண்ணில் பட்டன. அவைகோயிலைச் சேர்ந்தவையல்ல. ஆர்வமுள்ள சிறுவர்கள் தங்களுக்குள் வசூல் செய்து தயாரித்தவை. அந்தச் சூழ்நிலையில் அவர்களுக்கும் ஓர் உற்சாகம் பிறந்து விட்டதன் விளைவு இது. விளையாட்டாகத் தொடங்கும் இத்தகைய நல்ல பழக்கங்கள், பிற்காலத்தில் உறுதியான பக்தியாக மாறுவதற்கு வாய்ப்புகள் உண்டு.

பெரிய பல்லக்கு பாவா அக்கிரகாரத்திலிருந்து விடை பெற்று, கும்பகோணம் சாலையில் திரும்பி ஐந்து கிலோ மீட்டர் தொலைவிலுள்ள திருப்பழனம் வந்து சேர, மதியம் பன்னிரண்டு மணிக்கு மேலாகி விட்டது.

அதற்குள் அங்கு பெருங்கூட்டம் கூடி விட்டது. ஒரு மாதத்திற்கு முன் நான் பார்த்த கிராமமாக இல்லை அது. அப்போது வெறிச்சோடிக் கிடந்த தெருக்கள் இன்று திருவிழாக் கோலத்தில் திளைத்துக் கொண்டிருந்தன.

ஸ்ரீஜயாறப்பர், புது மணத் தம்பதியான நந்திகேச்வரரையும் சுயசாம்பிகையையும் அழைத்துக் கொண்டு சுற்றிலுமுள்ள முனிவர்களின் ஆச்ரமங்களுக்குச் சென்று, அறிமுகம் செய்து வைத்து, அவர்களது ஆசிர்வாதத்தைப் பெற்றுத் தந்ததாக திருவையாற்றுத் தலபுராணத்தில் கூறப்பட்டுள்ளது. இந்த விழாதான் சப்தஸ்தானப் பல்லக்கு என்றும், ஏழுர் விழா என்றும் கூறப்படுகிறது. இந்த விழாவைத் தொடங்கி வைத்தவர், ராஜராஜ சோழனின் துணைவியாரான ஓலோகமாதேவி. ஏழூரில் முதல் ஊர் திருப்பழனம். அது கௌசிக முனிவரின் ஆச்ரமமாக இருந்தது.

ஸ்ரீ பஞ்சநதீச்வரர் ஊர் எல்லையை அடைந்தும் திருப்பழனத்தில் உறையும் ஸ்ரீ ஆபத்சகாயர் பல்லக்கில் சென்று

அவருக்கு மரியாதைகள் செய்து அழைத்து வந்தார். கிராம வலம் வந்து ஆலயத்தில் மரியாதைகள் பெற்றுக் கொண்டு அங்கிருந்து புறப்பட்டபோது இரண்டு மணியாகி விட்டது. அடுத்து, காவேரியைக் கடந்து பல்லக்குகள் அக்கரையிலிருக்கும் திருச்சோற்றுத்துறைக்குச் செல்ல வேண்டும்.

வெய்யில் கொளுத்துகிறது. அக்னி நட்சத்திரம் போல் தகிக்கிறது. தரையில் கால்பட்டால் கொதிக்கிறது. இதையெல்லாம் சிறிதும் பொருட்படுத்தாமல் பக்தர்கள் நடந்து கொண்டேயிருக்கிறார்கள். பல்லக்குகளைப் பின் தொடர்பவர்களை விட, சப்தஸ்தான யாத்திரையை முன்னாலேயே சென்று முடித்துக் கொள்பவர்கள்தான் அதிகம். பல்லக்கு மெள்ள வருகிறது. அதுவரை காத்திராமல், அவர்கள் அந்தந்த ஊர் கோயில்களில் தரிசனத்தை முடித்துக் கொண்டு, ஆகார வசதிகள் இருந்தால் அதையும் முடித்துக்கொண்டு முன்னேறுகிறார்கள். பஜனை கோஷ்டிகளும் அந்த அந்த ஊர் தேவாரத்தைப் பாடிக்கொண்டு வலம் வருகிறார்கள். வெய்யிலின் கடுமையைத் தணிக்கும் வண்ணம் மெய்யன்பர்கள் 'பம்பு'களின் மூலம் தண்ணீர்த் தெளிப்பது பன்னீர்த் தெளிப்பது போலவும், வானிலிருந்து பூதூறல் விழுவது போன்றும் உடலுக்கும் உள்ளத்திற்கும் பரம சுகமாயிருக்கிறது.

காவேரி மணல் தணலாக எரிகிறது. அதற்காகக் கரும்புத் தழைகளைப் போட்டுத் தற்காலிகப் பாதை ஒன்று அமைத்திருந்தார்கள். அதன் மீதுதான் எல்லோரும் நடந்து செல்கிறார்கள். வழக்கமாக, பன்னிரண்டு மணிக்கெல்லாம் பல்லக்கு திருச்சோற்றுத் துறைக்குச் சென்று விடுமாம். இம்முறை 'லேட்'டாம். மக்கள் பேசிக் கொண்டார்கள்.

திருச்சோற்றுத்துறை, கௌதம ரிஷி ஆசிரமம். அத்தலத்தில் உறையும் ஓதவனேச்வரர், ஐயாறாப்பரை எதிர்

கொண்டழைத்துச் சென்று வழக்கமான மரியாதைகள் செய்து, யாத்திரைக்குப் புறப்படும் போது சூரியன் மறையத் தொடங்கிவிட்டான், பெரிய பல்லக்கு எப்போது வரும், எப்போது புறப்படும் என்றோ யாருக்கும் தெரியவில்லை. ஏன், அதைச் சுமப்பவர்களுக்கே தெரியாது. இஷ்டப்பட்ட இடத்தில் நிறுத்துகிறார்கள். எப்போது இஷ்டமோ அப்போதுதான் புறப்படுகிறார்கள். எந்தக் கட்டுப்பாட்டுக்கும் அவர்கள் அடங்குவதாகத் தெரிவதில்லை. ஆறு ஊர்களுக்கும் சென்று, அங்குள்ள பல்லக்குகளையும் அழைத்துக் கொண்டு திரும்பி வருவது என்பது லேசான சாதனையல்ல. ஏழு ஊர்களுக்குப் பொதுவான இத்திருவிழாவிற்கு ஒருங்கிணைந்த மத்தியக் கண்ட்ரோல் எதுவும் கிடையாது. எல்லோரும் பொறுமையாகக் காத்துக் கொண்டிருக்கிறார்கள். நேரம் ஆவதைப்பற்றி ஒருவரும் கவலைப்படுவதில்லை. பல்லக்கு எப்போது வருகிறதோ அப்போது தரிசிக்கலாம் என்று எல்லா கிராமங்களிலும் மக்கள் காத்திருக்கிறார்கள்.

திருச்சோற்றுத்துறைக்கு அடுத்தது திருவேக்திகுடி, அது வியாசாச்ரமம். வேதநாயகப் பெருமான எழுந்தருளியிருக்கும் திருத்தலம். பெரியபல்லக்கு அங்கு சென்று, அடுத்துள்ள கண்டியூருக்கு வந்து சேர இரவு பத்து மணியாகிவிட்டது. திருப்பழனம், திருச்சோற்றுத்துறை, திருவேதிக்குடி நந்தியம் பெருமானின் வெட்டிவேர் பல்லக்குகள் எல்லாம் வந்துவிட்டன. எல்லையில் வந்து காத்துக் கொண்டிருந்த கண்டியூர் வீரட்டேச்வரர் எல்லாருக்கும் மரியாதை செய்து அனுப்பிவிட்டு, இறுதியாக ஐயாறப்பரை அழைத்துக் கொண்டு ஊர்வலம் வந்தார். பெரிய பல்லக்குக்கு கண்டியூர் பல்லக்கு சோடை போவில்லை. 'கண்டியூர் பல்லக்கு அம்சமா நல்லாயிருககு' என்று உள்ளூர்ப் பெண் மணி ஒருவர் பெருமிதத்துடன் கூறியது நூற்றுக்கு நூறு

உண்மை 'பெரியப் பல்லக்கைவிட இது கனம்அதிகமுங்க' என்று கூறினார்கள் அதைச் சுமந்து வந்த திங்களூர் அன்பர் கள். அந்தக் கோஷ்டி பொறுப்புடனும் ஒழுங்காகவும் கடமையாற்றியதைக் குறிப்பிட்டேயாக வேண்டும்.

சாதாரணமாக, கண்டியூரில் பல்லக்குகள் இரண்டு மணி நேரம் தங்கிவிட்டுத்தான் புறப்படுமாம், அங்கு சுவாமிக்கு அபிஷேகமாகி புதிய அலங்காரம் செய்யப்படும். தற்போது நந்திகேச்வரருக்கு மட்டுந்தான் அபிஷேகம் நடைபெறு கிறது. ஐயாறப்பருக்கு மலர் மாலைகள் மட்டும் மாற்றுகி றார்கள். இங்கிருந்து புறப்படும் போது சம்பந்திகளுக்கு கொடுத்து அனுப்புவது போல், புளியஞ்சாதமும் தயிர் சாத மும் கட்டு சாதக் கூடையாக அனுப்பி வைக்கப் படுகிறது. அன்று ஐந்து பல்லக்குகளும் கட்டுச்சோறுடன் புறப்படும் போது விடியற்காலை இரண்டு மணிக்குமேல் ஆகிவிட்டது. முன்பெல்லாம் இந்த நேரத்திற்கு எல்லாப் பல்லக்குகளும் தில்லைஸ்தானம் என்ற திருநெய்த்தானத்திற்குச் சென்று காவேரியில் முகாம் போட்டு விடுமாம். வாண வேடிக்கை ளும் அவுட்டு வேடிகளும் அமர்க்களப் படுமாம். 'வர வர பல்லக்குகளும் நேரத்திற்கு வந்து சேருவதில்லை, வாண வேடிக்கைகளும் குறைந்து விட்டன' என்று பெரும் பாலோர் மனவருத்தத்துடன் பேசிக்கொண்டனர்

அடுத்த ஊர் திருப்பூந்துருத்தி. அங்கு வீதியை அடைத்துப் பெரிய பந்தல் போட்டிருந்தார்கள். அது உண்மையிலேயே ஓர் அலங்காரப் பந்தல். கையில் கிடைத்த பொருட்களையெல்லாம் தொங்க விட்டிருக்கிறார்கள். அதில் பாம்பு, தேள், தவளை கூட இருக்கின்றன! காய்கறி வகைகள், விசிறி, துடைப்பம், புட்டி, டப்பா, குவளை, செருப்பு என்று வீட்டிலுள்ள சாமான்களெல்லாம் இருக் கின்றன. பெரியவர்கள், குழந்தைகளை அழைத்து வந்து ஒவ்வொன்றாக காட்டிக் காட்டி பொழுதைக் கழிக்கி

றார்கள். அங்கு எப்போதும் பெருங்கூட்டம் ஒன்று இருந்து கொண்டிருக்கிறது.

திருப்பூந்துருத்திப் பல்லக்கு காடேராவ் அவர்கள் வீட்டிற்கு முன் வைக்கப்பட்டிருக்கிறது. அவர் தஞ்சையை ஆண்ட மராத்தி ராஜவம்சத்தைச் சேர்ந்தவர். அவருடைய உறவினர் ஒருவர் தலைப்பாகையைக் கட்டிக் கொண்டு, பாண்ட் கோட்டுடன் பழைய கால பெரிய நாற்காலி ஒன்றில் உட்கார்ந்து கொண்டிருக்கிறார். அருகில் காடேராவ் அவர்களின் பேரப் பையன் மற்றொரு நாற் காலியில் அமர்ந்திருக்கிறான். விடிய விடிய 'தர்பார்' நடப்பதாக ஓர் ஐதீகம்!

விடியற்காலை இரண்டு மணிக்கு அங்கு போலீஸ் நடமாட்டம் காணப்பட்டது. மர்மமான ஒரு பதட்டம் தென்பட்டது. இரண்டு பல்லக்குகள் தர்பாரில் நின்று மண்டகப்படி பெற்றுக் கொள்ளாமல் நேரே சென்று விட்டனவாம். பெரிய அவமரியாதை நடந்து விட்டதாம். ஏழூர்களின் ஒத்துழைப்பும் நல்லெண்ணமும் தேவைப்படும் இதைப் போன்ற ஒரு விழாவில் சில 'கசமுசா'க்கள் இருக்கத்தான் செய்யும்.

காவேரியில் விடிய விடியக் காத்துக் கொண்டிருந்த வர்கள் ஏமாற்றமுற்று மெள்ள மெள்ள கலைந்து சென்று விட்டனர். காலை ஏழரை மணிக்கு திருநெய்த்தானப் பல்லக்கு ஸ்ரீகிருதபுரீச்வரரை ஏற்றிக் கொண்டு மணலுக்கு வந்து சேர்ந்தது. திருப்பூந்துருத்தியிலிருந்த இதர பல்லக்குகள் காலை ஒன்பது மணிவரை ஒவ்வொன்றாக வந்து, அனைவரின் பொறுமையையும் சோதித்தன. பழைய ஒழுங்கும் கட்டுப்பாடும் மெள்ள மெள்ள மறைந்து வருவ தாக வயதானவர்கள் வருத்தப்பட்டுக் கொண்டார்கள்.

பத்து மணி சுமாருக்கு எல்லாப் பல்லக்குகளும் மணலி லிருந்து புறப்பட்டு, ஐயாறப்பர் ஆலயத்தை வலம் வந்து

தேரடியில் நின்றன. மதியம் ஒரு மணிக்கு தேவர்கள் பூமாரி பொழிந்தனர். அதாவது, பொம்மையொன்று பூ மாலையைக் கொடுக்க, ஐயாறப்பர் சார்பில் அர்ச்சகர் அதை ஏற்றுக் கொள்கிறார். இதற்குப் பூ போடுதல் என்று பெயர். அதைக் கண்டு மகிழவும் புண்ணியம் பெறவும் பக்தர் கூட்டம் அலை மோதுகிறது. இவ்விழா முடிந்ததும், ஏழு பல்லக்குகளும் ஆலயத்திற்குச் சென்று மண்டபத்தில் தங்கிவிட்டு, ஒவ்வொன்றாகத் தங்கள் ஊருக்குத் திரும்பி விடுகின்றன.

திருவையாறு ஜீவன் முக்தித் தலம். ஞானவளம் கொழிக்கும் பூமி. இங்கு மரித்தால் மறுபிறவியில்லை. சத்தியம்.

இது பூலோக கைலாசம். அப்பர் பெருமானுக்குச் சிவபெருமான் இங்கு திருக்கயிலைக் காட்சி காட்டித் தந்தருளிய நிகழ்ச்சி பின்னர் நிகழ்ந்தது. அதற்கு முன், நந்திகேச்வரர் பிரணதார்த்திஹரனின் உத்தரவுப்படி இங்கு கைலாசத்தையே கொண்டு வருகிறார் என்று தல புராணம் கூறுகிறது.

அஸ்தினாபுரத்தை ஆண்டு வந்த சுரத மகாராஜா புத்திர பாக்கியமில்லாமல் வருந்தினான். கைலாசத்தை ஒரு மண்டலம் பிரதட்சிணம் செய்தால் கைமேல் பலன் கிடைக்கும் என்று மாமுனிவர்கள் கூறினர். ராஜ்யத்தை யாரிடமோ ஒப்படைத்துவிட்டு, தீர்த்த யாத்திரை புறப்பட்டான் அரசன், ‘கைலாசம் செல்வது எப்படி?’ என்று யோசித்தவாறே திருவையாறு தலத்தை அடைந்தான். துர்வாச மகரிஷியிடம் தன் நிலைமையை விளக்கி, ஆசி கோரினான். துர்வாசர் பிரணதார்த்திஹரனைப் பிரார்த்தித்தார். பக்தனுக்காக கைலாச மலையை பூலோகத்திற்கு எடுத்து வரும்படி நந்திகேச்வரருக்கு உத்தர விட்டார் உமாகாந்தன்.

நந்திகேச்வரர் அம்மலையை எடுத்து வந்து இரண்டாகப் பிளந்து, சுவாமிக்குத் தென்புறம் ஒன்றும் வடபுறம் ஒன்றுமாக வைத்தார். அரசன் அவற்றைப் பிரதட்சிணம் செய்து புத்திரப்பேறு அடைந்தான். எனவேதான் சோழ அரசிகள், ஐயாறப்பருக்கு இருபுறமும் தென்கைலாய, வடகைலாயக் கோயில்களைக் கட்டி வைத்தனர். இவ்விரு கோயில்களையும் ஒரு மண்டலம் வலம் வந்து சுவாமிக்கும் அம்பாளுக்கும் அபிஷேக ஆராதனைகள் செய்தால் குழந்தைச் செல்வத்தைப் பெறலாம்.

இது ஜபம் ஸித்திக்கும் திருத்தலம். மந்திர ஜபங்களுக்குக் கைமேல் பலன் கிடைக்கும், கோரதபசி என்பவருக்கு ஜப ஸித்தியேற்பட்டதால் இதற்கு ஜப்பியேச்வரம் என்ற திருநாமம் விளங்கலாயிற்று. ஆலயத்தில் சப்த மாதர்களுக்கும் ஆதி விநாயகருக்கும் இடையில் அமர்ந்து ஜபிக்க வேண்டும். அதனாலேயே அந்த மண்டபத்திற்கு ஜப்பேச மண்டபம் என்ற பெயர் உண்டாயிற்று.

ஸ்ரீ ஹரிகுருசிவயோக தட்சிணாமூர்த்தி சுவாமிக்கு எதிரில் சப்த மாதாக்களைப் பிரதிஷ்டை செய்தது தேவேந்திரன். அசுரர்களுடன் போரிட அவனுக்கு சக்தி அளித்தவர்கள் சப்த மாதர்களே, எதிரிகளை வீழ்த்த நமக்கும் பலம் அளிக்கக் காத்திருக்கிறார்கள். மகாலட்சுமி சந்நிதிக்கு அருகிலுள்ள கிணற்றை உண்டாக்கியவனும் இந்திரனே. இந்தத் தீர்த்ததத்தால் மகாலட்சுமிக்கு அபிஷேகம் செய்து சாப விமோசனம் பெற்றான். கிணற்றுக்கு எதிரிலுள்ள தூண் ஒன்றில் இந்திரனும் இந்திராணியும் இருக்கிறார்கள்.

இங்கு மகாலட்சுமியைப் பிரதிஷ்டை செய்தவர் கௌதம மகரிஷி. ஒரு சமயம், பன்னிரண்டு வருடங்கள் இப்பகுதியில் கடும் பஞ்சம் ஏற்பட்டு உயிரினங்கள் வாடின. கௌதமர் பிரணதார்த்திஹரனிடம் முறையிட்டார்.

பெருமான் மகாலட்சுமியைப் பிரதிஷ்டை செய்து ஆராதிக்கும்படி கட்டளையிட்டார். அதன் பலனாக எங்கும் பஞ்சம் தீர்ந்த, வளம் கொழித்தது. சொந்த நலனுக்கின்றி, பொது நலனுக்காகச் செல்வம் வேண்டி தேவியிடம் பிரார்த்திப்பது தான் முறை. நாடு சுபிட்சமாக இருந்தால் நாமும் சுகமாக வாழலாமே!

திருவையாற்றிலிருந்து தர்மபரிபாலனம் செய்து வருகிறாள் அன்னை தர்ம சம்வர்த்தினி. ஐம்பத்தோரு சக்தி பீடங்களில் தர்ம பீடத்திலிருந்து அருளாட்சி புரிகிறாள். தேவியருளிய தேவி கீதையில், திரிசூலா என்ற திருநாமத்துடன் பஞ்சநதத்திலிருப்பதாக அவள் கூறுகிறாள். தர்ம சம்வர்த்தினி, தர்மாம்பாள், திரிபுரசுந்தரி என்ற வெவ்வேறு நாமங்கள் கொண்டு திகழ்கிறாள் அறம் வளர்க்கும் நாயகி. 'நன்னு கன்னத் தல்லி நாபாக்கியமா நாராயணி தர்மாம்பிகே' என்று தியாகராஜர் பாடியுள்ளவாறு, தர்மாம்பிகை விஷ்ணு அம்சம். வெள்ளிக்கிழமை இரவு மகாலட்சுமி புறப்பட்டு வந்து தர்ம சம்வர்த்தினி சந்நிதியில் நிற்க, தீபாராதனை நடைபெறும், மகாலட்சுமி விஷ்ணுவான தர்மாம்பாளைத் தரிசிக்க வருகிறாளாம்.

ஜப்பேச்வரம் என்ற பெயர் பஞ்சநதம் ஆனது நந்திகேச்வரருக்குச் சிவபெருமான் ஐந்து புனித நீரால் அபிஷேகம் செய்த காரணத்தால்தான். ஆட்கொண்டார் சந்நிதியில் குங்குலியம் போட்டால், தேள்கடி விஷத்திலிருந்து தப்பிக்கலாம் என்ற நம்பிக்கையும் இருக்கிறது.

இத்தலத்தில் காவேரிக்கும் திருமணம் செய்து வைத்திருக்கிறார் ஐயாறப்பர்.

எல்லா நதிகளும் தன்னை மணம் புரிந்து கொண்டிருப்பதுபோல் காவேரியும் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்று விரும்பிய சமுத்திரராஜன் அகஸ்தியரிடம் முறையிடுகிறான். அகஸ்திய மகரிஷி, இதைக் கவேர ராஜ

னிடம் கூறுகிறார். காவேரியை அவர்கள் திருமணத்திற் காக அழைத்து வந்த போது, அவள் பஞ்சநதத்தைக் கண்டதும் பிரிய மனமில்லாமல் அங்கேயே தங்கிவிடுகிறாள். பிரணதார்த்திஹரன், சமுத்திரராஜனை திருமணம் செய்து கொள்ளும்படி காவேரியை வற்புறுத்துகிறார். தான் போகுமிடமெல்லாம் அனைவரும் பாவம் நீங்கி சுகம் பெற வேண்டும் என்றும் சகல ஜீவராசிகளும் நற்கதியடைய வேண்டும் என்றும் பெருமானிடம் வரம் வாங்கிக்கொண்ட பிறகே திருமணத்திற்குச் சம்மதிக்கிறாள் காவேரி. அதுவும் தனது நூறு கலைகளுடன் திருவையாற்றில் தங்கி, ஒரு கலையுடனே திருவெண்காடு சென்று சமுத்திரராஜனை மணம் புரிகிறாள். அவளை அகஸ்தியரும், பிரணதார்த்தி ஹரனும், தர்மசம்வர்த்தனியும் அழைத்துச் சென்று திருமணம் செய்து வைக்கிறார்கள். காவேரிக்குப் பிரியமான பஞ்சநதத்தைத் தானும் காண வேண்டும் என்று சமுத்திர ராஜனும் இங்கு வந்து காவேரியுடன் கலந்து இருக்கிறார்.

சிவபெருமான், சிவலிங்க வடிவில் வீற்றிருக்கும் போது எத்திக்கிலும் அவர் திருமுகம் பார்த்துக் கொண்டு விளங்கு வாகப் பொருள். அதனால் பிரதட்சிணம் செய்வது பொருந்தும். ஆனால், திருவையாற்றுத் தலத்தில் இறைவன் 'புற்றுமண் வடிவில்' தோன்றிய போது, மாடுகள் கூட்டமாக ஓடி அவற்றின் கால்களால் சிரம் அழுந்தி திருமேனி அலையாக நெரிந்து அமைந்து விட்ட தால், ஸ்ரீ பஞ்சநதீச்வரன் ஒருமுக திருமேனியாக விளங்கு கிறான். முன்பே குறிப்பிட்டபடி பின்புறம் ஜடாபாரம் பிரிந்து கிடப்பதால்தான் அப்பக்கம் பிரதட்சிணம் வந்து வழிபடுவது இங்கு பழக்கத்தில் இல்லை.

ஸ்ரீ தியாகப்ரம்மம் ஸ்ரீ தர்மசம்வர்த்தனியைப் போற்றிக் கீர்த்தனைகள் இயற்றியிருப்பதைக் குறித்தும் ஒரு சுவை யான நிகழ்ச்சி கேள்விப் பட்டேன்.

ஸ்ரீ தியாகய்யர் தமது இல்லத்தில் இல்லாத நேரங்களில் ஸ்ரீ தர்மசம்வர்த்தனி, ஒரு பெண்மணி உருவில் அவரது துணைவியாருடன் பேசிக் கொண்டு இருந்து விட்டுச் செல்வது வழக்கமாம், ஒரு நாள் இல்லம் திரும்பிய தியாகப் பிரும்மம், மனைவியின் அருகில் ஒரு 'பேரொளி'யைக் கண்டு, கண் இமைக்கும் நொடியில் அது மறைந்ததையும் பார்த்துப் பரவசமடைந்தார். அச்சமயத்தில்தான் அவர் 'சிவே பாஹிமாம் அம்பிகே' (கல்யாணி) பராசக்தி மநுபராத நாபை' (ஸாவேரி) 'கருண ஜூடவம்மா (தோடி) முதலிய கீர்த்தனைகளை இயற்றினாராம்.

# திங்களூர்

திருநாவுக்கரசு சுவாமிகள் திருவையாற்றில் திருக் கயிலைக் காட்சியைக் கண்டு 'கண்டறியாதன கண்டேன்' என்று இறும்பூது எய்தினார். அத்திருத்தலத்திலிருந்து ஒரு மைல் கிழக்கேயுள்ள திங்களூரில் அப்பூதி அடிகள் திருநாவுக் கரசரைத் தரிசித்துக் கயிலையையே கண்டு விட்டது போல் பேரானந்தம் அடைந்தார்.

பெரிய புராணத்தில் அப்பூதி அடிகளின் வரலாறு, 'அடியார்க்கும் அடியேன்' என்ற தூய்மையான பக்தியுணர் வுக்கு இலக்கணமாகத் திகழ்கிறது. திருநாவுக்கரசரின் சிவ பக்தியையும் சிவத் தொண்டையும் கேள்வியுற்று அவர்பால நீங்காத பக்தி கொண்டிருந்தவர் அப்பூதி அடிகள். திருநாவுக்கரசருக்கு இவ்வையகத்துக் காட்சிகளெல்லாம் சிவசக்தி சொருபமாகத் தெரிந்தது போல் அப்பூதி அடி களுக்குத் தாம் காணும் காட்சியெல்லாம் திருநாவுக்கரசா கவே தோற்றமளித்தது. அப் பெயரைக் கேட்டதுமே அவா பக்தியுள்ளம் பரவசமடைந்தது. மூத்த மகனுக்குத

திருநாவுக்கரசு என்று பெயரிட்டார். திருநாவுக்கரசர் மடம், திருநாவுக்கரசர் வீதி, திருநாவுக்கரசர் குளம், திருநாவுக்கரசர் தோட்டம் என்று பெயர்கள் சூட்டிப் பெருமிதம் கொண்டார். கோடையில் பயணம் செய்யும் மக்களின் தாகம் தணிக்க அவர் அமைத்த தண்ணீர்ப் பந்தலுக்கும், 'திருநாவுக்கரசர் தண்ணீர்ப் பந்தல்' என்றே பெயர் வைத்து அறம் வளர்த்தார்.

அம் மகானைக் காணாமலே, அவர் எப்படியிருப்பார் என்று தெரியாமலே, அவரைத் தரிசிக்கவேண்டும் என்ற ஆவல் கூட இல்லாமலே இத்தனையும் செய்திருந்த அப்பூதி அடிகள் சுயநல சிந்தனையற்ற தூய பக்தியின் திருவுருவாகவே வாழ்ந்து வந்தார்,

தலயாத்திரை செய்து கொண்டு அவ்வழியே வந்த அப்பர் சுவாமிகளின் கண்களில் 'திருநாவுக்கரசர் தண்ணீர்ப் பந்தல்' என்ற பெயர்ப் பலகை படுகிறது. தம் பெயரை வைத்துத் தருமம் செய்யும் தருமவான் யார் என்று அறிய அவர் மனம் துடிக்கிறது. ஊராரிடம் விசாரிக்கிறார். தண்ணீர்ப்பந்தல் மட்டுமின்றி, அவ்வூரில் அனைத்துமே தம் பெயரிலேயே இருந்து வருவதை அறிகிறார். முன்பின் அறிமுகமாகாத அந்தப் பக்தனைச் சந்திக்க விரும்பி அவர் இல்லம் நாடிச் செல்கிறார், உண்மை பக்தனைத் தேடிப் பரந்தாமன் பறந்து வருவதைப் போல.

முதற் கேள்வியாக 'இத்தண்ணீர்ப் பந்தலுக்குத் தங்களது பெயர் வைக்காமல் யாரோ ஒரு திருநாவுக்கரசரின் பெயரை வைக்கக் காரணம் என்ன?' என்று கேட்டார் அப்பர் பெருமான். அப்பூதி அடிகளுக்குச் சினம் மிகுந்தது. சிவனடியார் திருநாவுக்கரசரைப் பற்றி சற்றுத் தாழ்த்திப் பேசியதை அவரால் பொறுக்க முடியவில்லை. 'தெய்வத் தொண்டாலும் தீந்தமிழ்ப் பாக்களாலும் சைவத்துக்குப் பெருமை தேடித் தரும் மகானை நீர் அறியாதது

விந்தையே. அதிலும் சிவ சின்னங்கள் தரித்த ஒருவர் இவ்வாறு கேட்பது விந்தையிலும் விந்தை. நீங்கள் யார்? எந்த ஊர்?' என்று உணர்ச்சிப் பொங்கக் கேட்கிறார் அப்பூதி அடிகள்.

நாவுக்கரசர் சற்றுத் தலை குனிகிறார். அடிகளாரின் ஆழ்ந்த பக்தியை உணராமல் சிறுமைத்தனமாக அப்படியொரு கேள்வியைக் கேட்டது அவரை வாட்டியது. "ஐயா இச்சிறியேன்தான் தாங்கள் புகழ்ந்து பேசும் திருநாவுக்கரசு' என்று கூறியதும் அப்பூதி அடிகள் மேனியெல்லாம் நடுங்க, சிரம்மேற் கரங்கள் குவித்து, கண்ணீர் பொங்கிப் பெருக அவர் திருவடிகளில் தன் முடி படிய, வணங்கி வணங்கி எழுந்தார். நாவுக்கரசரும் அடிகளாரை வணங்கினார். காண்போரை ஆனந்தக் கடலில் மூழ்கடிக்கும் உணர்ச்சிப் பெருக்கானக் காட்சி இது.

கிடைத்தற்கரிய பேறு பெற்ற அப்பூதி அடிகள், அப்பர் பெருமானுக்கு அமுது படைக்கும் பொருட்டு, துணைவியாரைச் சமையல் செய்யச் சொன்னார். முதல் மகன் திருநாவுக்கரசை வாழையிலை அரிந்து வருமாறு வாழைத் தோட்டத்துக்கு அனுப்பி வைத்தார். விதி அங்கு பாம்பின் வடிவில் வந்து அவனைத் தீண்டியது. விஷம் பரவியது. ஆனால், மரிப்பதற்கு முன் வாழை இலையை அன்னையிடம் சேர்த்து விட்டான் அத்திருமகன்.

அப்பூதியடிகளுக்கு இதைவிடப் பெரிய சோதனை இருக்க முடியுமா? துயரச் செய்தி அறிந்தால் வந்திருக்கும் விருந்தினர் உணவு உட்கொள்ளுவாரா? இல்லம் தேடி வந்த பெரியவருக்கு அமுது படைக்காமல் வாழ்க்கையில் கிடைத்த அரிய வாய்ப்பைக் கை நழுவ விடுவதா? பலவாறு யோசித்தவர் வேறு வழியின்றி மகனின் மரணத்தை மகானிடமிருந்து மறைத்து விடுவது என்ற முடிவுக்கு வந்தார்.

மறைஞானிகளிடமிருந்து ஒன்றை மறைப்பது முடிகிற காரியமா? அமுதுண்ண அமர்ந்தவர் அனைவருக்கும் திருநீறு வழங்கியபோது, 'உன் மூத்த மகன் எங்கே? அவனையும் வரச் சொல், திருநீறு தர வேண்டும்' என்று உத்தரவிட்டார். அப்பூதியடிகளும் துணைவியாரும் விழித்தனர்; மென்று விழுங்கினர். 'இப்போது இங்கு அவன் உதவான்' என்று உரைத்தார் அடிகள்.

அப்பர் சுவாமிகள் விடுவதாக இல்லை 'உண்மையைச் சொல்லுங்கள். மகனுக்கு என்ன நேர்ந்தது?' என்று வினவினார். துயரச் செய்தியைச் சொல்ல வேண்டிய கட்டாயம் ஏற்பட்டு விட்டதால் அப்பூதியடிகள் நடந்ததைக் கூறினார்.

திருநாவுக்கரசர் 'ஒன்று கொலாம்' என்ற திருப்பதிகம் பாடி சிவபெருமானின் கருணையை வேண்டினார். உடலிலிருந்து விடம் நீங்கி அடிகளாரின் மகன் உயிர் பெற்று எழுந்திருக்க வேண்டும் என்று பாடிய அப்பதிகத்தில் ஒன்று, இரண்டு, மூன்று என்று வரிசையாகப் பத்து வரை அமைத்து இறைவனது சீர்சிறப்புக்கள் அனைத்தையும்கூறியிருக்கிறார் திருநாவுக்கரசர். அப் பதிகத்தைப் பாராயணம் செய்தால் பாம்பின் நஞ்சு நம்மைத் தீண்டாது.

திருநாவுக்கரசர் விடந்தீர்த்த திருப்பதிகம் பாடிமுடிந்ததும், ஐயனின் கருணையினால் உறக்கத்திலிருந்து எழுந்திருப்பது போல் இறந்த மகன் எழுந்து அமர்ந்தான். திருநாவுக்கரசர் அவனுக்குத் திருநீறு அளித்தார். சிவத்தொண்டரின் அற்புத லீலையையும், அப்பூதியடிகளின் அறம் வழுவாப் பெருவாழ்வின் பயனையும் நேரில் கண்ட அவ்வூர் மக்கள் கரம் கூப்பித் தொழுதனர். அப்பூதியடிகள், தமது மனைவி மக்களோடு நாவுக்கரசருக்கு அமுது படைத்து ம்கிழ்ந்தார். அருகிலிருந்தோர் உவகையால் பூரித்தனர்.

அன்பும் அறமும் தவழ்ந்து விளையாடிய தங்க பூமியாம் திங்களூரில் இன்று அப்பூதியடிகளின் இல்லம் இருந்த அடையாளம் எதையும் காண இயலவில்லை. ஆலயத்தையொட்டியுள்ள மேட்டுப் பகுதியை அப்பூதியடிகளின் இல்லம் இருந்த நிலமாகக் காட்டினார்கள். பின்னர், கிராமத்தின் தெற்கு எல்லையில், பஸ் பாதையை ஒட்டினாற்போல் திருநாவுக்கரசர் தண்ணீர்ப்பந்தல் இருந்ததன் அடையாளச் சின்னமாக ஒன்றைக் காட்டினார்கள். அப்பூதியடிகள் வாழ்ந்த நாளில் கொழித்த அறம், தற்போது எந்த அளவுக்குத் தாழ்ந்து போயிருக்கிறது என்பதற்கு அடையாளமாகப் பாழடைந்து போயிருந்தது அந்தக் கட்டடம். மேல் மாடத்தில் உழவாரப் படையுடன் நின்றிருந்த அப்பர் பெருமானின் பதுமையும் சிதிலமடைந்திருந்தது. அக்காலத்தில் மேன்மக்கள் போற்றிவளர்த்த அறத்தை நம்மால் காப்பாற்ற முடியா விட்டாலும், அந்த அறத்தின் அடையாளச் சின்னத்தைக் கூடவா காப்பாற்ற முடியாது?

அப்பூதியடிகளின் விருந்தோம்பும் பண்பை இன்றும் நினைவு படுத்திக் கொண்டு, அவரது மரபைக் காப்பாற்றிக் கொண்டிருக்கும் ஒருவரைச் சந்தித்தேன். அவர் பெயர் சீதாராம ஐயர். அவர் அடுத்துள்ள திருப்பழனத்தில் வசிக்கிறார். சப்தஸ்தான யாத்திரையின் பலனாக, அவரது இல்லத்தில் இளைப்பாறிக் கொண்டிருந்த, தமிழறிவும் தெய்வப் பற்றும் மிக்க சில அன்பர்களின் அறிமுகமும் எனக்குக் கிடைத்தது.

திங்களூரில் உள்ள கைலாசநாதர் கோயில் ஒரு காலத்தில் பெரியதாக இருந்திருக்கிறது. தற்போது அதைச் சிறியதாக்கி, பழுதுபார்த்து ஓரளவு பாதுகாப்புடன் பராமரித்து வருகிறார்கள். தெற்கிலும் கிழக்கிலும் நுழைவாயில்கள் இருக்கின்றன. சுவாமி கிழக்கு நோக்கியும் பெரியநாயகி அம்பாள் தெற்கு நோக்கியும் எழுந்திருளியுள்ளனர். அம்பிகையின் திருவுருவம் பெரிய அளவில் சகல

சௌந்தர்யங்களுடன் திகழ்கிறது. தட்சிணாமூர்த்தி பிம்பமும் லட்சணமாக விளங்குகிறது. அப்பர் பெருமானுக்கு ஒரு வடிவமும், அப்பூதி அடிகளாரின் வம்சத்தைச் சேர்ந்த ஒருவரின் சிலையும் அக்கோயிலில் காணப்படுகின்றன.

கைலாசநாதரை வருடத்தில் இருமுறை சந்திரன் பூஜை செய்கிறான். திங்கள் பூஜித்ததால் இது திங்களூர் ஆயிற்று. சந்திரனுடைய கிரணங்கள், பங்குனி, புரட்டாசி மாதங்களின் பௌர்ணமியிலும் அதற்கு முன் பின் ஆகிய இரு தினங்களிலும் சுவாமியின் மீது விழுகின்றன. உத்திர நட்சத்திரமும் பௌர்ணமியும் ஒன்றாகச் சேர்ந்துஅமையும் தினம் இதற்குச் சிறப்பான தினம் என்று நம்பப்படுகிறது.

# திருப்பழனம்

சப்தஸ்தானத் தலங்களில் இரண்டாவது திருப்பழனம். திருவையாற்றிலிருந்து திருப்பழனம் செல்வதுதான் மரபு என்றாலும், நாம் திங்களூரை வழிபட்டு அங்கு செல்வதே முறையாகத் தோன்றுகிறது. பெரிய புராணம் நமக்குக் காட்டும் வழி அதுவே. இரண்டு நாயன்மார்கள் குருவும் சீடராகவும் சில காலம் அங்கு தங்கியுமிருந்ததால் அத்தலம் புண்ணியம் பெறுகிறது. திருவையாற்றையும் திருப்பழனத்தையும் வழிபட்டு விட்டு, இடையில் உள்ள திங்களூரை அலட்சியப்படுத்துவது ஏற்புடையதாக இல்லை. பாடல் பெற்ற தலங்கள், பாடல் பெறாத தலங்கள் என்ற பாகுபாடும் தேவையில்லை என்றே தோன்றுகிறது.

ஒரு தலத்திற்குத் தேவாரப் பாடல் இருந்து, அது கிடைக்காமல் போயிருக்கக் கூடும் அல்லவா? பின்னர்

கிடைக்கலாம் அல்லவா? கொரடாச்சேரிக்கு அருகிலுள்ள திருவிடைவாயில் கோயிலுக்குரிய சம்பந்தர் தேவாரம் எழுபது எண்பது. ஆண்டுகளுக்கு முன்பு கண்டெடுக்கப் பட்டதுதானே! 'பாடல் பெறாத தலம்' என்று கூற என்ன ஆதாரம் உள்ளது?

திருப்பழனம், திருவையாறிலிருந்து கிழக்கே கும்பகோணம் செல்லும் பதையில் இரண்டாவது மைலில் உள்ளது. இத்தலத்தை 'திருப்பயணம்' என்றும் அழைக்கிறார்கள்.

'ஸ்ரீ பிரயாணேச்வர மகாத்மியம்' என்று வட மொழியில் சுலோகங்களாக இருந்ததை, திருப்புகழ் பதிப்பாசிரியர் ஸ்ரீ வ. த. சுப்பிரமணியப் பிள்ளையவர்கள் ஸ்ரீ பிரயாணபுரித் தலமான்மிய வசனம்' என்று தமிழில் மொழிபெயர்த்தார்கள். அக் கைப்பிரதியைப் பெற்று. அவரது இளவல் ஸ்ரீ வ.சு. செங்கல்வராய பிள்ளையிடமிருந்து நுங்கம் பாக்கம் (டன்லப்) என் கிருஷ்ணன் 1963-ம் ஆண்டு சிறு நூலாக அச்சிட்டுத் தமது இளவலின் திருமணத்தின்போது வெளியிட்டார். அந்நூலில், தேவாரப் பாடல்களையும் திருப்புழையும், அருட்கவி சாதுராம் அவர்கள் அந்தலத்தில் பாடிய 58 'அருட் புகழ்' பாக்களையும் சேர்த்திருக்கிறார். தங்கள் நிர்வாகத்தின் கீழ் உள்ள ஆலயங்களுக்கு நம் ஆதினங்கள் தலப்புராணப் பிரசுரங்கள் வெளியிட்டிருக்கின்றன. பிற தலங்களுக்கும் நமது இந்து அறநிலையத் துறையினர் இம்மாதிரி தலப்புராணம் வெளியிட்டு, குறைந்த விலையில் விற்றால் ஆலய வளர்ச்சிக்கும் பக்தி இயக்கத்திற்கும் எத்தனையோ உதவியாயிருக்கும். தங்கள் கடமையை அவர்கள் செய்வதற்காகக் காத்திராமல் தனிப்பட்டவர்கள் அரும்பெரும் அறத்தொண்டாக, தங்கள் வட்டத்தைச் சேர்ந்த ஆலவங்களுக்கு இத்தகைய கைங்கர்யம் செய்வது கிடைத்தற்கரிய புண்ணியமாகும்.

'பழனம் பழனமே என்பீ ராகில்
பயின்றெழுந்த பழவினை நோய் பாற்ற லாமே'

என்று திருநாவுக்கரசர் சிறப்பித்துப் பாடிய தலம் இது. அவர் இத் தலத்திற்கு ஐந்து பதிகங்கள் பாடியுள்ளர். 'சொன்மாலை' பதிகத்தை 'கலிமெலிய' அழலோம்பும் அப்பூதி குஞ்சிப்பூ வாய்நின்ற சேவடியாய் கோடியையே..!' என முடிக்கிறார்.

திங்களூரில் சிறிது காலம் தங்கிவிட்டு திருமறையோர் பின்தொடர, அப்பர் சுவாமிகள் திருப்பழனம் சென்றடைந் ததாகச் சேக்கிழார்ப் பெருமான் பெரிய புராணத்தில் கூறு கிறார். 'தம் பெருமான் கழல் சார்ந்து பொங்கிய அன்புற வணங்கி முன்னின்று போற்றிசைப்பர்'' என்கிறார். மேலும்,

புடைமாலை மதிக்கண்ணிப் புரி சடையார்
பொற்கழற் கீழ்
அடைமாலைச் சீலமுடை அப்பூபதி அடிகள் தமை
நடைமாணச் சிறப்பித்து நன்மைபுரி தீந்தமிழின்
தொடைமாலைத் திருப்பதிகச் 'சொன்மாலை'
பாடினார்.'

என்று கூறிவிட்டு 'செம்பழனத் திறை கோயில் திருத் தொண்டு செய்திருந்தார்!' என்று முடிக்கிறார்.

அப்பர் பெருமான் திருத்தொண்டு செய்த திருப்பழனக் கோயில் தற்போது உள்ள நிலையைக் காணும்போது நெஞ்சம் வெடித்துக் கண்களில் குருதி பெருகுகிறது. சமயக்குரவர்கள் தரிசித்துப் போற்றிய ஆண்டவன் ஆலயங் கள் தற்போது யாருக்கோ சொந்தமாகி, யார் யாரோ உரிமைகள் கொண்டாடி 'யாரோ திருப்பணி செய்து விட்டுப் போகட்டுமே' என்று இருக்கும் இந்த அவல நிலையை அங்கு உறையும் ஆபத்சகாயர் சீர்செய்தால்தான் உண்டா? நம்மைப் படைத்தவனின் இல்லங்கள் பாழாகிக்

கிடந்தால், நம் இல்லங்களில் அந்தகாரம் அகன்று விடுமா? வான்மட்டும் பொழிந்து விடுமா? வயல்களில்தான் நெல் லும் கரும்பும் விளைந்து விடுமா? வாழ்க்கையில்தான் நிம்மதி நிலைத்து விடுமா?

திருஞானசம்பந்த சுவாமிகள் தமது பதிகத்தில் அந்தக் காலக் திருப்பழனத்தை வருணிக்கும் அழகுதான் என்னே...!

'மாம்பழங்களையும் பலாப்பழங்களையும் காவிரிநதி ஏந்தி வரும்; சோலையில் உள்ள கமுகம் பழமானது நீர் நிலைகளிலும் தெங்கின் மீதும் வாழையின் மீதும் விழும். வண்டு பண்பாடும். மதுவுண்டு தாமரை மலர் மீது அமர்ந்து பண் பொருந்த யாழ் வாசிக்கும்; மணங் கமழும் தாமரைக் கழனிகள் சூழ்ந்து விளங்கும் மயிலும் குயிலும் பயிலும்; சங்கொலியும் திருவிழா ஒலியும் மதுவுண்டு எப்பொழுதும் முழங்கும் நகர். இங்கு அடியார் மலர் கொண்டு பரவி ஆடல் பாடல் செய்வர்; பொய்யா மொழி யார் ஏந்திப் புகழ்வார்; நாதா, நக்கா, நம்பா எனக்கூறி பாதந் தொழுவாருடைய பாவத்தைப் போக்குவார் பழன நகர் நாதர்.'

இறைவர் திருப்பழனத்தைத் தம்முடைய பழம்பதி என்று போற்றுவதாக நாவுக்கரசர் கூற, 'இது சிவ பெருமான் காதலிக்கும் தலம்' என்கிறார் சுந்தர மூர்த்தி சுவாமிகள். 'பாங்கார் பழனத்தழகா போற்றி' என்று வணங்கிறார், மாணிக்கவாசக சுவாமிகள்.

குபேரன் திருப்பழனப் பெருமானைப் பூஜித்துப் பல வரங்களைப் பெற்றுத் தன்னுலகிற்குப் பிரயாணமானதால் இத்தலம் 'பிரயாணபுரி' ஆனதாகத் தலப் பூராணம் கூறுகி றது. அதனால் பெருமானும் 'பிரயாண புரீச்வரர்' என்று அழைக்கப்பட்டார். திருமால் இங்கு வந்தாலும் அவரைத் தேடிக் கொண்டு இலக்குமி தேவியும் வருகை

தந்ததாலும், இது 'பிராயணபுரி' ஆயிற்றாம், இங்கு இலக்குமி பூஜித்த செய்தி தல புராணத்தில் காணப்படு கிறது.

காலன் துரத்த திருப்பழனத்தை அடைந்த சிறுவனை. 'நீ திருவையாறு போனால் பிழைத்துக் கொள்வாய்' என்று ஆறுதல் கூறியனுப்பியதால் ஸ்ரீ பிரயாகேசுவரர், ஆபத்சகாயர் என்ற திருநாமம் பெறுகிறார்.

அம்பிகையின் திருநாமம் பெரிய நாயகி. பெயருக்கேற்ற பெரிய திருமேனி. வடபுறத்தில், சுவாமியைப் போன்றே கிழக்கு நோக்கித் திருக்கோயில் கொண்டிருக்கிறாள். அம்பாளுக்குக் கல்யாணி என்ற பெயரும் உண்டு.

கருவறையின் பின்னால் மேற்குப் பிராகாரத்தில் குழலேந்திய வேணுகோபாலரின் அழகிய வடிவம் ஒன்றிருக் கிறது. அதைக் காணும்போது 'புள்ளுயர்த்தான்... நாகப் பள்ளியான் தொழுதேத்த இருக்கின்ற பழனத்தான்' என்ற அப்பர் தேவாரம் நம் நினைவுக்கு வருகிறது.

இத்தலத்தின் தல விருட்சம் வில்வமரம். 'திருவின் மாமாமார் பழனப்பதி' என்பது அருணகிரியார் திருப்புகழ். தலபுராணத்தில் குறிப்பிடப்பட்டுள்ள ஐந்து தீர்த்தங்களில், கோயிலுக்குள் வடக்கே உள்ளது அமிர்த தீர்த்தம். இதில் நீராடுவதனால் கிட்டும் புண்ணியங்களைப் பற்றித் தல புராணம் பெருமையாகப் பேசுகிறது. அந்தக் குளம் தூர்ந்து போய் இன்று ஓர் அழிவுச் சின்னமாகக் காட்சியளித்துக் கொண்டிருக்கிறது!

இத்தலத்திற்குப் 'பயணம்' 'கதலீவனம்' என்ற பெயர் களும் உண்டு. இங்கு வாழை மரங்கள் மிகுந்து காணப்படு கின்றன. இங்கு கௌசிக மகரிஷியின் ஆச்ரமம் இருந்ததால் இது 'கௌகாசிரமம்' என்ற திருநாமத்துடனும் விளங்கு

சிறது. தலபுராணப்படி இங்கு ஸ்ரீபிரயாணேச்வரர், கௌசிக மகரிஷியால் பிரதிஷ்டை செய்யப்பட்ட அமிர்தலிங்கேச்வரர் என (கரதலேசர்) இரண்டு லிங்கங்கள் இருக்க வேண்டும். தற்போது 'ஆபத்சகாயேச்வரர்' என்ற ஒரு சிவலிங்கம் மட்டுமே இருக்கிறது.

இக்கோயிலுள்ள ஆறுமுகர், அழகின் வடிவினர். கார்த்திகைப் பௌர்ணமியில் நீலோற்பல மலர்களால் இவரைப் பூஜித்தால் பலவிதப் பாடல்கவைப் பாடும் திறமை உண்டாகும். ஆறு மாதம் வழிபட்டால், பேசாத வரும் பேசுவர்; வாக்குச் சித்தி பெறுவர்.

அசுரர்களுக்குப் பயந்து தேவர்கள் இந்தக் கதலீ வனத்தில் வந்து ஒளிந்து கொள்ள, சிவபெருமான் அருளால் அவர்களை வெற்றி பெற்றதால், இதற்கு 'விஜயாபுரி' மகாவீரபுரி என்ற பெயர்களும் ஏற்பட்டன. இக்கதையைச் சொல்லி ஆகாசவாணி, சிவபெருமானைப் பூஜிக்கும்படி குபேரனிடம் கூறுகிறாள்.

சௌசிகர் ஆச்ரமம் இருந்ததால் கௌசிகபுரி என்று புகழ்பெற்ற இத்தலத்தில் வசிஷ்டாச்ரமமும் மார்க்கண்டேயாச்ரமும்கூட இருந்திருக்கின்றன.

கௌசிக மகரிஷி, தாம் சிவபெருமான் அருளால் அமிர்தம் பெற்றதையும். அமிர்தமயமான லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்ததையும் குபேரனுக்கு உரைக்கிறார்.

பாற்கடலில் கிடைத்த அமிருதத்தில் ஒரு பங்கை மகரிஷிகள் பெற்றனர். அதைக் கௌசிகர் திருப்பழனத்திற்குக் கொண்டு வந்தார். அசுரர்கள் துரத்திக் கொண்டு வந்தார்கள். ஸ்ரீபிரயாண புரீச்வரரின் அருளாலும் பெரிய நாயகியின் துணையாலும் அவர் அசுரர்களை வென்று அமிர்தத்தைக் காப்பாற்றினார். எப்படி?சுவாமி ஐயனாரை ஏவிவார். அவர்தான் திருப்பழனத்திலிருந்து இரண்டரை மைல் தொலைவிலுள்ள கர்ஜூரேச்வரம் என்ற ஈச்சங்குடி

ஜயனார். அவரும், தேவி ஏவிய ஜயந்திதனை, சண்ட காதனை இருவரும் சேர்ந்து அசுரப் படைகளைத் தொலைத் தொழித்தனர்.

அமிர்தக் குடமிருந்த பள்ளத்திற்குத்தான் சுதாபுஷ் கரணி — அல்லது அமிர்த தீர்த்தம் என்ற பெயர் ஏற் பட்டது,

அங்க தேசத்தைச் சேர்ந்த அந்தணனான தர்மசர்மா, தவயோகி ஒருவரைக் கல்லால் அடித்து, அந்தச் சாபம் நீங்க இத்தலத்திற்கு வந்து, புண்ணிய நீராடி சிவபூஜை செய்து முக்தி பெற்றிருக்கிறான். தாமிரவருணி நதிக் கரையில் வசித்த சுசாந்தி என்பவரின் மூத்த மகன் வாம தேவர். அவர் மரணமடைந்ததும் தந்தையின் அஸ்தியை எடுத்துக் கொண்டு, திருப்பழனத்தில் சுவாமியின் தென்புற முள்ள மார்க்கண்டேயரின் ஆச்ரமத்திற்கு வர, அஸ்தி செங்குவளை மலர்களாக மாறி, அவனது தந்தை சிவ லோகம் எய்தி முக்திப் பெற்றார்.

இங்கு பரமசிவனைக் குறித்து நூறு வருடங்கள் தேவி தவமியற்றியிருக்கிறாள். முடிவில் சிவபெருமான் தோன்றி, விருஷபாருடராய் மகரிஷிகளுக்குக் காட்சி தந்தருளினார்.

பானுமதி என்ற அரசி ஒழுக்கங்கெட்டுத் திரிந்து, பலரோடு பலவகையில் வாழ்ந்து விட்டு இறுதியில் கும்ப மாத சுக்ல பட்சத்தில் உற்சவத்தைக் காணும் பொருட்டுத் திருப்பழனம் வந்து சுவாமிக்குத் தும்பைப் பூ மாலை செய்து சமர்ப்பித்து, அன்று இரவே மரணமடைந்தாள். சுவாமி, தேவியுடன் தோன்றி அவள் காதுகளில் திருவைந் தெழுத்தை ஓதி நற்கதி தந்தருளினார்.

வைசாலிகம் என்ற தேசத்தில், சகல சாஸ்திரங்களும் கற்ற சிம்ஹவர்மன் என்ற அரசன் இருந்தான். அவன் தீர்த்த யாத்திரையாகத் தன் ஊருக்கு வந்த காலவர்

என்ற முனிவரைச் சரிவர உபசரியாமல். பிசாசாக மாறும் படி சபிக்கப்பட்டான். பின்னர், அவரது ஆலோசனைப்படி, திருப்பழனம் வந்து அமிர்தநீர்த்தத்தில் நீராடி, சாபம் நீங்கப் பெற்றான்.

இத்தலத்தில் விலைமகள் ஒருத்தி, தன் மீதுள்ள மோகத்தால் சகல சம்பத்துக்களையும் இழந்து தெருவில் புரண்டு கொண்டிருந்த வைநதேயருக்கு நல்லுபதேசம் செய்து, சிவபக்தியில் அவனை ஈடுபடச் செய்தாள். அவனை மரணம் தழுவியபோது சிவபெருமான் அவனை ஆட் கொண்டார்.

இத்தலம் ஜப சித்தியைத் தருவது. பூர்ணானந்த சொரூபத்துடன் இங்கு சங்கரர் வசிக்கிறார். இங்கே ஐந்தெழுத்து மந்திரத்தை தட்சிணாமூர்த்தி சந்நிதியில் ஜபித்தால் கோடி முறை ஜபித்த பலன் கிடைக்கும்.

# திருச்சோற்றுத்துறை

திருப்பழனத்திலிருந்து, மூன்றாவது சப்தஸ்தான தலமான திருச்சோற்றுத் துறைக்குச் செல்கிறோம். அங்கு திருக்கண்டியூர் வழியாகச் செல்ல வேண்டும். அய்யம் பேட்டையிலிருந்தும் வரலாம் ஊருக்குத்தெற்கே 'சோற்று டையான் வாய்க்கால்' என்று ஒரு வாய்க்கால் ஓடுகிறது.

திருச்சோற்றுத்துறை அப்பர், சுந்தரர், சம்பந்தர் மூவ ரால் பாடல் பெற்ற திருத்தலம். இங்கு கௌதம ரிஷியின் ஆச்ரமம் இருந்ததாகப் புராணச் செய்தி. தாது வருஷத்தில் இங்கு பெரும் பஞ்சம் ஏற்பட்டதாகவும், மக்கள் மகரிஷி

யிடம் முறையிட, அவர் இறைவனிடம் பிரார்த்திக்க, இறைவன் உமையுடன் வந்து அன்னம் தயாரித்துப்பசியைப் போக்கியதாகவும் ஒரு கதை கூறப்படுகிறது. அதனால் சுவாமிக்கு ஓதனவனேச்வரர்' என்று பெயர். 'ஓதனம்' என்றால் அன்னம்.

திருச்சோற்றுத்துறையில் இருந்து கொண்டு தினமும் கௌதமர் திருவையாறு வந்து பஞ்சநதீச்வரரை வழிபட்டுச் சென்றதாகத் திருவையாறு தல புராணம் கூறுகிறது.

மற்றொரு கதை, திருச்சோற்றுத்துறையில் அருளாளர் என்ற சிவ பக்தர் பஞ்ச காலத்தில் மக்கள் பசியைத் தீர்க்கும் படி பெருமானிடம் வேண்டிக் கொண்டாராம். பக்தனின் வேண்டுகோளுக்கு ஆண்டவன் செவி சாய்க்காமல் இருந்ததுண்டா? அவருக்கு அட்சயப் பாத்திரமே அளித்து, அவர் ஆசை தீர அன்னதானம் செய்யும்படி அருளினாராம். கோயிலில் அருளாளருக்கும் அவரது துணைவியாருக்கும் சிலைகள் வைக்கப்பட்டுள்ளன. 'நாட்டில் பசி, பஞ்சம் பட்டினியின்றி மக்கள் அனைவரையும் காத்தருளப்பா' என்று சோற்றுத்துறை ஈசனிடம் பிரார்த்தித்துக் கொண்டு விட்டு ஒப்பிலா அம்மையாகிய அன்னபூரணி அம்பிகையைத் தரிசிக்கச் சென்றோம். சுவாமிக்குத் தென்புறம் தென்னஞ் சோலைக்கிடையே குளுகுளுவென்று வீற்றிருக்கிறாள் அன்னம் வழங்கும் அன்னை,

தொலையாச் செல்வர், சோற்றுத்துறையீசர் என்றும் இவ்வூர்ப் பெருமானை அழைக்கிறார்கள்.

பெரிய கோயில். கிழக்குப் பார்த்த திருச் சந்நிதி. முன் புறம் கோபுரம் இல்லை. நுழைவாயில் முகப்புக்கட்டடமாக அமைந்திருக்கிறது. உள்ளே மண்டபத்தையொட்டி ஒரு சிறு கோபுரம். வெளியே ஒரு நந்தியும், கருவறைக்கு முன் ஒரு நந்தியும் இருக்கின்றன. உள்ளேயிருக்கும் நந்திக்கருகில் அருளாளர் தம்பதியைத் தரிசிக்கலாம். ஆலயத்தை வலம்

வரும் போது சப்த மாதாக்கள், சப்தஸ்தான லிங்கங்கள், கஜலெட்சுமி, சண்டிகேச்வரர், துர்க்கையம்மன், நவக்கிரகங்கள், நடராஜர், சூரியன், சந்திரன், பைரவர், சுப்பிரமணியர், விநாயகர், தட்சிணாமூர்த்தி, நாராயணர், நால்வர்—அனைவரையும் தரிசிக்கிறோம்.

திருச்சோற்றுத்துறையை 'திருச்சற்றுறை' எனவும் வழங்குகிறார்கள். திருஞானசம்பந்தப் பெருமான், 'சோற்றுத்துறை சென்றடைவோமே' என்று பதிகம் பாடி நம்மையெல்லாம் அன்புடனும், ஆதரவுடனும் அழைக்கிறார். அங்கு ஒருமுறை சென்று வருவது பெரும் புண்ணியமாகும்.

அப்பர் பெருமான் தம் பதிகத்தில் 'திருச்சோற்றுத் துறையனாரே' என்று அழைக்கிறார். சுவாமியை இந்திரனும் சூரியனும் வழிபட்டிருக்கிறார்கள்.

# திருவேதிக்குடி

நான்காவது சப்தஸ்தானத் தலம் திருவேதிக்குடி. திருச்சோற்றுத்துறைக்குத் தெற்கே இரண்டு மைலில் இருக்கிறது. வேதம் வழிபட்ட தலம். அதனால் வேதிக்குடி. ஒரு காலத்தில் இங்கு வேத முழக்கம் விண்ணை முட்டியதாம். அந்த வேத கோஷத்தை, பிரணவ சொரூபரான வேழமுகத்தான் செவி சாய்த்துக் கேட்டு இன்புற்றாராம். அதனால் அவருக்கு வேத விநாயகர், வேதம் கேட்ட விநாயகர் என்ற திருநாமங்கள் உண்டு. தலையை ஒருபுறமாகச் சாய்த்து, காதைச் சற்று உயர்த்தி வேதம் கேட்கும் பாவனையில் கருவறை வாயிலில் கணபதி அமர்ந்திருப்பதைக் கண்டு சற்று நேரம் அசந்து விட்டோம், அத்தனை ஜீவனுள்ள சொரூபம் அது, நான் தரிசித்த எத்தனையோ விநாயக மூர்த்திகளில் கனவிலும் நனவிலும்' நீங்கா இடம் பெற்று

விட்டார் அவர். இந்த அபூர்வ விநாயகருக்காகத் திரு வேதிக்குடி சிறுவர்கள் ஓர் அழகான சிறு கண்ணாடிப் பல்லக்குத் தயாரித்து சப்தஸ்தான் யாத்திரையில் எடுத்து வந்திருந்தார்கள். தில்லைஸ்தான கோயிலில் கண்ட அக் காட்சியை மறக்க இயலாது.

இறைவர் வேதபுரீச்வரர்; இறைவி மங்கையர்க்கரசி. பங்குனி 13, 14, 15 நாட்களில் சூரிய வழிபாடு நடைபெறு கிறது. குபேரன், சைதன்ய முனிவர் இருவரும் வழிபட்ட தலம்.

சுவாமி வாழைமடுவில் உற்பத்தியானவராதலால்' வாழைமடுநாதர் என்ற பெயரோடும் விளங்குகிறார்.

ஏழு ஊரில் ஒன்றான இத்தலத்திற்குச் செல்லும் பாதை சீராக இல்லாதது வருத்தம் தரும் செய்திதான். சப்தஸ்தான உற்சவத்தின் போது ஓரளவு செப்பனிடு வார்கள் போலிருக்கிறது. கோயிலும் நல்ல நிலையில் பராம ரிக்கப்படவில்லை. நாங்கள் சென்றபோது, அறுவடையான நெல்லைக் கோயிலுக்குள் உலர்த்தி வைத்திருந்தார்கள். 'யாரோ தரிசனத்திற்கு வந்து விட்டார்களே' என்று உள்ளூர்க்காரர்கள் பரபரப்புடன் நெல்மணிகளை ஒதுக்கி விட்டு நாங்கள் உள்ளே போய் வர தடம் அமைத்துக் கொடுத்தார்கள்.

ஒரு காலத்தில் பெரிய கோயிலாக இருந்திருக்கிறது. ராஜகோபுரத்தில் கலசங்கள் இல்லை. பிராகாரங்களிலும் மண்டபத்திலும் நிறையசிவலிங்கங்கள் உள்ளன. வெளிமதிற் சுவர்களெல்லாம் இடிந்து, ஆலயத்திற்குட்பட்ட நிலத்தில் குடில்களும் சிறு வீடுகளும் கட்டிக் கொண்டு வாழ்கிறார் கள். அதில் தவறில்லை. கோயிலையாவது ஓரளவு அக்கறை யோடு கண்காணிக்கலாம் அல்லவா? கிராம மக்கள் முயற்சிகள் மேற்கொண்டிருப்பதாகக் கேள்விப்பட்டேன். 'எப்படி பணம் வசூல் செய்யலாம். எந்த அளவு திருப்பணி

செய்து குடமுழுக்கு செய்யலாம்' என்ற ஆலோசனைகள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன என்று உடன் வந்த திரு. சுவர்ணகாளீச்வரன் கூறினார். அவர் அந்தக் கோயிலின் முன்னேற்றத்தில் காட்டி வரும் அக்கறையை உள்ளூர் மக்கள் நன்றியுடன் நினைத்து அவரோடு ஒத்துழைக்கக் காத்திருப்பதையும் அறிந்தேன். சப்தஸ்தான தலங்களுக்கும், அருகிலுள்ள கிராமங்களுக்கும் சென்று பெரிய புராண விரிவுரைகளும் தல புராண சொற்பொழிவு களும் ஆற்றி, ஊர் மக்களிடையே பக்தியுணர்வையும், கோயில்களைக் கண்ணாகக் காக்கவேண்டிய கடமையுணர் வையும் புகட்டி, 'சைவ நன்மணி' சுவர்ணகாளீச்வரன் செய்து வரும் அரிய சேவையை நேரில் அறியும் வாய்ப்பு எனக்குக் கிட்டியது,

திருவேதிக்குடி ஆலயத்தின் தல மகிமையைப் பலருக்கு எடுத்துக் கூறி, அங்கு ஆராதனைகள் முறையாக நடை பெறுவதற்காக அவர் மேற்கொண்டிருக்கும் நன்முயற்சி களால் பக்தர்கள் வருவது அதிகமாகிக் கொண்டிருக்கும் செய்தியையும் உள்ளூர் அன்பர்கள் உற்சாகத்துடன் கூறினார்கள்,

முக்கியமாக அங்கு உறையும் மங்கையர்க்கரசி அம்மனின் மகிமையை அவர் பலருக்கும் தெரியப்படுத்தி வருகிறார். அம்பிகையின் அருளால் அரசகுமாரிக்குத் திருமணம் ஆனதால், மகளுக்கு மங்கையர்க்கரசி என்ற பெயர் சூட்டி மகிழ்ந்தானாம் மாமன்னன். அவன் அக் கோயிலில் பல திருப்பணிகள் செய்திருக்கிறான்.

இக் கோயிலைப் பற்றி யாவரும் அறிய வேண்டிய ஒரு முக்கிய செய்தியைக் கூறினார் சுவர்ணகாளீச்வரன். திருவேதிக் குடியைப் பற்றிய ஞானசம்பந்தர் தேவாரத்தில் ஒரு பாட்டைப் பாராயணம் செய்தால், திருமணம் தடைப் படும் ஆணுக்கோ, பெண்ணுக்கோ நிச்சயம் திருமணம் நடைபெறுவதாகக் கூறினார் அவர்.

அந்தப் பதிகம் 'நீறுவரி ஆடரவொடாமைமன' என்று தொடங்குகிறது. அதில் வரும்,

'உன்னிஇரு போதும்அடி பேணும்அடி
யார்தமிடர் ஒல்க அருளித்
துன்னியொரு நால்வருடன் ஆல்நிழ
லிருந்ததுணை வன்றனி டமாம்
கன்னியரொடாடவர்கள் மாமணம்
விரும்பியரு மங்கலமிக
மின்னியலும் நுண்ணிடை நன்மங்கைய
ரியற்றுபதி வேதிகுடியே.'

என்ற இப்பாடலைப் பாராயணம் செய்து வந்தால் ஒரு மண்டலம் ஆவதற்குள்ளேயே திருமணம் நிச்சயமாகிவிடும் என்று நம்பிக்கையோடு கூறுகிறார் சுவர்ணகாளீச்வரன். தமக்குத் தெரிந்து இதுவரை நாற்பது கல்யாணங்கள் நடந்திருப்பதை உதாரணம் காட்டுகிறார். இங்கு பிரார்த்தனை செய்து கொண்டு, சம்பந்தர் பாட்டைப் பாராயணம் செய்து, திருமணமானவர்கள் தங்கள் சக்திக்கு முடிந்த உதவியை செய்தாலே திருவேதிக்குடி கோயிலுக்கு நல்ல காலம் பிறந்துவிடுமே! திருவேதிக்குடியிலிருந்து திருக்கண்டியூருக்குத் திரும்பும்போது வீரசிங்கம்பேட்டை மாரியம்மனைத் தரிசித்துக் கொண்டோம். புன்னைநல்லூர் மாரியம்மனைப் போன்று மகா சக்தி வாய்ந்த அம்மன்.

# திருக்கண்டியூர்

சப்தஸ்தானம் என்ற ஏழூரில் ஐந்தாவது ஊருக்குச் செல்கிறோம். திருவேதிக்குடியிலிருந்து வடமேற்கே ஒன்றரை மைலில் இருக்கிறது அது. பெயர் திருக்கண்டியூர். தஞ்சாவூரிலிருந்து திருவையாறு செல்லும் பஸ் பாதை

யிலே ஆறாவது மைலில் உள்ளது. திருவையாற்றுக்குத் தெற்கே ஒன்றரை மைல். காவிரியின் தென்கரைத் தலங்களில் பன்னிரண்டாவது ஆகும்.

சிவபெருமானின் பராக்ரமங்களை விளக்கும் அட்ட வீரத் தலங்களில் முதலாவது இது. பிரமன் சிரம் கொய்த தலம் திருக்கண்டியூர். அந்தகாசுரனை அழித்தது திருக்கோவலூர். திரிபுரத்தை எரித்தது திருவதிகை, தக்கன் சிரம் வீழ்த்தியது திருப்பறியலூர். சலந்தராசுரனை அழித்தது திருவிற்குடி. யானைத் தோல் உரித்தது வழுவூர். காமனை எரித்தது திருக்குறுக்கை. காலனை விரட்டியது திருக்கடவூர்.

ஸ்ரீ பிரமசிரக்கண்டீசர் என்று திருநாமம் கொண்ட ஸ்ரீ வீரட்டேச்வரர் ஆலயத்தைத் தற்போது தரிசிக்கிறோம்.

சிவபெருமானுக்கு ஈசானம், சத்புருஷம், அகோரம், வாமதேவம், ஸத்யோஜாதம் என்று ஐந்து திருமுகங்கள் இருப்பது போன்றே, படைப்புக் கடவுளான பிரம்மதேவனுக்கும் ஐந்து தலைகள் இருந்தனவாம். அதனால் சிவபெருமானுக்கு ஈடாகத் தன்னை நினைத்து அவர் கர்வமடைந்ததாகவும், அதைக் கண்டு பார்வதி தேவி வெகுண்டதாகவும், அதனால் சிவபெருமான் பிரமனின் தலையைக் கொய்ததாகவும் புராணக் கதை கூறுகிறது. பிரமனின் தலையைக் கண்டனம் செய்ததால் இது கண்டனபுரமென்றும் கண்டியூர் என்றும் ஆயிற்று. ஈச்வரன். பிரமசிரக் கண்டீசர் ஆனார்.

இக்கோயிலில் இறைவனை நோக்கி பிரம்மாவும் சரஸ்வதி தேவியும் அமர்ந்திருப்பது போல் அபூர்வ விக்ரகங்கள் இருக்கின்றன. தரிசிக்க வேண்டியவை.

சதாதபர் என்ற முனிவர் பரமசிவனின் பரம பக்தர். எங்கிருப்பினும் தினமும் மாலையில் திருக்காளத்திக்குச்

சென்று ஸ்ரீ காளத்திநாதனை வழிபடுவதை வழக்கமாகக் கொண்டிருந்தார். தமது யோக சக்தியால் காலையில் தனுஷ்கோடியிலும், உச்சிக் காலத்தில் கங்கையிலும் நீராடி விட்டு, தமது இருப்பிடமான மலயப் பிரதேசம் திரும்பி, நடுப்பகல் அனுட்டானங்களை முடித்து மீண்டும் மாலை வேளையில் திருக்காளத்திக்குச் சென்று, திருக்குளத்தில் நீராடி இறைவனை வழிபட்டு, அன்றிரவே தம் இருப்பிடம் திரும்பி விடுவது வழக்கமாம். அது மட்டுமல்ல; திருக் காளத்தித் தரிசனம் ஒரு நாள் தவறினாலும், தீ வளர்த்து அதில் விழுந்து மாண்டு விடுவதாகச் சபதமும் செய்திருந் தார் அவர்.

ஒரு நாள் பிரதோஷ நேரத்தில் அவர் திருக்கண்டியூரில் தங்கும்படி நேர்ந்து விட்டது. திருக்காளத்திநாதனைத் தரிசிக்க முடியவில்லையே என்ற ஏக்கத்தில், கனலை வளர்த்து உயிரை மாய்த்துக் கொள்ள ஆயத்தமாகி விட்டார். அப்போது அங்கு ஒரு வில்வமரம் தோன்றியது. அதில், சிவபெருமான் உமாதேவியாருடன் ஸ்ரீ காளத்தியப்ப ராகக் காட்சி தந்து பக்தரின் உயிரைக் காப்பாற்றி அவரை ஆட்கொண்டார். எனவே, இத்தலத்திற்கு 'ஆதி வில்வா ரண்யம்' என்ற பெயர் ஏற்பட்டது. இன்றும் வில்வமரம் தான் தல விருட்சம்.

கருவறைக்குச் செல்லும் முன், வலப்புறமுள்ள துவார பாலருக்கருகில் ஸ்ரீ காளத்திநாதரையும் சதாதபமுனிவ ரையும் சூரிய பகவானையும் தரிசிக்கலாம்.

மேற்குப் பார்த்த திருச்சந்நிதி. ஐந்து தளம் கொண்ட அழகிய ராஜகோபுரம். உள்ளே நுழைந்து ஸ்ரீ மங்களாம்பி கையை வழிபட்டு பலிபீடம், கொடி மரம், நந்தி மண்டபங் களைக் கடந்து நேரே செல்கிறோம். இரண்டாவது கோபுரத்தினுள் நுழைவதற்கு முன், வலப்புறமுள்ள தல

விருட்சமான வில்வ மரத்தையும், அதனடியில் வீற்றிருக்கும் ராஜ கணபதியையும் தரிசித்துக் கொள்கிறோம்.

சித்ரவஜன் என்று ஒரு கந்தர்வன். ஒரு நாள் ஓர் அழகிய பூங்காவில் தனது மனைவி குணவதியுடன் மகிழ்ந்திருந்தான் அவன். அவ்வழியிலே சென்ற தேவலர் என்ற முனிவர், அக்காட்சியைக் காணச் சகியாது, அவர்களைச் சபித்தார். அதனால் சித்ரவஜன் அசுரனானான் குணவதி பலாச மரம் ஆனாள். அவர்கள் சாப விமோசனம் கோரினர்.

அகத்தியரின் சீடரான சதாதபர் முனிவரால் சாபம் நீங்கும் என்றார் தேவலர். அசுரனான சித்ரவஜனும் பலாச மரமான குணவதியும் காவிரியின் தென்கரையில் வசித்து வந்தனர்.

ஒரு சமயம் சனிப் பிரதோஷத்தில் திருக்காளத்தி நாதரை வழிபடச் சதாதபர் கண்டியூர் வழியே செல்லும் போது பேய் மழை பிடித்துக் கொண்டது. அதனால் அவர் ஒரு பலாச மரத்தடியில் தங்கினார். அவ்வுருவில் இருந்த குணவதி மீண்டும் பெண் வடிவம் பெற்றாள். ராட்சசனான சித்ரவஜனின் மீது சதாதபர் கமண்டல நீரைத்தெளித்ததும் அவன் கந்தர்வனாக மாறினான். இருவரும் சாப விமோசனம் பெற்றனர்.

சிவபெருமானை நிந்தித்து சிவாபராதத்திற்குள்ளான தக்கன், இவ்வூர் வீரட்டேச்வரரை வழிபட்டு நற்கதியடைந்தார். துரோணாச்சாரியார் இப்பெருமானைத் தும்பை மலர்களால் அர்ச்சித்துப் புத்திரப் பேறு பெற்றார். பகீரதன் இத்தலப் பெருமானின் அருளால் கங்கையைப் பூமிக்குக் கொணர்ந்தான். முடியாத காரியங்களும் இந்த ஈசனின் அருளால் கை கூடுவது திண்ணம்.

தென் பிராகாரத்தில் காளியம்மன் ஆலயமும், அதனையொட்டி நந்தவனமும் இருக்கின்றன. இரண்டாவது

கோபுரத்திற்குள் நுழைந்ததும் இடப்புறத்தில் ஸ்ரீவள்ளி தெய்வானையுடன் ஸ்ரீ சுப்ரமணியர் காட்சியளிக்கிறார். அருணகிரி நாதரின் திருப்புகழ் பெற்ற பெருமான் அவர். இச்சந்நிதியை யொட்டி ஸ்ரீ மகாலட்சுமியும், திருப்பள்ளி யறை, நடராஜர் சந்நிதி முதலியனவும் உள்ளன.

முதற்பிராகாரத்தின் கீழ்ப்புறத்தில் தெற்கு நோக்கி பைரவரும், இதர பரிவார தேவதைகளும் உள்ளனர். அக்னி மூலையில் மடைப்பள்ளியையும், தெற்குப் பிராகா ரத்தில் பிரம்ம தீர்த்தக் கிணற்றையும் காண்கிறோம்.

கருவறையை நெருங்கும் முன் சப்தஸ்தானத் தல லிங்கங்களையும். பஞ்சபூதலிங்கங்களையும், திருமழபாடிப் பெருமானையும் வழிபடுகிறோம்.

திருஞானசம்பந்தப் பெருமானும் திருநாவுக்கரசு சுவாமிகளும் ஸ்ரீ பிரமசிரக்கண்டீசரைக் குறித்துத் திருப்பதி கங்கள் பாடியுள்ளனர். ஸ்ரீ சுந்தர மூர்த்தி சுவாமிகள் 'காளகண்டனுறையும் கடைமுடி கண்டியூர்' என்று குறிப் பிடுகிறார்.

ஸ்ரீ ஞானசம்பந்தப் பெருமான், அடியார்களிடம் சிவனருளின் தன்மையையும் மேன்மையையும் கேட்டு மகிழ்ந்த வினாவுரையாகத் தம் பதிகத்தை அமைத்திருக் கிறார்.

ஆறாவது பாட்டில் ஈச்வரன் பிரம்மன் சிரசைக் கொய்த கதையை...

'இயலு மாறெனக்கியம்பு மின்னிறை
வன்னுமாய் நிறை செய்கையைக்
கயநெடுங் கண்ணினார்கள் தாம்பொலி
கண்டியூருறை வீரட்டன்
புயல் பொழிந்திழி வானுளோர்களுக்
காகவன் றயன்பொய்ச்சிரம்

அயனகவ்வ தரிந்து மற்றதில்
ஊனுகந்த வருந்தியே'

என்கிறார்.

'தேவர்களுக்காகப் பிரமனின் சிரசைத் கொய்ததாக'க் கூறியதற்கு ஆதாரம் நான் படித்த சிறு தல புராண நூலில் காணப்படவில்லை. அறிந்தவர்கள் எழுதினால் நன்றியுடையவனாயிருப்பேன்.

நாவுக்கரசரோ,
'பண்டங் கருத்ததொர் கையுடை
யான் படைத் தான்றலையை
உண்டங் கறுத்தது மூரொடு
நாடவை தானறியும்...

என்று கதையை மட்டும் கூறிவிட்டு, இவ்விறைவனை வானவர் தொழுவதாகக் கூறுகிறார். திருத்தாண்டகத்தில் 'கண்டியூர் கண்டியூரென் பீராகிற் கடுகநும் வல்வினையைக் கழற்றலாமே' என்று நாவுக்கரசர் உறுதியளிக்கிறார்.

திருக்கண்டியூர் திருத்தலம் பாடல் பெற்ற சிவத்தலம் மட்டுமல்ல; அது ஒரு திவ்ய தேசமும் கூட. வைணவப் பெரியார் திருமங்கையாழ்வார் மங்களா சாசனம் செய்திருக்கிறார். ஸ்ரீபிரமசிரக்கண்டீசர் ஆலயத்திற்குச் சற்று தெற்கே, கிழக்கு நோக்கியுள்ளது ஸ்ரீ ஹரசாப விமோசனப் பெருமாள் ஆலயம். ஸ்ரீ ஹரசாபஹரன் என்ற திருநாமமும் கொண்டவர்.

ஸ்ரீதிருமங்கை மன்னன்,
'பிண்டியார் மண்டையேந்தி
பிறர்மனை திரிந்துண்ணும்

உண்டியான் சாபந்தீர்த்த
ஒருவானூர் உலகமேத்தும் கண்டியூர்'

என்று உகந்தருளியிருக்கிறார்.

ஸ்ரீ கண்டன க்ஷேத்திர மகாத்மியம் என்ற நூலில் இத் திவ்ய தேசத்தின் பெருமைகள் பலவாறாகப் பேசப்படு கின்றன. கிரந்த எழுத்தில் இருந்த மூலநூல் திருவரங்கம் திருமலை தாதாச்சார் சுவாமிகளால் தமிழாக்கப்பட்டு 1932-ம் ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. அப் பழைய புத்தகத்தைக் கல்யாணபுரம் ஸ்ரீ சத்திய மூர்த்தி அவர்கள் எனக்குத் தந்து உதவியதற்கு நன்றியுடையவனாக இருக்கிறேன்.

ஸ்ரீ பிரம்மாவின் புத்திரரான பிருகு முனிவர் சௌன கருக்குக் கூறியதாக அமைந்துள்ளது இத்தல புராணம்.

பிருகு முனிபுங்கவர் கூறுகிறார்:

'சிவனுடைய சாபத்தைத் துடைத்து விளங்கும் ஞானானந்த மயமாயும் பராத்பரமாயும் ஒளிப்பெருக்காக வும் நீருண்ட மேகம் போன்றவனாயும் சமஸ்த கல்யாண குண பரிபூர்ணனாயும் ஸத்வ, ரஜஸ், தமஸ் என்னும் முக் குணங்களைக் கடந்தவனாயும் கருடாருடனாயும் அழியாக் கடவுளாயும் விஷ்வக்ஸேநர் முதலிய நித்ய சூரிகளால் தொழப்படுபவருமான பரம புருஷன், சங்கு சக்ர கதாதாரி யாய், ஸ்ரீதேவி, பூதேவி பிராட்டிகளுடன் கூடக் கலி காலத்திலே மனக் கலக்கமுள்ளவர்களுடைய பாதகங்களை யெல்லாம் போக்கக் கடவேன் என காவேரியின் தென் கரையில் வீற்றிருக்கிறான். அவனை ஒரு தடவை சேவித்த மாத்திரத்திலேயே எவனும் முக்தனாவான். சந்தேக மில்லை. வாரீர் சௌனகரே, இது சத்தியம், சத்தியம்!'

இது மட்டுமா? பிருகு முனிவர் மேலும் கூறுகிறார்:

'கண்டன க்ஷேத்திரத்திற்குப் போய் ஸ்ரீ ஹரசாபஹரப் பெருமாளைச் சேவித்து கபால தீர்த்தத்தில் நீராடி உசித மாகத் தானம் செய்து, அத் தீர்த்தத்தின் மேல் கரையி லுள்ள அரச மரத்தின் கீழிருந்து கொண்டு பக்தியோடு அஷ்டாட்சரம், துவாதசாட்சரம் என்னும் மந்திரங்களை ஜபித்து, ஸ்ரீஹரசாபஹரனை நினைத்து அந்த க்ஷேத்ர மகிமையைக் கேட்டு ஒரு ஏகாதசி விரதமிருந்து பெருமாள் ப்ரீதிக்காகக் கண் விழித்து காலையில் பக்தியுடன் பன்னி ரண்டு சுவாமிகளுக்குத் ததீயாரோதனம் பண்ணி வைக்கும் ஒருவன், பெருமாள் ஸாயுஜ்யத்தை அடைவான் என்பதில் சந்தேகமில்லை!'

ஸ்ரீதேவி, பூதேவியுடன் ஸ்ரீ ஹரசாப ஹரப் பெருமாள் இங்கு அபயஹஸ்தத்துடன் சேவை சாதிக்கிறார். கமல வல்லித் தாயார் தனிச் சந்நிதி கொண்டிருக்கிறார். சுவாமி விமானத்தின் பெயர் கமலாகிருதி என்பது. பெருமாளுக்கு முன்னால் ஸ்ரீ பெரிய திருவடியும் ஸ்ரீ சிறிய திருவடியும் காட்சி தருகின்றனர். இக்கோயிலில் சக்கரத் தாழ்வார் திருச்சந்நிதியும் உள்ளது.

சித்திரை மாதத்தில் கண்டன க்ஷேத்திரத்திற்குப் பக்தி யுடன் சென்று கபால தீர்த்தத்தில் நீராடி எட்டெழுத்து மந்திரம் ஓதி ஸ்ரீ ருத்ரனால் செய்விக்கப்பட்ட பெருமாள் திருவிழாவைத் தரிசித்தால் சாட்சாத் ஹரசாபஹரனா கவே ஆவான் என்கிறார் பிருகு மகரிஷி.

பிரமசிரக்கண்டீசரின் கதை இத் தலபுராணத்தில் இணைக்கப்பட்டிருப்பதைக் காணலாம். பார்வதி தேவிக் காக சிவபெருமான் பிரமனின் ஐந்தாவது தலையைக் கொய்ததாகத் திருக்கண்டியூர் தல புராணம் கூறுகிறது. ஸ்ரீகண்டன க்ஷேத்திரப் புராணமோ, ஸ்ரீ லட்சுமி தேவியின் வேண்டுகோளின் பேரில் சிவபெருமான் பிரமனின் தலை யைக் கொய்ததாகக் கூறுகிறது.

திருமால் பிரம்மாவைப் படைத்த போது அவனுக்கு ஐந்து முகங்கள். அவற்றில் நடுமுகம் புன்சிரிப்பினால் பேரழகுடன் விளங்கியது. லட்சுமி தேவிக்கு ஒரு சந்தேகம் பிறந்து விடுகிறது. புத்திரனின் திருவதனத்தைக் கண்ட பிறகு, தன் முக வசீகரம் குறைந்து விடுமோ, அதனால் பிராணநாதன் தன் மீதுள்ள பிரியத்தைக் குறைத்துக் கொண்டு விடுவாரோ என்று தேவி அஞ்சுகிறாளாம்!

தேவிக்கு இக்கட்டான நிலை உருவாகி விட்டது புத்திரனுடைய முகத்தைக் கிள்ளியெறிந்தால் பாவம் சேர்ந்து விடும். அப்படிச் செய்யாவிட்டால் பெருமாள் தன்னை ஆதரிக்காமல் போய் விடலாம்.

மனப் போராட்டம் முடிந்து சிந்தை தெளிவு பெறு கிறது. தன் கௌரவத்தைக் காத்துக் கொள்ள. தான் எது செய்தாலும் தன்னைப் பாவம் தீண்டாது என்று பிரளய சமுத்திரத்தில் முன்பு பெருமாள் வாக்களித்திருப்பது நினை விற்கு வரவே, பிரம்மாவின் நடு முகத்தைக் கிள்ளியெறிவது என்ற முடிவுக்கு வந்து விட்டாள். ஸ்ரீ ருத்ரனைப் பார்த் தாள். கூர்மையான கத்தியைத் தந்து, ''நொடியில் பிரம்மாவின் ஐந்தாவது முகத்தை அரிந்து வாருங்கள். அதனால் பல நன்மைகள் உண்டாகும்'' என்றாள்.

ஸ்ரீ லட்சுமி பிராட்டியின் வார்த்தைகளைக் கௌர வித்து ருத்ரன் பிரம்மாவின் தலையைக் கொய்து விட்டார். சதுர்முகனுக்குக் கோபம் மூண்டது. ''எனது மண்டை ஓடு உன் கையிலேயே ஒட்டிக் கொண்டிருக்க, பிரம்மஹத்தி தோஷத்துடன் நூறு வருஷங்கள் பூமியில் அலைந்து கொண்டிருப்பாயாக'' என்று சிவனைச் சபித்தார். அதற்கு பிறகு பெருமாளின் அருளால் இந்தச் சாபம் தீரும் என்று ஆறுதல் மொழியும் கூறியருளினார்.

பெருமாள் சிவனுக்குச் சாப விமோசனத்திற்கான வழியைக் கூறினார். பிரம்ம கபாலம் ஒட்டிக் கொண்ட கையோடு, வைணவத் தலங்கள்தோறும் சென்று புண்ணிய தீர்த்தங்களில் நீராடும்படியும், எந்த தீர்த்தத்தால் அந்தக் கபாலம் நிரம்புகிறதோ, அந்த இடத்தில் அந்தக் கபாலம் அவர் கையிலிருந்து நழுவி விழுந்து விடுமென்றும் உறுதியளிக்கவே, சிவபெருமான் பல தலங்களுக்குச் சென்று, புண்ணிய தீர்த்தங்கள் ஆடி இறுதியாக ஸ்ரீ கண்டன க்ஷேத்திரம் என்ற திருக்கண்டியூர் வந்து சேர்ந்தார்.

அப்போது பெருமாள், சிவனை அன்புடன் வரவேற்று, மேற்குப்புறத்தில் பிரகஸ்பதிக்காகப் பெருமாளால் ஏற்படுத்தப்பட்ட தீர்த்தத்தில் நீராடும்படி பணித்தார். அது தமது கதையினால் உண்டாக்கப்பட்டதால் அதற்கு கதா தீர்த்தம் என்று பெயர்.

அத்தீர்த்தத்தில் சிவபெருமான் ஸ்நானம் செய்ததும், பிரம்ம கபாலம் தண்ணீரால் நிரம்பியது. அதன் பலனாக அவரது கையிலிருந்து அது நழுவி விழுந்தது.

பின்னர், பிரம்மஹத்தி தோஷம் நீங்குவதற்காக, கிழக்கேயுள்ள பத்ம தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து சாப விமோசனம் பெற்றார் சிவபெருமான்.

பிரம்ம கபாலம் விழுந்ததால் நினைத்த மாத்திரத்திலேயே பாவங்களைப் போக்குகிற கபால தீர்த்தமாயிற்று அது. பத்ம தீர்த்தத்திற்கு 'ஹத்யா. விமோசன தீர்த்தம்' என்ற பெயர் உண்டாயிற்று.

ஹரனுடைய சாபத்தை விலக்கினபடியால் பெருமாள் இங்கு ஹரசாபஹரனாகத் திருநாமம் பெற்று விளங்குகிறார்.

சித்திரையில் சுக்லபட்சத்தில் தனது நட்சத்திரத்தில் பெருமாளுக்குக் கொடியேற்றிப் பல்லக்கு உற்சவம்

தொடங்கி வைத்தார் சிவன். கந்தர்வர்கள் கானம் இசைத்தனர். வேத முழக்கம் விண்ணை முட்டியது. ஒன்பது இரவுகள் வாகனங்களில் எழுந்தருளப் பண்ணி ஒன்பதாவது நாள் திருத்தேரில் ஏற்றி ரதோற்சவம் செய்தார். முப்பத்து முக்கோடி தேவர்களும் அதைக் கண்டு மகிழ்ந்தனர்.

இந்தப் பெருமாளுக்குச் சேவை புரிவதால் ஏற்படும் பல நன்மைகளும் பெருமைகளும் இத்தல புராணத்தில் கூறப்பட்டுள்ளன. அவற்றில் ஒன்று, பெருமாளுடைய திருக்கோயிலிலுள்ள புல்பூண்டுகளை களைந்து சீர்ப்படுத்துகிறவன் ரிஷியாகி கிரமமாக மோட்சத்தைப் பெறுவான் என்பதாகும்.

இப்புராணத்தில், பலிச்சக்ரவர்த்தி பெருமாளின் அருளால் சித்தப்பிரமை நீங்கி நலம் பெற்ற கதையும் கூறப்பட்டுள்ளது.

விரோசனனின் புத்திரனான பலி, பெருமாளின் தங்கக் கிரீடத்தை அபகரித்ததால் சித்தப்பிரமை ஏற்பட்டு, மூவுலகிலும் அலைந்து திரிந்து, இறுதியில் இங்கு வந்து பெருமாளின் திருவடிகளைப் பற்றினான். பெருமாள் அவனுக்கு ஆசி வழங்கி, பத்மத்தினால் செய்த தீர்த்தத்தில் அவனை நீராடச் செய்து சுவர்க்க லோகம் அனுப்பி வைக்கிறார். அதனால் பெருமாள் பலிநாதன் என்ற திருநாமமும் பெறுகிறார். 'பெரிய பாவங்கள் அனைத்தும் கழிக்கப்படுவதாலேயே பெரிய மகரிஷிகள் அனைவரும் இத்திருத்தலத்தைக் 'கண்டன க்ஷேத்ரம்' என்று அழைப்பார்கள் என்று கூறுகிறார் பெருமாள்.

பெருமாள் கோயிலுக்கு இடப்புறம் ஓர் அழகிய கோபுரம் இருக்கிறது. கேட்டால் அது பிரம்மாவின் கோயில் என்பார்கள். ஆகா! பிரம்மாவுக்கு இத்தனை பெரிய, அழகிய கோயிலா!' என்று வியந்து தரிசனத்திற்குத் தயாரானால் உள்ளே செல்ல முடியாது என்பார்கள்!

கோபுர வாசல் மூடிக் கிடக்கிறது. உள்ளே செல்ல முடியாமல் ஆலயமே பாழடைந்து போயிருக்கிறது!

திருக்கண்டியூர், மும்மூர்த்திகளும் உறையும் தலமாகும். இங்கே சிவன், விஷ்ணு, பிரம்மா கோயில்கள் அருகருகே இருக்கின்றன.

ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன் இங்கு பிரம்மாவுக்குத் தனி ஆலயம் இருந்ததாகவும், அங்கிருநத சிலைகள்தான் இன்று சிவாலயத்தில் இருப்பதாகவும் கூறப்படுகிறது. ஆதி கோயிலில் இருக்கும் பிரம்ம பீடத்தில் ஸ்ரீ லோகபுரீச்வரரையும், சரஸ்வதி பீடத்தில் ஸ்ரீ லோகநாயகி அம்மனையும் பிரதிஷ்டை செய்திருப்பதாகவும் ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள்.

இடிந்து விழுந்திருக்கும் முன்மண்டபத்தில் மயிலுடன் ஸ்ரீ சுப்ரமணிய சுவாமியும், நான்கு கரங்களுடன் ஓர் அம்மனும், முன்புறம் இரு கணபதிகளும், வெளியே ஸ்ரீ லோக நாயகி திருச்சந்நிதியும் இருக்கின்றன. உள்ளே செல்ல முடியாமல் ஓரே முட்புதராக இருக்கிறது. அங்குள்ள பெரிய புற்றில் நிறைய பாம்புகள் இருக்கின்றனவாம்!

பொய்யுரைத்த பிரம்மாவுக்குக் கோயில் இருக்கக் கூடாது என்ற சிவனுடைய சாபத்தால் இக்கோயில் இந்த நிலைக்கு வந்திருக்குமோ!

ஸ்ரீகண்டன மகா க்ஷேத்திரப் புராணத்தில் அங்குள்ள புண்ணிய தீர்த்தங்களுடைய பெருமைகளைப் பிருகு முனிவர் மிகவும் விரிவாக எடுத்துரைக்கிறார்:

ஸ்ரீபெருமாள் ஆலயத்திற்குக் கிழக்கே இருக்கும் 'பத்ம தீர்த்தம்' என்றும் 'ஹத்யா விமோசனம்' என்றும் கூறப்படும் புனித நீரைத் தொட்டாலோ, பருகினாலோ, ஸ்நானம்செய் தாலோ பக்தன் பிரம்மஹத்தி முதலிய தோஷங்களிலிருந்து நிச்சயமாக விடுபடுகிறான். கை, கால்களுக்கு, விலங்கிடப்

படும் ஆபத்து நீங்கி விடுகிறது. இப் பிறவியிலேயோ முற்பிறவிலேயோ எவ்விதமான பாவங்கள் செய்திருந்தாலும் அவை தொலைந்து விடுகின்றன.

இதில் தினமும் ஸ்நானம் செய்பவன் மண்டலாதிபதியாவான். இதை வலம் வருபவன் இப் பூவுலகையே வலம் வந்த புண்ணியம் பெறுவான்.

இத் தீர்த்தத்திற்குப் பிருகு முனிவர் ரிஷி; ஸ்ரீ ஹரசாப ஹரப் பெருமாள் தேவதை; விஷ்வக்ஸேநர் என்ற சேனை முதலியார் ரட்சகர். அங்குள்ள கடம்ப மரத்தினடியில் அமர்ந்து திருவஷ்டாட்சர மந்திரத்தை ஜபித்துப் பக்தியோடு தானங்கள் செய்தால் பெரும்புண்ணியம் கிடைக்கும். புரட்டாசி மாதப் பிறப்பு அன்றும், வைகாசி பௌர்ணமியிலும் ஹத்யா விமோசன தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து தர்ப்பணம் செய்தல் பித்ருக்களுடைய கடன் தீரும்.

ஆவணி மாதத்தில் காலையில் மூன்று நாட்கள் நீராடி கோதானம் செய்தால் ரிஷிகளின் கடன் தீரும்.

மார்கழி மாதத்தில் ஸ்நானம் செய்தால் தேவதைகளின் கடன் தீரும்.

ஸ்ரீ கிருஷ்ணாஷ்டமி தினத்தில் ஸ்ரீ பத்ம தீர்த்தத்தில் நீராடி, பக்தியோடு ஸ்ரீ ஹரசாபஹரனைப் பூஜித்து இரவில் விழித்துக் கொண்டிருப்போர் சாட்சாத் பெருமாளேயாவார்.

துலா சங்க்ரமணத்தில் பரிசுத்தமான பத்ம தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து குடும்பியான ஸ்ரீ வைஷ்ணவோத்தமனுக்கு யாதொருவன் பலதானம் செய்வானோ அவனுடைய பத்தினி, வம்சத்தையெல்லாம் விளங்க வைக்கும் நல்ல பிள்ளைகளைப் பெறுவாள்.

ஆவணி மாதம் வெள்ளிக்கிழமைகளில் ஸ்ரீ ஹத்யா விமோசன தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து ஸ்ரீ கமலவல்லித் தாயாரை சேவித்தால் நம் வம்சம் கடைத்தேறும்.

கார்த்திகை மாத செவ்வாய்க்கிழமை அஷ்டமியில் ஸ்ரீபத்ம தீர்த்தத்தில் ஸ்நானம் செய்பவன் ஞானத்தையும் திடமான பக்தியையும் பெறுவான்

ஹத்யா விமோசன தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தால் தொழுநோயும் தொலையும். இதற்கு உதாரணமாகப் பிருகு முனிவர் சௌனகருக்குச் சித்த வ்ருத்தன் என்பவரின் கதையைக் கூறுகிறார்:

முன்னொரு காலத்தில் கோதாவரிக் கரையில் சுந்தரன் என ஓர் அந்தணர் இருந்தார். அவரது திருக்குமாரர் சித்த வ்ருத்தன். இளவயதில் தந்தையை இழந்த அவருக்கு, கபிலர் என்பவர் வேத, வேதாந்தங்களையும் சாஸ்திரங்களையும் பயிற்றுவித்தார். பின்னர், தன் குமாரத்தியையே சீடனுக்குத் திருமணம் செய்வித்து, தன் பணத்தையெல்லாம் அவனுக்கு அளித்தார்.

ஆனால், சித்தவ்ருத்தன் ஒழுக்கங் கெட்டவனாகி செல்வத்தையெல்லாம் விலைமாதர்களுககாகச் செலவிட்டான். மனமுடைந்த அவர், அந்தத் துயரத்திலேயே இயற்கையெய்தினார். அவரது மனைவியும் விரைவிலேயே உயிர் நீத்தாள்.

பின்னர், சித்தவ்ருத்தன் மனைவியை நடுத்தெருவில் விட்டுவிட்டு, திருட்டுத் தொழிலில் இறங்கி அரசனால் துரத்தப் பட்டான். எங்கெங்கோ அலைந்து காவேரிக் கரைக்கு வந்தான். அப்போது அவன் 'கறுப்புப் தொழு நோயால்' பீடிக்கப்பட்டிருந்தான். வைகாசி மாதம் உற்சவத்தின் இறுதி தினத்தில் பிற பக்தர்களோடு ஸ்ரீபத்ம தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து தன் பாவங்களையும் நோயையும் போக்கிக் கொண்டான்.

முன்பு இத்திக்ருகுளத்தில். ருத்ரனின் சாபம் தீர்த்த வைகாசி பௌர்ணமியன்று சுவாமிக்குத் தீர்த்தவாரி நடைபெற்றிருக்கிறது. அந்த ருத்ர சாப விமோசன பிரம்மோற்சவம் இப்போது நடைபெறவில்லை. புரட்டாசி மாதத்தில் ஸ்ரீ வேதாந்த தேசிகருடைய தீர்த்தவாரி விமரிசையாக நடைபெற்று வருகிறது. (தண்ணீர் இருந் தால்)

அடுத்தபடி கதா தீர்த்தம் என்னும் கபால தீர்த்த மகிமையை பிருகு சௌனருக்குக் கூறுகிறார்.

ஸ்ரீ ஹரசாஹாரப் பெருமாளுக்கு மேற்கில் உள்ள உத்தமமான கபால தீர்த்தத்திற்குப் பிரமதேவனே ரிஷி. ஹரசாபஹரன் தேவதை; கருடாழ்வார் தீர்த்தபாலகர். அவ்விடத்தில் அரசமரம் ஒன்றிருக்கிறது.

பௌர்ணமி, அமாவாசை, கார்த்திகை, மார்கழி, ஆவணி மாதப் பிறப்புக்களிலும், சூர்ய. சந்திர கிரகண காலங்களிலும் கபால தீர்த்தத்தில் செய்யும் ஸ்நானம் பதினாயிரம் பிரம்மஹத்தியினாலுண்டான பாவத்தைப் போக்குகிறது.

இந்தத் தீர்த்தக் கரையில் தண்ணீர்ப் பந்தல் வைப் பவன், ஏழு ஜென்மங்களிலுண்டான பாவங்களை அக் கணமே போக்கிக் கொள்கிறான். இதற்குப் படிகள் கட்டு வதற்காகத் தானம் கொடுத்தாலோ அல்லது கட்டிக் கொடுத்தாலோ அவன் பதினாயிரம் யாகங்கள் செய்த பலனைப் பெறுவான்.

சித்திரை மாதத்தில் சுக்ல பௌர்ணமியில் ஒருமுறை ஸ்நானம் செய்வதனாலே 'ராஜயக்ஷ்மா' என்னும் பெரு வியாதியிலிருந்து விடுபட்டவனாகிறான்.

சப்த ரிஷிகள் அடங்கிய சபையில் தீர்மானித்தபடி, சந்திரனால் சேரப்பட்ட தனது பத்னியை, சித்ரா

பௌர்ணமி தினத்தன்று இத் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து வைத்துத் தானும் ஸ்நானம் செய்தார் பிரகஸ்பதி.

சந்திரனும் அன்று கபால தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து தனது பாவத்தைப் போக்கிக் கொண்டான்.

ஸ்ரீ பிரம்மதேவனின் கட்டளைப்படி அனைத்து நதிகளும் சித்ரா பௌர்ணமியன்று கடக லக்னத்தில் கபால தீர்த்தத்தில் வசிக்கின்றன.

இறுதியாக, கபால தீர்த்தத்தின் மகிமையை விளக்க காலசர்மா என்பவனின் கதையைக் கூறுகிறார் பிருகு:

மகத தேசத்தில் பிறந்த காலசர்மா வேத வேதாந்தங்களிலும் சகல சாஸ்திரங்களிலும் கரை கண்டவனாயிருந்தும், பிறரைத் தூஷித்து வந்த துர்க்குணத்தால் சுவாச ரோகம் அவனைப் பற்றிக் கொண்டு மரணமடைகிறான். கழுதையாகவும், கழுகாகவும். நாயாகவும். வானரமாகவும் பிறவிகள் எடுத்து, ஏதோ ஒரு பிறவியில் செய்த நல்ல கர்மாவினால் ஸ்ரீகண்ட க்ஷேத்திரத்தில் குரங்காகப் பிறந்து காபல தீர்த்தக் கரையில் உள்ள ஒரு மரத்தின் கிளையைப் பிடித்து நின்று கொண்டிருககின்றான. அப்போது அதில் ஸ்நானம் செய்த ஒருவர் துவாலையால் உடலைத் துடைத்துக் கொண்டபோது ஒரு நீர்த் திவலை அவன் மீது படவே, அதனால் பாவங்கள் நீங்கப் பெற்று. திவ்விய சரீரம் அடைந்து சுவர்க்க லோகம் போய்ச் சேர்ந்தான்.

இந்தக் கபால தீர்த்தத்தில்தான் பிரமசிரக்கண்டீசரின் தீர்த்தவாரி நடைபெறுகின்றது. முன்பு தெப்போற்சவம் நடைபெற்று வந்ததாம்.

புராணத்தில் இத்தனை பெருமைகள் கூறப்பட்டுள்ள திருக்குளங்கள் இன்று நீரற்று. சீரழிந்து, படிகள் இடிந்து பழுதாகிக் கிடக்கின்றன. இவற்றைப் பழுது பார்த்தால்

நமக்கும் புண்ணியம், ஊருக்கும் நாட்டுக்கும் நலம் உண்டாகும்.

ஸ்ரீரங்கம் ஸ்ரீமத் ஆண்டவன் சுவாமிகள் ஸ்ரீபெருமாள் கோயிலில் திருப்பணிகள் செய்து குடமுழுக்குச் செய்ய முயற்சிகள் மேற்கொண்டிருப்பதைத் தொடர்ந்து, மிகவும் சிரமத்துடன் ஒரு வேளை பூஜை நடைபெற்று வரும் பிரம் மாலயத்திற்கும் விடிவு காலம் பிறக்காதா என்று மனம் ஏங்கத்தான் செய்கிறது.

தற்போதுள்ள நிர்வாக அதிகாரி, முப்பத்தைந்து ஆண்டுகளாக நின்று போயிருந்த ஆலய உற்சவங்களை மீண்டும் நடத்துவதற்கு ஏற்பாடுகள் செய்துள்ளார் என்பதைக் கேட்க மகிழ்ச்சியாயிருந்தது. அவரது பதவிக் காலத்திலேயே பிரம்மாலயத்திற்கும் நல்ல காலம் பிறக்கும் என்ற நம்பிக்கையோடு திருக்கண்டியூரிலிருந்து விடை பெறுவோம்.

பாண்டிமாதேவி மங்கையர்க்கரசியும், அமைச்சர் குலச்சிறையாரும் பாண்டிய நாட்டில் பரவியிருந்த சமண இருளைப் போக்கி சைவப் பேரொளியைப் பரவச் செய்ய வேண்டும் என்ற உயர்நோக்கத்துடன் அழைத்ததற் கிணங்க திருஞானசம்பந்தப் பெருமான் அங்கு செல்கிறார்.

அந்நாட்டு மன்னனான கூன்பாண்டியனும் சமண மதத்தைத் தழுவியிருந்தார் அந்தப் பாதுகாப்பே துணை யாக சமணர்கள் ஞானசம்பந்தப் பெருமானுக்குப் பல தொல்லைகள் தந்தனர். அவர் தங்கியிருந்த மடத்திற்குத் தீயிட்டுக் கொளுத்தினர். அத் தீயே வெப்பு நோயாக மாறி பாண்டியனைப் போய்ப் பற்றி அவனை வருத்தத் தொடங் கியது. ஆனால் அந்த நோயைச் சமணர்களின் மந்திரமருந்து களினால் தீர்க்க முடியவில்லை. பின்னர், அரசியாரும் அமைச்சரும் வேண்டிக் கொண்டதற்கிணங்க, 'நானுற்ற நோயை நீக்கி வாதில் வென்றவர் பக்கமே சேர்வேன்'

என்று கூறி, சம்பந்தரை அழைத்து வரும்படி மன்னர் கட்டளையிட, சம்பந்தப் பெருமானும் வந்து சேர்ந்தார்.

சமணர்கள் மயிற் பீலியினால் அவன் உடலைத் தடவ, நோய் அதிகமாயிற்று. அடுத்து சம்பந்தர் 'மந்திரமாவது நீறு' என்ற பதிகம் பாடித் திருநீறு பூசவும் வெப்பு நோய் தீர்ந்தது. அரசனும் 'உய்ந்தேன், உய்ந்தேன்' என்று உவகையால் பூரித்துப் போனான்.

பின்னர், சமணர்கள் சம்பந்தப் பெருமானைக் கனல் வாதத்திற்கு அழைத்தனர். அவர்கள் தீயில் இட்ட ஏடு எரிந்து சாம்பலாயிற்று; 'போகமார்த்த பூண் முலையாள்' என்னும் திருநள்ளாற்றுப் பதிக ஏட்டை எடுத்து 'தளிரிள வளரொளி' என்ற பதிகம் பாடி சம்பந்தர் அந்த ஏட்டைத் தீயிலிட்டபோது அது எரியாமல் அப்படியே இருந்தது.

அடுத்தது புனல் வாதம். சமணர்கள், 'அத்தி நாத்தி' என்று எழுதி வைகை நதியில் விட்ட ஏடு கடலை நோக்கிச் சென்றது. 'வாழ்க அந்தணர்' என்ற பதிகம் பாடி சம்பந்தர் விட்ட ஏடு பிரவாகத்தை எதிர்த்துச் சென்றது. அவ்வேட்டில் 'வேந்தனும் ஓங்குக' என்ற நல்லாசி வழங்கப் பட்டிருந்ததால் அரசனது கூன்முதுகும் நிமிர்ந்தது, இதைத் தொடர்ந்து 'ஸ்ரீன்பாண்டியன்' சைவ சமயத்தை மேற் கொண்டான். ஆற்றில் சென்ற ஏட்டை எடுக்க அமைச்சர் குதிரையில் விரைந்தார். அவ்வேடு அப்படியே நிற்கும் பொருட்டு 'வன்னியும் மத்தமும்' என்ற பதிகம் பாடினார். அது நின்ற இடமே 'திருவேடகம்' ஆயிற்று.

பாண்டிய நாட்டில் சைவக் கொடியை நாட்டிவிட்டு, பல தலங்களைத் தரிசித்துக் கொண்டு, சோழ நாடு திருப்பிப் போதிமங்கை என்ற ஊருக்கு வந்தார் சம்பந்தர். சம்பந்தரை அலட்சியப்படுத்தி விட்டதை அறிந்து அவரது அடியவர் (சம்பந்த சரணாலயா) கோபமுற்றார். 'நீறணி வார் வினைப்பகைக்கு, அத்திரமாவன அஞ்செழுத்துமே'

என்னும் சம்பந்தரது ஆணையாலே புத்தநந்தித் தலையில் இடி விழுந்து அவன் இறக்கக் கடவன்' என்று கூறியனுப் பினார். அவ்வாறே இடி விழுந்து புத்தநந்தி மரணமடைந் தான். பௌத்தர்கள் மூலைக்கொருவராகச் சிதறி ஓடினர்.

சோழ நாட்டில் தல யாத்திரை புறப்பட்ட சம்பந்த ருக்கு திருநாவுக்கரசரைக் காண வேண்டும் என்ற பேரவா ஏற்பட்டது. பாண்டிய நாடு புறப்படும் முன் வேதாரண் யத்தில் அவரிடம் விடை பெற்றுச் சென்றார். திரும்பிய பிறகு தற்போது அவரைத் தரிசித்துப் பாண்டிய நாட்டில் நடைபெற்ற நிகழ்ச்சிகளைக் கூற வேண்டுமென்ற எண்ணம் எழவே, அவரைக் காண விரைந்தார்.

அச்சமயம் திருநாவுக்கரசர் திருப்பூந்துருத்தி என்ற தலத்தில் தங்கியிருந்தார். அத்தலம் திருக்கண்டியூரிலிருந்து மேற்கே திருக்காட்டுப்பள்ளி — தோகூர் செல்லும் பஸ் பாதையில் மூன்றாவது கிலோ மீட்டரில் குடமுருட்டி யாற்றின் தென் கரையில் உள்ளது. அதுவே திருவையாறு சப்தஸ்தான ஏழுரில் ஐந்தாவது தலமாகும்.

திருப்பூந்துருத்தியில் ஒரு மடம் கட்டி அங்கு தங்கிக் கொண்டு சிவத் தொண்டு புரிந்து கொண்டிருந்தார் அப்பர் சுவாமிகள். திருஞானசம்பந்தப் பெருமான் வயதில் மிக இளையவராக இருந்த போதிலும் தம்மைக் காண அவர் வருவதை அறிந்த அப்பர், சம்பந்தரை எதிர்கொண்டு வரவேற்று வணங்கச் சென்றார்.

பெரும் அளவில் பின் தொடர்ந்து வந்திருந்த சிவனடி யார் திருக்கூட்டம் கலந்து விட்ட அப்பர் சுவாமிகள், தம்மை சம்பந்தர் காணாதவாறு மறைந்திருந்து வணங்கி இறும்பூதெய்தினார்.

முத்துப் பல்லக்கில் திருப்பூந்துருத்தியை நெருங்கிக் கொண்டிருந்த சம்பந்தப்பெருமான், நான்கு திசைகளிலும்

பார்வையைச் சுழலவிட்டு நாவுக்கரசரைத் தேடிக் கொண்டிருந்தார். அவரை எங்குமே காணவில்லை. இறுதியாக ''அப்பர் எங்கிருக்கிறார்?'' என்று வினவினார். ''இதோ, இங்கிருக்கிறேன்'' என்று பதில் வந்தது. அப்போதும் எங்கிருக்கிறார் என்று ஒருவருக்கும் புரியவில்லை. சம்பந்தப் பெருமான் மிக ஆவலோடு தம்மைத் தேடுவதைக் கண்ட நாவுக்கரசர் ''ஐயா, இதோ உமது பல்லக்கைச் சுமந்து கொண்டிருக்கிறேன். உம் அடியேன் உம் அடிகள் தாங்கி வரும் பெருவாழ்வு கிடைத்து மகிழ்ந்திருக்கிறேன்'' என்று கூறவும், சம்பந்தர் கீழே குதித்து, ''அபசாரம் அபசாரம்'' என்று கூறி வணங்கி எழுந்தார். அடியார்க்கு அடியாராக இருக்கும் பக்தி நிலைக்கு இலக்கணமாகத் திகழ்ந்த அப்பர் பெருமானை நினைக்கும்போது இரும்பு இதயமும் இளகித் தான் ஆக வேண்டும்.

## திருவாலம்பொழில்

இந் நிகழ்ச்சி திருப்பூந்துருத்திக்கு மேற்கே ஒன்றரை கிலோ மீட்டர் தொலைவிலுள்ள திருவாலம் பொழில்சிவன் கோயிலுக்கு அருகில் நடந்ததாகக் கூறப்படுகிறது. அங்கு 'சம்பந்தர் மேடு' என்ற இடம் இதற்கு அடையாளமாகவும் காட்டப்படுகிறது.

தற்போது இப் பகுதி வெள்ளாம்பரம்பூராகும்! பக்கத்தில் தென்னரம்பூர் இருக்கிறது. தேவாரக் காலத்தில் இவ்விரு பரம்பூரும் சேர்ந்து தென்பரம் பைக்குடி என வழங்கியது. இத் தென்பரம்பைக்குடியில் விளங்கும் ஆலயத்தின் பெயரே திருவாலம் பொழிலாகும். இப்போது ஆலயம் உள்ள இடம் தனி ஊராக விளங்குகிறது. சுவாமியின் பெயர் ஆத்மநாதர். மேற்கு பார்த்த சந்நிதி. அம்பிகை — ஞானாம்பிகை. தனிச் சந்நிதியில் அம்பாள்

தெற்குநோக்கி எழுந்தருளியிருக்கிறாள். தல விருட்சம் — ஆலமரம். ஆனால், அம் மரம் தற்போது இல்லை.

பழைய கற்கோயில். கோபுரம் சிறியதானாலும் பிராகாரங்கள் பெரியவையாக இருக்கின்றன. கோயில் தாழ்ந்த பகுதியில் இருக்கிறது.

இது அட்டவசுக்கள் பூசித்த தலம். சுந்தர மூர்த்தி நாயனார் திருச்சோற்றுத்துறையைத் தரிசித்துப் பதிகம் பாடி, திருவலம்பொழில் வந்து சேர்ந்து திருமடத்தில் எழுந்தருளியிருந்தார்.

ஒரு நாள் அவரது கனவில் மழபாடியில் உறையும் சிவ பெருமான் தோன்றி' ''மழபாடி வர மறந்தனையோ?'' என்று கேட்டு மறைந்தார். உடனே சுந்தரர் எழுந்து காவேரிக்கு அக்கரையிலுள்ள திருமழபாடி சென்று 'பொன் னார் மேனியனே' என்ற பதிகம் பாடியருளினார். சுந்தர மூர்த்தி நாயனார் தங்கி, கனவு கண்ட மண்டபம் இருந்த அடையாளந்தான் தற்போது இருக்கிறது.

# திருப்பூந்துருத்தி

இத் தலத்திற்குக் கிழக்கேயுள்ள திருப்பூந்துருத்தியில் உறையும் இறைவனுக்குப் புஷ்பவனேச்சுவர் என்று திரு நாமம். இறைவி, அழகார்ந்த நாயகி என்ற சௌந்தராம் பிகை.

ஆற்றிடையில் உண்டாகும் நிலப்பகுதிக்கு துருத்தி என்று பெயர். மற்றொரு ஆற்றிடைப் பகுதிக்கு 'திருத்துருத்தி' (குற்றாலம்) எல்று பெயர் இருப்பதால் இத் தலத்திற்கு திருப்பூந்துருத்தி எனப்பெயர் உண்டானதா கவும் கூறுகிறார்கள்.

இப்பெயர் விளக்கத்திற்கு வேறு கதைகளும் உண்டு.

கௌதமரின் கோபத்தால் தன் உடலெல்லாம் ஆயிரம் குறிகள் தோன்றப் பெற்ற சாபத்தை, திருக்கண்ணார் கோயில் இறைவனை வழிபட்டு அவை பிறருக்குக் கண் களாகத் தெரியும் வரன் பெற்றான் இந்திரன். அதுவும் காணக் கூடாத காட்சியாக இருந்தால், அந்த நோயைப் போக்கிக் கொள்ளும் பொருட்டுப் பல தலங்களை தரிசித்துக் கொண்டு வரும் போது மலர்க் காட்டிடையே சிவலிங்கம் ஒன்று இருக்கக் கண்டு சுவாமியை வழிபட்டு, தன் நோய் நீங்கப் பெற்று மலர்ப் போன்ற தூய நல்லுடல் பெற்றதால் பூத்துருத்தி என்ற பெயர் ஏற்பட்டதாம்.

சிவலிங்க பூஜை செய்யும் சோழ மன்னன் ஒருவனுக்கு சிவலிங்க தரிசனம் செய்வித்தற் பொருட்டுத் துருத்தியில் லிங்கமாய் அமைத்துக் காட்ட, அத்துருத்தியே லிங்கமான காரணத்தினால் இத்தலம் இப்பெயர் பெற்றது என்றும் வழங்கப்படுகிறது.

தக்கன் வேல்வியில் கலந்து கொண்டதால் சூரியனுக்கு சிவாபராதம் ஏற்பட்டது. அது நீங்கும் பொருட்டு இங் குள்ள தீர்த்தம் ஒன்றில் மூழ்கிப் புஷ்பவனநாதரை வழி பட்டு சிவாபராதம் நீங்கப் பெற்றான். அச்சூரிய பூஜை இன்றும் நிகழ்ந்து வருகிறது. அத்தீர்த்தம் சூரியதீர்த்தம் என்ற பெயருடன் விளங்குகிறது. அது அப்பர் மடத் திற்கு வடக்கேயுள்ளது.

பதினெட்டு சிவகணங்களைச் சேர்ந்த விஞ்சையர் இருவர் கழுகாகச் சாபம் பெற்றுச் சண்டையிட்டு கொண்டே வந்து இக்கோயிலில் சோர்வுற்று வீழ்ந்தனர். மயக்கம் தெளிந்து எழுந்த பின்னர், நன்மலர்களைக் கொண்டு பெருமானை வழிபட்டுக் கழுகு உருவம் நீங்கப் பெற்றுத் தம் நாடு திரும்பிச் சென்றனர். காச்யப முனிவரும் இங்கு வழிபட்டிருக்கிறார். எவ்வாறு?

அம்முனிவர் தமது தவ வலிமையால் இக்கோயிலி லுள்ள ஆதி விநாயகர் சந்நிதியில் உள்ள கிணற்றில் ஆடி அமாவாசையன்று கங்கை முதலான புண்ணிய நதிகளின் தீர்த்தங்களைப் பொங்கச் செய்து புஷ்பவனேச்சுவரருக்கு அபிஷேகம் செய்து வழிபட்டிருக்கிறார்.

ஒரு சமயம், கந்தர்வர்களும் நாரதரும் நாதபிரும்மத் தில் லயித்து ஒன்றிப் போகும் நிலையைத் தமக்குச் சொல்லியருள வேண்டும். என்று சிவபெருமானிடம் கேட்க, அப்பெருமான் வீணா தட்சிணாமூர்த்தியாகக் காட்சியளித்து, ''பூந்துருத்திக்கு வருக'' என்று கூறினா ராம். இங்கிருக்கும் அந்த எழில்மிகு வடிவத்தைத் தரிசித்து நாம் புண்ணியம் பெறுவோம்.

முன் காலத்தில், அகத்தியரின் கடத்திலிருந்து பெருகிய காவேரி, கிழக்குத் திசையை நோக்கி ஓடி, செந்தலையி லிருந்து திருப்பழனம், திருவையாறு. திருநெய்த்தானம், சாத்தனூர்வரை இடைப்பட்டுள்ள இடங்களில் கடல் போல் தேங்கி நின்றது. அதனால் கோனேரிராஜபுரம் கருப்பூர், நடுக்காவேரி, திருவாலம்பொழில், திருப்பூந் துருத்தி முதலிய பகுதிகள் நீரில் மூழ்கிவிட்டன. இந்திரன் ஐயாறப்பரை வழிபட்டுக் காவேரியைக் கிழக்கு நோக்கி ஓடும்படி செய்தான். அச்சமயம் முதலில் தோன்றிய நிலப் பகுதி கண்டியூர், பின்னர், ஆற்று வண்டலும் மணலும் படிந்ததால் தோன்றியதுதான் திருப்பூந்துருத்தி. அந்த மேடிட்ட பகுதி மென்மையான பூப்போன்ற நிலமாகத் துருத்திக் கொண்டிருந்ததால் இது 'பூந்துருத்தி' என வழங்கப்பட்டது. இதனை, 'பொருத நீர்வரு பூந்துருத்தி' என்று அப்பர் பெருமான் குறிப்பிட்டுள்ளார். மலர் வனமாக இங்கு பூந்தோட்டங்கள் மண்டிக் கிடந்தன.

'செழுமதியந்தவழ் சோலைபூந்துருத்தி' என்கிறார் சேக்கிழார் பெருமான்.

தேவர்கள் அனைவரும் மலர் கொண்டு இறைவனை இத்தலத்தில் வழிபட்டதால் இப்பெயர் ஏற்பட்டது என்பதை 'வானோருலகமெல்லாம் வந்திறைஞ்சி மலர் கொண்டு நின்றி போற்றும் வித்தானை' என்று அப்பர் பெருமான் நினைவுபடுத்தியிருக்கிறார். திருமாலும் திருமகளும் மலர்வன நாதனை வழிபட்ட விவரத்தை நாயக்க மன்னர் காலத்தில் கட்டப்பட்ட ராஜகோபுரத்திலுள்ள சிற்பம் பறைசாற்றுகிறது. மலர்வனமே, துளஜாஜி மகாராஜா காலத்தில் புஷ்பவனம்' என்று அழைக்கப்பட்டது. சத்தியப் பொருளான 'பொய்யிலி' புஷ்பவனேக்வரர் ஆனார்.

உலைதுருத்தி சிவலிங்கமாக மாறிய சுவையான நிகழ்ச்சியைப் பற்றி அண்மையில் படிக்க நேர்ந்தது.

சோழ மன்னன் ஒருவன் தினமும் ஒரு சிவாலயத்திற்குக் குடமுழுக்குச் செய்வித்த பின்னரே உண்பது என்ற விரதம் பூண்டிருந்தானாம். குறிப்பிட்ட தினத்தில் லிங்க வடிவம் செய்து முடிக்கப்படாத காரணத்தால் சிற்பிகள் அரசனின் ஆணைக்கு அஞ்சி (உலை) ஊதும் துருத்தியில் மணலை நிரப்பி லிங்க வடிவமாக்கிப் பிரதிஷ்டை செய்தபின், அர்ச்சகர்கள் அபிஷேகம் செய்து முடித்தனர்.

அரசன் அரண்மனைக்குச் சென்ற பிறகு சிற்பிகள் சிவலிங்க வடிவம் பூர்த்தியானதும், மணல் நிரப்பிய துருத்தியை எடுக்க முயன்றனர்; ஆனால், முடியவில்லை. திகைத்து நின்றனர். அன்று சிவபெருமான் அரசனது கனவில் தோன்றினார். உடனே விழித்துக் கொண்ட அரசன் ஆலயத்திற்கு விரைந்து வந்து பார்க்க, துருத்தியும் லிங்க வடிவமாய் இருத்தலைக் கண்டு, திருவருளை நினைத்து உருகினான். இறைவனுக்கு நித்திய பூஜைகள், மாத, வருட உற்சவங்கள் முறையாக நடப்பதற்கான ஏற்பாடுகள் செய்தானாம்.

சுவாமிக்கு ஆதிபுராணன், பூந்துருத்தி உடையார், பூந்துருத்தி நாயனார் என்ற திருநாமங்களும் உண்டு.

இறைவியின் பெயர் அழகாலமர்ந்தநாயகி. 'அழகாலமைந்த உருவுடை மங்கையுந் தன்னொரு பாலுலகாயு நின்றான்' என்பது அப்பர் பெருமான் திருவாக்கு,

ஆலயத்திலுள்ள வீணாதட்சிணாமூர்த்தியைக் குறித்து 'பண்ணார்ந்த வீணை பயின்றான்றன்னை' என்று அப்பர் பாடுகிறார். இங்கு துர்க்கையம்மன், சாந்த துர்க்கையாக. 'ஏகௌரி' என்ற திருநாமத்துடன், அமர்ந்த திருக்கோலத்தில் தனிச் சந்நிதி கொண்டு பக்தர்கள் கேட்ட வரம் அளித்துக் காத்தருளுகிறாள்.

மூலத்தானத்தில் உறையும் இறைவன் பரமானந்தம் நல்கும் பேரழகுடனும் பேரருளுடனும் விளங்குகிறார்,

ஸ்ரீ அப்பர் சுவாமிகள் தனியொரு மடம் அமைத்துக் கொண்டு சில காலம் தங்கி உழவாரப் பணி செய்தது, திருப்பூந்துருத்திக்கு மேலும் புனிதத் தன்மையைக் கூட்டியுள்ளது. அவர் தங்கியிருந்த மடம் ஆலயத்திற்கு வடகிழக்கே உள்ளது. சிதைந்து போயிருந்த அந்தக் கட்டடத்தைப் புதுப்பித்து நல்ல முறையில் பாதுகாத்து வருபவர்கள் நமது நன்றிக்கும் வணக்கத்திற்கும் உரிய அடியார்கள்.

ஆலயத்தில் அமைந்துள்ள நாவுக்கரசரின் திருவடிவம், ஆலயங்களைக் காக்கவேண்டிய அவசியத்தை நமக்கு நினைவுபடுத்துகிறது. கோயில்களை வெறும் கல்கட்டடங்களாகக் கருதாமல் பெருமான் வாழும் புண்ணிய இல்லங்களாகக் கருதி, அவை தூய்மையாகப் பாதுகாக்கப்பட வேண்டும்என்று வலியுறுத்தியதோடு, அங்குவழிபாட்டுக்காக வரும் பக்தர்கள் எவ்வித இடையூறுமின்றி தெய்வ தரிசனம் செய்வதற்காக, பிராகாரங்களில் இருக்கும் கற்களையும் முட்களையும் அகற்றி, புல்பூண்டுகளைச் செதுக்கி, கோபுரங்களிலும் மண்டபங்களிலும் வளர்ந்திருக்கும் செடிகளைக் களைந்து, தள்ளாத வயதிலும் தளராத திருப்பணி செய்து

நமக்கெல்லாம் வழிகாட்டியாக அமைந்த பெரியவரின் திருமடத்தில் காலடி எடுத்து வைப்பதே பெரும் புண்ணியமாகும்.

தேவாரப் பாடல்களையும் ஆழ்வார்களின்பாசுரங்களையும் மனப்பாடம் செய்வதோடும், அந்தந்த ஆலயங்களுக்குச் சென்று மனம் உருகிப் பாடுவதோடும் மட்டும் நின்றுவிடாமல் பாடல் பெற்ற திருத்தலங்களுக்குச் செல்லும் போது அக்கோயில்களில் வளர்ந்துள்ள ஒரு முட்செடியையாவது அகற்றுவது என்று பக்தர்கள் உறுதியெடுத்துக் கொள்ள வேண்டும். ஆண்டவன் வாழும் இல்லங்கள் சமுதாயத்தின் பொதுச் சொத்துக்கள். அவற்றைத் தூய்மையாக வைத்துக் கொள்வதிலும், விளக்கேற்றி வைப்பதிலும், நாளும் நைவேத்திய பூஜைகள் நடைபெறச் செய்வதிலும் அக்கிராமத்தைச் சேர்ந்தவர்களும், வழிபாட்டுக்கு வரும் பக்தர்களும் அக்கறை எடுத்துக் கொள்ள வேண்டும். இந்தச் சேவைதான் நாயன்மார்களுக்கும் ஆழ்வாராதிகளுக்கும் அருணகிரியாருக்கும் வள்ளலாருக்கும் ஏனைய எண்ணற்ற மகான்களுக்கும் மெய்யடியார்களுக்கும் நாம் காட்டும் நன்றியுணர்ச்சியாகும்.

திருப்பூந்துருத்தித் திருத்தலத்தில் ஞானசம்பந்தரின் முத்துப்பல்லக்கை முதியவரான திருநாவுக்கரசர் சுமந்து வந்து பரவசத்தில் திளைத்தார். அப்பெரியவர் உழவாரப் பணி செய்த ஆலயத்தினுள் தமது காலடி படுவது பாவமென்று, கோபுரத்திற்கு வெளியிலேயே நின்று தரிசனம் செய்தார் திருஞானசம்பந்தர், அவருக்குத் தரிசனம் தருவதற்காக நந்திகேச்வரரைச் சற்று ஒதுங்கி அமரச் செய்தார் சிவபெருமான். திருப்பூங்கூரில் நந்தனாருக்கு நந்தி வழிவிட்டு விலகியது போன்று, இக்கோயிலிலும் இருப்பதைக் காண்கிறோம். பக்தருக்காக, பண்புடன் ஒதுங்கிய நந்தியம்பெருமானை அருகில் சென்று தரிசிக்

கிறேம். ஆஹா! முகத்தில் தான் எத்தனை சாந்தம்! பக்தி ரசம் வடியும் அக்கண்களில்தான் எத்தனை கருணை!

அடுத்துள்ள சிறிய நந்தியும் சந்நிதிக்கு நேரே இல்லாமல் சற்று ஒதுங்கியே இருக்கிறது.

பெரிய கோயில்; அழகிய கோயில்; ஜீவகளை ததும்பும் கோயில். சப்த மாதாக்கள், வீரபத்திரர், விநாயகர். தர்மசாஸ்தா. நவக்கிரகங்கள் முதலிய சந்நிதிகள் தவிர, கருவறைக்கு இருபுறமும் தென் கயிலை, வட கயிலைச் சந்நிதிகள் இருக்கின்றன. திருவையாற்றில் அப்பர் பெருமானுக்கு ஐயாறப்பர் கயிலைக் காட்சியருளியது போன்றே, இங்கும் வடகயிலை, தென் கயிலைக் காட்சிகள் காட்டியருளியதாக ஐதீகம்.

ஸ்ரீ நடராஜர் சந்நிதிக்கு வலப்புறம் காச்யபர் கங்கையை வரவழைத்த தீர்த்தக் கிணறு இருக்கிறது.

தென் பிராகாரத்தில் சமயக்குரவர்களின் வாழ்க்கை வரலாற்று நிகழ்ச்சிகள் வண்ண ஓவியங்களாக நம் கண்ணுக்கு விருந்தும், உள்ளத்துக்கு உவகையும் அளிக்கின்றன. அப்பணிக்குக் காரணமாக இருந்த நல்லோர்களைப் போற்றி வாழ்த்துகிறோம்.

அருணகிரியார் திருப்புகழ் பெற்ற தலம் இது. கருவறைக்குப் பின்புறப் பிராகாரத்தில் எழுந்தருளியிருக்கும் முருகப்பெருமானை அத்தலத் திருப்புகழ் கொண்டு வழிபட்டால். 'பெரு நோய்' நிச்சயம் நீங்குவதாகக் கூறப்படுகிறது. இவ்வாறு வழிபட்டுச் சிலர் பயனடைந்திருப்பதாக அறிந்தேன்.

இத்தலத்தை வடலூர் வள்ளலாரும் வழிபட்டுப் பாடியிருக்கிறார்.

திருவிசைப்பா அருளிச் செய்த பூத்துருத்திக் காடநம்பிகள் பிறந்த திருத்தலம் இது. அவரது உருவச் சிலை

யைக் கோயிலில் காண்கிறோம். அப்பர் பெருமான் பல வகைத் திருத்தாண்டகங்களும் திருஅங்கமாலை முதலிய திருப்பதிகங்களும் பாடியருளிய தலம்.

திருப்பூந்துருத்திலுள்ள பெருமாள் கோயில் மிகவும் சிதிலமடைந்திருக்கிறது. சுவர்களெல்லாம் இடிந்து செங்கல்கள் உடைந்து, காரைகள் எந்த நிமிடமும் இடிந்து விழலாம் என்ற நிலையிலிருக்கிறது. 'இதைக் கவனிப்பாரில்லை; நான் சொன்னால் கேட்பாருமில்லை' என்று அக் கோயிலின் வயதான அர்ச்சகர் கூறியபோது பரிதாபமாயிருந்தது. இக் கோயிலைத் திருப்பணி செய்து குட முழுக்குச் செய்யும் புண்ணியம் யாருக்குக் கிடைக்கப் போகிறதோ?

மேலதிருப்பூந்துருத்தி என்ற இப் பகுதியில் ஒரு சமாதிக் கோயிலும், அதற்கெதிரே அம்மதிற்சுவருக்குள்ளேயே ஒரு பெரிய மாமரமும், மதிற்சுவருக்கு வெளியே, கிழக்கே ஒரு பெரிய குளமும் இருக்கின்றன. அந்த மாமரம் நானூறு ஆண்டுகளுக்கு முன்பிருந்தே அங்கு இருந்து வருவதாகக் கூறப்படுகிறது. ஆலமரம் போல் வளர்ந்து, கிளைகளைப் பரப்பி, மாபந்தல் ஒன்று போட்டாற் போல் அது தோற்றமளிக்கிறது.

திருக்கண்டியூரையடுத்த மேலத் திருப்பூந்துருத்தியில் இருக்கும் சமாதிக் கோயில், 'ஸ்ரீகிருஷ்ணலீலா தரங்கிணி' பாடிய ஸ்ரீ நாராயண தீர்த்தருடையது என்று கேள்விப் பட்டிருந்த என்னை, அங்கு வைக்கப்பட்டிருக்கும் போர்டு சற்றுக் குழப்பத்தில் ஆழ்த்தியது.

குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத்தைச் சேர்ந்த ஸ்ரீ அனந்த பத்மநாப தீர்த்த நாராயண குருசாமி மடாலயம் என்று அதில் எழுதப்பட்டிருந்தது. நான் நூல்களிலும் கட்டுரைகளிலும் படித்தறிந்த வரையில், நாராயண

தீர்த்தருக்கு 'அனந்த பத்மநாபன்' என்ற பெயர் இருந்த தாகவே தெரியவில்லை. 'இப் பெயர் எப்படி வந்தது?' என்று என்னுள் கேள்வி கேட்டுக் கொண்டதோடு நில்லாமல், பலரையும் கேட்கத் தொடங்கினேன். ஒருநாள் 'ஸ்ரீ அனந்தபத்மநாப நாராயண குரு ஸ்வாமிகள் சரித்திரம் என்ற ஒரு பழைய நூல் கிடைத்தது. அதற்கு மேலட்டை இல்லை. யார் எழுதியது, எப்போது வெளியானது என்ற விவரங்கள் புரியவில்லை. ஆனால், திருப்பூந்துருத்தியில் ஜீவ சமாதி கொண்டிருக்கும் மகான், கங்கா தீரத்தில் உள்ள 'கிரி துர்க்கம்' என்ற கிராமத்தில், கங்காதரர் சாஸ்திரிகளுக்கும் மங்களாம்பிகா என்னும் மங்கை நல்லா ளுக்கும் பிறந்த அனந்தபத்மநாபன் என்று அதில் கூறப் பட்டுள்ளது. அவர் சுவர்ணபுரி என்ற கிராமத்தில் வசித்த சங்கர சாஸ்திரியின் மகள் சுசீலையை மணம் புரிந்து கொண்டார். அவருக்கு ஒரு புத்திரன் பிறந்தான். அவனுக்கு வயதானதும், அனந்தபத்மநாபன் குடும்பத்தை விட்டு விலகி, முக்தி மார்க்கத்தைத் தேடிச் சென்று விட்டார்.

காசிக்குச் சென்று, கங்கையில் ஸ்நானம் செய்து, ஞான வைராக்கியம் பெறும் பொருட்டு டுண்டி விநாயகரை வழி பட்டார். 'உனக்கு விரைவிலேயே சத்குரு ஒருவர் கிடைப் பார்' என்று கணபதி அருளாசி வழங்கவே, மகிழ்ச்சி யடைந்த அனந்தபத்மநாபன், ஜனார்த்தனம் சென்று ஸ்ரீ கிருஷ்ணன் மீது துதிப் பாடல்கள் பாடினார். ஸ்ரீ கிருஷ்ண பகவான் சந்நிதியில், ''உனக்கு 'தீர்த்த நாராயணர்' என்ற எனது பெயர் விளங்கப் போகிறது'' என்ற அசரீரி கேட்டது.

பின்னர், தீர்த்த நாராயணர் கோகர்ணம், உடுப்பி, சுப்ரமண்யா முதலிய தலங்களுக்குச் சென்றார். 'சுப்ர மண்யாவில் சண்முகர், 'உனக்காகக் காசியில் சிவசித்பரா னந்தர்' என்ற சத்குரு காத்திருக்கிறார். அவரிடம் உப

தேசம் பெற்று சகல ஸித்திகளையும் பெறுவாயாக' என்று அருள்வாக்குக் கூறினார்.

தஞ்சை மாவட்டத்தில், திருக்கோடிக் காவலுக்கு அருகில், காவிரி உத்தரவாகினியாக ஓடும் புண்ணிய பகுதியில் கம்சபுரம் என்னும் கஞ்சனூர் இருக்கிறது. அங்கு தோன்றிய மகான், ஹரதத்த சிவாசாரியார். அவரது சீடர் சிவஞான போதர். அவரது சீடர் சிவசித்பரானந்தர். அவரைத்தான் காசியில் தமது குருவாக ஏற்றுக் கொண்டார் அனந்த பத்மநாபன். தீர்த்த நாராயணர் என்ற தீட்சா நாமம் பெற்றார். 'நீ நாராயண குருவாகப் புகழ் அடைவாய்' என்றும், 'கஞ்சனூரில், சிலாரூபத்தில் இருக்கும் ஹரதத்த சிவாசாரியார் உனக்குப் பிரத்யட்சமாகி, உன்னை அனுக்ரகிப்பார்' என்றும் வாழ்த்தியனுப்பினார் குரு.

கஞ்சனூருக்கு வரும் வழியில் தீர்த்த நாராயணர், பெருநோய் உடையவனைக் குணப்படுத்தியும், புலியால் கொல்லப்பட்டவனை உயிர்ப்பித்தும் இன்ன பல அற்புதச் செயல்களைப் புரிந்து கொண்டு வந்தார். திருவண்ணாமலை குகையில் சிறிது காலம் தங்கியதால் 'குகை நமசிவாயர்' என்ற சிறப்புப் பெயர் பெற்று காஞ்சிபுரம், சிதம்பரம் முதலிய தலங்களைத் தரிசித்துக் கொண்டு, கஞ்சனூர் வந்து, காசியில் தமது குரு அருளியவாறே ஹரதத்தரின் தரிசனம் பெற்றார். அவர். ''அனந்த பத்மநாபா, நீ ஞானியாகி விட்டாய். கர்மாவினால் உனக்கு இனி ஆக வேண்டியது ஒன்றுமில்லை. ஆனால், உலக மக்களின் நலனுக்காக நீ நற்பணிகள் புரிந்து கொண்டிரு. உன் பணி முடிந்ததும் சச்சிதானந்த ஜோதியுடன் கலந்து விடலாம்'' என்று கூறி மறைந்தார்.

அடுத்து, நாராயண குருசுவாமிகள் திருவையாற்றை அடுத்து, கொள்ளிடக் கரையிலுள்ள பரசு நர்த்தன தலமான திருமழபாடிக்கு வந்து ஒரு வில்வ மரத்தடியில் அமர்ந்

தார். திருவையாற்றைச் சேர்ந்த பஞ்சநதம் என்ற அந்தணர் அவருக்குத் தினமும் வெண்பொங்கல் பிரசாதம் தயாரித்து எடுத்து வந்து அளித்த வரலாறும், ஒருநாள் இவர் சுடுமணலில் நடந்ததால், சுவாமிகளின் பாதங்கள் கொப்பளித்திருந்ததைக் கண்டு, 'அபசாரம் அபசாரம்' என்று கூறியழுததும் குருவின் ஆணைப்படி பிரசாதம் கொண்டு வருவதை அவர் நிறுத்திக் கொண்ட நிகழ்ச்சியும் இந்நூலில் காணப்படுகின்றன. 'இன்னும் 257 நாட்களில் திருப்பூந்துருத்திக்குச் சென்று, அங்கு ஒரு நாள் மறைந்து விடுவேன்' என்று கூறியவர், அவ்வாறே திருப்பூந்துருத்திக்குச் சென்று, இறந்த ஆட்டை உயிர்ப் பித்தும், மரணமடைந்ததாக ஏமாற்றி இவரைச் சோதிக்க வந்த இளைஞரை மரணமடையச் செய்தும். பின்னர்,அரசியின் நோயைக் குணப் படுத்தியும் பலஅற்புதங் களைச் செய்தார். அதற்காக அரசன், அவரோடு வசித்து வந்த ஆடு நடந்த பரப்பளவு கொண்ட நிலத்தை அவருக் குப் பட்டா செய்து கொடுத்து சமாதிக் கோயிலும் கட்டிக் கொடுத்தான். மாசி மாதம், சுக்லபட்சம், குரு வாரம். அஷ்டமி திதி, கிருத்திகை நட்த்திரத்தன்று அவர், மந்த்ராலய மகான் ஸ்ரீ ராகவேந்திரர் போன்றே, தமக்காக ஒரு குழியை வெட்டச் சொல்லி, அதில் இறங்கி ஜீவ சமாதியில் ஆழ்ந்தார்.

இதுதான் இந்நூலில் காணப்படும் தீர்த்த நாராயணரின் வாழ்க்கைச் சரித சுருக்கம். இதில் இம்மகான் துளஜாஜி மகாராஜாவின் துணைவியாரின் நோயைக் குணப்படுத்தியதாகக் கூறப்பட்டுள்ளது. அந்த அரசரின் காலம் 1765–1787.

'சிவா' என்பவர் எழுதிய 'தெய்வீகமும் ஆத்மீகமும்' என்ற நூல் 1980 ஆம் ஆண்டு சென்னை நர்மதா பதிப்பகத் தாரால் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. அதில் 'தீர்த்த நாராயணர்' என்ற தலைப்பில், கிட்டத்தட்ட இதே சரிதம்

வெளியாகியிருக்கிறது. ஆனால், அதில் ஸ்ரீ அனந்தபத்ம நாபன். கஞ்சனூர் ஹரதத்த சிவாசாரியாரை நேரில் தரிசித்து உபதேசம் பெற்றதாகவும், அவரே இவருடைய குருவென்றும் கூறப்பட்டிருக்கிறது.

இப்புத்தகத்தில் 'நாராயண தீர்த்தர்' என்ற வேறொரு கட்டுரையும் உள்ளது, அதில். இவர் தெலுங்கு தேசத்தில் வெள்ளத்தூர் என்ற கிராமத்தில் பிறந்ததாகக் கூறப்பட்டிருக்கிறது. இவர், திருமணமானவர் என்றும், நதியைக் கடக்கும்போது வெள்ளம் பெருகவே, உயிர் தப்பிக்க மானசீக சந்நியாசம் ஏற்றுக் கொண்டதாகவும், அது மனைவிக்குத் தெரிந்ததும் குடும்பத்தை விட்டு வெளியேறிய தாகவும் கூறப்பட்டுள்ளது. இந்த ஆசிரியர், ஸ்ரீ கிருஷ்ண லீலா தரங்கிணி' பாடிய நாராயண தீர்த்த சுவாமிகள் வரகூரிலேயே முக்தியடைந்தார் என்றும், அவரது அதிஷ்டானம் மறைந்து விட்டதென்றும் தீர்த்த நாராயண சுவாமிகள்தான் திருப்பூந்துருத்தியில் ஜீவ சமாதி அடைந் தார் என்றும் உறுதியாகக் கூறுகிறார்.

'ஸ்ரீ நாராயண தீர்த்த குரு சுவாமிகள் அவதார ரகசியம்' என்று 1954 ஆம் ஆண்டில் பிரசுரமான சிறு நூலையும் படிக்க நேர்ந்தது. தொகுப்பாளர் அமுதமொழி தி.சோ. சுவாமிநாதன். பதிப்பாளர் பிரும்மஸ்ரீ மாஞ்சா ஐயர் அவர்கள். (திருவிடை மருதூர்) இதை எழுதியவர் பிரசங்க வாசஸ்பதி கே. எஸ். சூரியநாராயண தீட்சிதர். (விநோதன் அச்சகம், 33, ஜோன்ஸ் தெரு, சென்னை-1.)

இந்த நூலில், தஞ்சை அரசனுக்கு இருந்த நோயைக் குணப்படுத்தியதாகத்தான் இருக்கிறது, அரசியைப் பற்றிய செய்தி இல்லை. அந்த அரசனின் பெயர் அமர்சிங் — அவரது காலம் 1787 — 1798 — அதாவது துளஜாஜி மலையலரையடுத்து ஆட்சி புரிந்தவர். எனவே, அந்த மகான் அரசனது நோயைக் குணப்படுத்தினாரா, ராணியின் நோயைக் குணப்படுத்தினாரா, அந்த அரசன் யார் என்ப

திலும் குழப்பமிருக்கிறது. இருநூறு வருஷங்களுக்குள் நிகழ்ந்த சரித்திர நிகழ்ச்சி இது. தஞ்சை அரசர் திருப்பூந் துருத்தியில் மகான் ஒருவருக்கு நிலம் பட்டா செய்து கொடுத்த விவரத்திற்கோ, சமாதிக் கோயில் கட்டிக் கொடுத்த செய்திக்கோ அரண்மனையில் ரெக்கார்டுகள் இல்லாமலா போய்விடும்?

1959 ஆம் ஆண்டில் 'பவான்ஸ் ஜர்னல்' பத்திரிகையில் கே. சீதாராமய்யா என்பவர் எழுதிய ஒரு கட்டுரையில் ஸ்ரீ கிருஷ்ணலீலா தரங்கிணி இயற்றிய ஸ்ரீநாராயண தீர்த்தர் ஆந்திர தேசத்தில் குண்டூர் மாவட்டத்திற்கருகிலுள்ள காஜா என்னும் ஊரில் தல்லவஜ்ஜல என்ற அந்தணர் குலத்தில் பிறந்தவர் என்றும், கோவிந்த சாஸ்திரியென்ற பெயர் கொண்ட அவர், பன்னிரண்டு வருடம் வாசுதேவ சாஸ்திரியிடம் கல்வி பயின்றதாகவும், வேதாத்ரி என்னுமிடத்தில் பன்னிரண்டு வருட காலம் தவம் இயற்றியதகாவும் காணப்படுகிறது. அதற்குப் பின்னர் அவர் காசிக்குச் சென்று ஸ்ரீ ராமானந்த தீர்த்தரின் சீடரானார் என்றும், சிறிது காலம் கோதாவரி மாவட்டத்திலுள்ள குச்சிமஞ்சி என்ற கிராமத்தில் வாழ்ந்ததாகவும் கூறப் பட்டுள்ளது.

ஸ்ரீநாராயண தீர்த்தர் 1675 ஆம் ஆண்டிலிருந்து 1745 வரை வாழ்ந்ததாக இந்த ஆசிரியர் கூறுகிறார், திரு.எம். கிருஷ்ணமாச்சாரியார் எழுதிய History of Classical Sanskrit Literature என்ற நூலிலிருந்து மேற் கோள்கள் காட்டியுள்ளார்.

1968 ஆம் ஆண்டு, வரகூர் கிருஷ்ணசர்மா என்ற வி.ஆர். கிருஷ்ணசுவாமி எழுதிய 'தீர்த்த நாராயண சுவாமிகளின் ஜீவ்ய சரித்திரம்' என்ற நூலில் மேற்கண்ட கட்டுரையில் உள்ள விவரங்கள் சற்று விரிவாகக் கூறப் பட்டுள்ளன.

தஞ்சை சரஸ்வதி மஹால் நூல்நிலையத்தில் நாராயண தீர்த்தர் எழுதிய 'பக்தி மீமாம்ச பாஷ்யம்' என்ற ஏட்டுச் சுவடி இருந்ததாகவும், அது தற்போது காணமற்போன பட்டியலில் உள்ளதாகவும் அங்கு பணிபுரியும் அன்பர் குடவாயில் பாலு கூறுகிறார், தஞ்சை மன்னர்களுடன் தீர்த்தர் தொடர்பு கொண்டிருந்ததற்கான குறிப்பு எதுவும் கிடைக்க வில்லையென்றும் அவர் கூறினார்.

திரு. வி.எஸ்.வி. குருசுவாமி சாஸ்திரிகள் • என்ற சமஸ்கிருத வித்தகர், ஸ்ரீநாராயண தீர்த்தர். சிவராமவர்ணி என்ற மகானின் சீடர் என்றும், ஒரு கீர்த்தனத்தில் 'வர்ணிதம் சிவராமவர்ணி பதாம்புஜப்ரமரேண' என்று தம் குருவின் பெயரை அவர் குறிப்பிட்டிருக்கிறார் என்றும் எழுதியுள்ளார். ஸ்ரீநாராயண தீர்த்தருக்குப் பிரும்மானந்த சரஸ்வதி என்ற ஒரு சீடர் இருந்திருக்கிறார். அவர், தாம் இயற்றிய 'லகு சந்திரிகை' என்னும் அத்வைத ஸித்தி வியாக்யானத்திலும் ரத்னாவளி என்ற ஸித்தார்த்த பிந்து வியாக்யானத்திலும் தம் குருவான நாராயண தீர்த்தரையும், அவரது குருவான சிவராமவர்ணி அவர்களையும் போற்றித் துதி செய்திருக்கிறார் என்றும், அவர் பதினேழாவது நூற்றாண்டைச் சேர்ந்தவர் என்றும் குருஸ்வாமி சாஸ்திரிகள் கூறியிருக்கிறார்.

திருப்பூந்துருத்தி ஸ்ரீ அனந்தபத்மநாப தீர்த்த நாராயண குரு சுவாமிகள் மடாலயத்தில் அஷ்டமி திதியன்று, மாசி மாதம், சுக்லபட்சம், குருபூஜை நடைபெறுகிறது. வரகூரிலும். மாசி மாதம் இதே நாளைத்தான் சில வருடங்களாகத் தீர்த்தரின் 'ஆராதனை' நாளாகச் சிலர் கொண்டாடி வருவதாக அறிகிறேன்.

நான் படித்தறிந்த வரையில். இரு மகான்களும் ஒருவரே என்ற முடிவுக்கு வரமுடியவில்லை. ஒருவர், பக்தி மார்க்கத்தில் ஈடுபட்டு, தெய்வ அருளால் பக்தி காவியங்களும் வேதாந்த நூல்களும் இயற்றி, பஜனை, நாட்டியம்

இசைத் துறைகளில் அரும்பெரும் சாதனைகளாகப் புரிந்த யதீந்திரராகவும், மற்றொருவர் குரு கடாட்சத்தாலும் தெய்வ அருளாலும் பல ஸித்திகளைப் பெற்று அற்புதங்கள் நிகழ்த்திய மகா புருஷராகவும் காட்சியளிக்கிறார். பெயர்க் குழப்பத்தினால், இருவர் வாழ்க்கை வரலாறுகளும் பின்னிப் பிணைந்து போய், சரித்திர ஆதாரம் கிடைக்காததால், செவி வழிவந்த செய்திகளைக் கொண்டே அவர்களைப் பற்றி எழுதி வந்திருக்கிறார்கள் என்று எண்ணத் தோன்று கிறது. 'குழப்பம் தீர்ந்து, தெளிவு பிறந்து, உண்மை விளங்க வேண்டும்' என்று சமாதியில் உறையும் மகானைப் பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறேன்.

நிற்க, பக்தித் துறையிலும் காவியத் துறையிலும் சரித்திரத் துறையிலும் ஆர்வமுள்ள ஒருவர் இந்தச் சவாலை ஏற்றுக் கொண்டு, 'நாராயண தீர்த்தர்' — 'தீர்த்த நாராயணர்' பெயர்க் குழப்பத்தை சந்தேகத்திற் கிடமின்றித் தீர்க்கும் வகையில் வரகூர், திருப்பூந்துருத்தி தலங்களைப் பற்றி ஆழமாக ஆராய்ந்து, தருசை அரண் மனைக்கும் திருப்பூந்துருத்தி சமாதிக்கும் உள்ள தொடர் பைத் தெளிவுபடுத்தி ஒரு 'தீஸீஸ்' எழுதினால் அது மிகவும் பயனுள்ள அரிய நூலாக அமையும் என்பது உறுதி. ஆராய்ச்சி உள்ளம் கொண்ட இளைஞர்களுக்கு இந்தப் பிரச்னை ஓர் அரிய கரு என்பதில் ஐயமில்லை.

இக் கட்டுரைத் தொடரில், வரகூரைப் பற்றி எழுதிய போது, ஸ்ரீ நாராயண தீர்த்தரைக் குறித்கி விவரங்களை அறிய விரும்புவதாக நான் எழுதியிருந்ததைத் தொடர்ந்து பலர் கடிதத்தின் மூலமும் நேரிலும் என்னுடன் தொடர்பு கொண்டு உதவி வந்திருக்கிறார்கள். அவர்களில் சேலத் தைச் சேர்ந்த அன்பர் எஸ். சுப்ரமணியமும் ஒருவர். 1-10-1953. இந்தியன் எக்ஸ்பிரஸில் விஸ்ஸா அப்பா ராவ் எம். ஏ., எல், டி. அவர்கள் எழுதிய ஒரு கட்டுரையின் சுருக்கத்தை எனக்கு அனுப்பி வைத்திருந்தார் அவர். அதில்

ஸ்ரீநாராயண தீர்த்தர் 1700 ஆண்டளவில் ஆந்திரத்தில் குச்சிமஞ்சிவாரி என்ற கிராமத்தில் பிறந்ததாகக் குறிப்பிடப் பட்டிருக்கிறது. (அக்கிராமத்தில் ஸ்ரீ தீர்த்தரின் பரம்பரையினர் ஸ்ரீகிருஷ்ண லீலா தரங்கிணி இசை-நாடகத்தை இன்றும நடத்திக் கொண்டு வருவதாக அறிகிறேன். ஆராய்ச்சியயாளர் அங்குச் சென்று மேலும் ஆராய்வது பயனுள்ளதாக இருக்கும்)

இந்தியன் எக்ஸ்பிரஸ் கட்டுரையில், தீர்த்தர் தமது மாமனார் இல்லத்திற்குச் செல்லும்போது ஆற்றில் திடீர் வெள்ளம் வந்த நிகழ்ச்சியும், அதனால் அவர் ஆபத் சந்நியாசம் பெற்றுக் கொண்ட வரலாறும் கூறப்பட்டுள்ளன. அங்கிருந்து அவர் திருப்பதிக்குச் சென்று யோக சாதனைகள் புரிந்து 'யதி' ஆனார் என்றும், அப்போது போதேந்திர சரஸ்வதி என்பவர் அவருக்குச் சீடரானார் என்றும் தெரிகிறது. அங்கு திருவேங்கடத்தான் மீது பல துதிப் பாடல்கள் இயற்றினார் என்றும், ஸுரேச்வரரின் 'பஞ்சீகரண சுவர்த்திகா' என்ற நூலிற்கு 'தீபிகா' என்ற விளக்கவுரை ஒன்று எழுதியுள்ளார் என்றும் அறிய முடிகிறது.

பின்னர் வயிற்று வலியால் மிகவும் அவதியுற்று, தென்னகம் நோக்கி தலயாத்திரை செய்தவரைக் கனவில் திருமால் ஆட்கொள்ள, மறுநாள் வராகம் வழிகாட்ட, வரகூர் வந்த கதையும் கூறப்பட்டுள்ளது. ஸ்ரீகிருஷ்ணலீலா தரங்கிணியைத் தவிர 'பாரிஜாதாபஹரணம்' என்ற நாடகத்தையும் இவர் இயற்றியிருப்பதாகவும், அது மெலட்டூரில் பாலசுப்ரமணிய சாஸ்திரிகளிடம் இருப்பதாகவும் டாக்டர் வே. ராகவன் Journal of Music Academy—யில் குறிப்பிட்டிருக்கிறார்.

வேதாத்திரியும் மங்களகிரியும் ஒன்று தானா, அங்குள்ள பானக நரசிம்மர்தான் தீர்த்தரின் குலதெய்வமா என்பதெல்

லாம் ஆராயப்பட வேண்டிய விஷயங்கள் என்றும் அன்பர் கருத்து தெரிவித்திருக்கிறார். குச்சிப்புடி, மெலட்டூர் இசை-நாட்டிய வல்லுநர்கள் உதவியை நாடினால் நாராயண தீர்த்தரின் வாழ்க்கை வரலாற்றைப் பற்றிய முக்கிய ஆதாரங்கள் கிடைக்கலாம். மியூசிக் அகாடமி காரியதாசி திரு டி. எஸ். பார்த்தசாரதி, தெலுங்குக் கவிஞர் 'ஆருத்ரா' போன்றவர்களும் உதவக்கூடும்.

திருப்பூந்துருத்தியில் வசிக்கும் ஸ்ரீ ராதாகிருஷ்ண காடே ராவ்சாஹேப் அவர்களைக் கண்டு பேசிக் கொண்டிருந்தேன். தஞ்சாவூர் மராட்டிய ராஜ பரம்பரையைச் சேர்ந்த அவர், அவ்வூரின் பொது நிகழ்ச்சிகளெல்லாம் முக்கிய பங்கு பெற்று வருவதை அறிந்தேன். சப்தஸ்தான விழாவின்போது அவர் காட்டிய ஆர்வத்தையும் ஈடுபாட்டையும் நேரில் பார்த்து வியந்தேன். அவ்வூரிலுள்ள ஜீவசமாதிக் கோயிலைப் பற்றிய ஆராய்ச்சியில் அவர் தம்மால் முடிந்த உதவிகளைச் செய்து தர முன் வரவேண்டும். அவரது இத் தொண்டு தென்னகத்திற்கு மட்டுமின்றி பாரதத்திற்கே பயனுள்ளதாக அமையும்.

## திருநெய்த்தானம்

நம் பயணத்தைத் தொடருவோம். திருப்பூந்துருத்தியிலிருந்து குடமுருட்டி, காவேரி நதிகளைக் கடந்து வடக்கே யுள்ள தில்லை ஸ்தானம் என்ற திருநெய்த்தானத்திற்குச் செல்கிறோம். சப்தஸ்தான யாத்திரையில், திருவையாற்றிலிருந்து புறப்பட்டு. ஏழாவது ஊரான கடைசி தலத்தைத் தரிசிக்கப் போகிறோம்.

காவிரிக்கு வட கரையில். திருவையாற்றுக்கு மேற்கே ஒரு மைலில் இருக்கிறது தில்லைஸ்தானம்.

இறைவனின் திருநாமம் நெய்யாடியப்பர்—கிருத புரீச்வரர். பெயருக்கேற்ப சுவாமிக்கு நெய் அபிஷேகம் நடைபெறுகிறது. மாடு ஒன்று சுவாமியின் மீது நெய் யாகவே அபிஷேகம் செய்ததாக ஐதீகம். அம்பிகையின் திருநாமம் பாலாம்பிகை உமாபதி சிவம். தமதுசிவக்ஷேத்திர சிவநாமக் கலி வெண்பாவில் 'மையிருங்கண்-பாவை வாலாம்பிகை தன் பாகா நெய்த்தானத்தில், ஆவலுறு நெய்யாடியப்பனே' எனக் கூறுகிறார்.

இது கலைமகள் வழிபட்ட திருத்தலம். இக்கோயிலைப் பற்றி செவி வழி வந்த செய்தி ஒன்று கூறப்படுவது உண்டு.

தினமும் சுவாமிக்கு நெய் விளக்கிட்டுச் செல்லும் அன்பர் ஒருவர், கோயிலிலுள்ள கீரையைப் பறித்துக் கொண்டு செல்வது வழக்கமாம். வெகு ஆண்டுகள் இது நடந்து கொண்டிருந்தது. பக்தருக்கு மூப்பெய்தியது. ஆண்டவனிடம் வேண்டினார். ''அப்பனே. அநேக ஆண்டு களாக நெய் விளக்கேற்றும் கைங்கரியம் செய்துவருகிறேன். அதற்காக அடியேனுக்கு அருள்புரிய வேண்டுகிறேன்.''

அப்போது ஓர் அசரீரி கேட்டதாம்.''பக்தா, நெய்க்குப் பதிலாகத்தான் நீ தினமும் கீரையைப் பறித்துச் சென்று விட்டாயே. வேறுஎன்ன அருள் வேண்டும்?''

கைம்மாறு கருதாமல், சிவ சொத்தை அபகரிக்காமல் நாம் ஆலய சேவை செய்ய வேண்டும் என்பதுதான் இந்த நிகழ்ச்சியின் கருத்தாகக் கொள்ள வேண்டும்.

இக் கோயிலில், நின்ற திருக்கோலத்தில் உள்ள தட்சிணாமூர்த்தியையும் நர்த்தன கணபதியையும் தரிசித்துப் புண்ணியம் பெறுவோம். இரண்டு பிரகாரரங்க ளிலும் உள்ள தூண்களில் நிறைய சிற்பங்கள் காணப்படு கின்றன. மேற்குப்புறத்தில் சுப்ரமணியர், சனீச்வரர், மகா லட்சுமி முதலியோர் உள்ளனர். முதல் பிராகாரத்தின்

கிழக்கு மூலையில் சப்த கன்னிகைகளில் நால்வர் மட்டுமே உள்ளனர்.

இத்தலத்திற்கு ஸ்ரீ சம்பந்தமூர்த்தி சுவாமிகள் ஒரு தேவாரப்பப்பதிகமும், ஸ்ரீ திருநாவுக்கரசு சுவாமிகள் ஐந்து பதிகங்களும் அருளியுள்ளார்கள். அருணகிரியாரும் திருப் புகழ் பாடியிருக்கிறார், சேக்கிழார் பெருமான் தமது பெரியபுராணத்தில் சம்பந்தரைப் பற்றிக்கூறும் போது.

குடதிசைமேற் போவதற்குக்
கும்பிட்டங் கருள் பெற்றுக்
குறிப்பி னோடும்
படருநெறி மேலணைவார்
பரமர்திரு நெய்த்தானப்
பதியில் நண்ணி
அடையுமனம் உறவணங்கி
அருந்தமிழ்மா லைகள்பாடி
அங்கு நின்றும்
புடைவளர்மென் கரும்பினோடு
பூகமிடை மழபாடி
போற்றச் சென்றார்,

என்றும், திருநாவுக்கரசரைப் பற்றிக் குறிப்பிடும் போது!

நீடியவப் பதியி னின்று
நெய்த்தான முதலாக
மாடுயர்தா னம்பணிந்து
மழபாடி யாரை வணங்கிப்
பாடியசெ ந்தமிழ்மாலைப்
பகர்ந்துபணி செய்து
போற்றித்
தேடியமா லுக்கரியார்
திருப்பூந்துருத்தியைச் சேர்ந்தார்

என்றும் பாடியுள்ளார்.

இத் தலத்தைப்பற்றி ஒட்டக்கூத்தரும் புகழேந்தி யாரும் பாடியுள்ளதாகக் கூட கூறப்படுவது உண்டு. சோழ அரசன் அவர்களை அழைத்து, நெய்யாடியப்பரின் மீது சந்த விருத்தமாகச் செய்யுள் அமைத்துத் தருமாறு கேட்டுக் கொண்டானாம்.

அருணகிரியார் ஏழூர்களையும் சேர்த்து, திருவின் மாமரமார் பழனப்பதி (திருப்பழனம்) செழு சோறவையா ளுறைப்பதி (திருச்சோற்றுத்துறை) திகழுநான்மறை தேடிய முற்பதி (திருவேதிக்குடி) விதியாதி சிரமுமாறில வீழ்தரு மெய்ப்பதி (திருக்கண்டியூர்) பதுமநாயகன்வாழ்பதி (திருப் பூந்துருத்தி) நெய்ப்பதி (திருநெய்த்தானம்) திருவையா ருடன் எழுந்தருளிய பெருமாளே என்று பாடியிருக்கிறார்.

நெய்யாடியப்பர் கோயிலுக்கு வடக்கே, அந்தணர் வீதி யிருக்கிறது. அதன் மேற்குக் கோடியில் உள்ள கோயிலில் ஸ்ரீ நிவாசப் பெருமாள் அலர்மேலுமங்கைத் தாயாருடன் எழுந்தருளியுள்ளார், பல வருடங்களுக்கு முன் தில்லை ஸ்தான அக்கிரகாரம் சற்று வடக்கேயுள்ள திருப்பெரும் புலியூரில் இருந்ததாகவும், காவேரிக்கரையில் வசிக்க வேண்டும் என்று விரும்பியவர்கள், இங்கு ஓர் அக்கிரகாரத்தை அமைத்துக் கொண்டு குடிபெயர்ந்த போது இப்பெருமாள் கோயிலைக் கட்டினார்களாம்.

வடக்குப்புறத்தில் வில்வவரம் ஒன்றிருக்கிறது. சந்நிதிக்குத் தெற்குபுறத்தில் சக்கரத்தாழ்வார் இருக்கி றார். ஆஞ்சநேயர் ஸ்ரீராம பட்டாபிஷேகத்திற்குத் தீர்த்தம் கொண்டுவருவது போல் தோற்றமளிக்கிறார். கோயிலடி அப்பக்குடத்தான் பெருமானின் அபிமான ஸ்தலம் இது.

தில்லைஸ்தானம் சாதாரண நாட்களில் ஓர் அமைதி யான கிராமமாகத்தான் இருக்கும். அத்தலத்தின் முழு சிறப்பும் வைபவமும் சப்தஸ்தானத்தின் போதுதான் ஒளி

விட்டுப் பிரகாசிக்கின்றன. காவிரியாற்றில் பல்லக்குகள் வந்து இறங்குவதும். வாண வேடிக்கைகளும், காவிரிக்கரையில் கடைவீதி ஒன்று திடீரென்று முளைத்து, மக்கள் வெள்ளம் கரைபுரண்டோடுவதும், நெய்யாடியப்பரின் எழில்மிகு பல்லக்கு விடியற் காலையில் காவிரிப்படுகையில் இறங்கும் நிகழ்ச்சியும் என்றுமே மனத்தை விட்டகலா கவின்மிகுக் காட்சிகளாகும்.

தில்லைஸ்தானத்திலிருந்து ஒன்றரைமைல் வடக்கே காவிரிக்கும் கொள்ளிடத்திற்குமிடையே ஓர் அமைதியான கிராமம் இருக்கிறது. ஒரு காலத்தில் அங்கு மாமுனிவர்களும் தவசீலர்களும் வாழ்ந்திருக்கிறார்கள். ஆச்ரமங்களிலிருந்து வேத மந்திரங்கள் ஒலிக்க, யாக சாலையிலிருந்து புறப்பட்ட ஓமப் புகை வானை முட்டியது.

## திருப்பெரும்புலியூர்

புலிக்கால் முனிவரான வியாக்ரபாதர் சிவபெருமானையும் திருமாலையும் வழிபட்டு அருள் பெற்ற புனிதத் தலம் இது. அதனால், வியாக்ரபுரி என்ற பெயர் பெற்றது. புலியூர் என்ற தமிழ்ப் பெயரையும் கொண்டது. பெரும் பற்றப் புலியூரான சிதம்பரம், எருக்கம் புலியூர் என்ற இரஜேந்திரப்பட்டினம், ஓமாம் புலியூர், பாதிரிப்புலியூர் போன்ற மற்றைய தலங்களிலிருந்து பிரித்துக் காட்டுவதற்காக, இத்தலத்தைப் பெரும்புலியூர் என்றழைத்தனர்.

இங்குள்ள சிவன் கோயிலில் உறைபவர்! புலியூர்நாதர்; அம்பிகை அழகம்மை. வியாக்ரபுரீச்வரர் என்றும் சௌந்தர்ய நாயகி என்றும் அழைக்கப்படுகிறார்கள்.

நறைவளரும் பொழிற்காழி நற்றமிழ் ஞானசம்பந்தரின் ஒரு பதிகத்தைப் பெற்ற பேறு இத் தலத்திற்கு உண்டு 'பெரும் புலியூர் பிரியார்' என்று பிரியத்துடன் விளிக்கிறார் சம்பந்தப் பெருமான். சுவாமி எப்படிப்பட்டவர்?

பெண்ணுமோர் பாகம் உடையார். பீடலிலையம் உடையார், பீடுடையார் பெருமானார், பிறவியறுக்கும் பிரானார், நூற்றுப்பத்தாய பேருடையார், அருள் செயும் ஆதி முதல்வர், நெடுமாலும் கடிமலரண்ணலும் காணாப் பெருமையுடைப் பெருமானார் என்று பலவாறாக போற்றிப் புகழ்கிறார். பிறைவளரும் முடிச்சென்னிப் பெரும் புலியூர்ப் பெருமானைப் பாடி வழிபடுபவர், 'தந்துயர் நீங்கி, நிறை வளர் நெஞ்சினராகி நீடுலகத் திருப்பாரே, என்று இறுதியாக உறுதியுடன் ஆசி வழங்குகிறார்.

சிறிய கோயிலானாலும், ஜீவகளையோடு திகழ்கிறது. சிற்ப நுணுக்கங்கள் நிறைந்த கமலபீடம் கொண்ட கருவறை விமானம் அழகுறத் திகழ்கிறது.

திருப்பெரும்புலியூர் ஒரு வைணவத்தலமுமாகும். நூற்றெட்டுத் திவ்விய தேசங்களில் இது இடம்பெறவில்லையாயினும், திருமழிசை ஆழ்வார் இங்கு வருகை தந்து, எம்பிரான் மீது ஈடிணையற்ற ஒரு பாசுரமும் பாடியிருக்கிறார். அதனால் இதுவும் ஒரு திவ்விய தேசமாகவே பெரியோர்களால் போற்றப்பட்டு வருகிறது.

இங்கு, ஸ்ரீ சுந்தரராஜன் என்ற அழகரசன், சுந்தரவல்லித் தாயார் என்ற அழகம்மையோடு எழுந்தருளியுள்ளார்.

ஒரு சமயம் வியாக்ரபாதர், எம்பெருமானைக் குறித்துத்தவமிருந்தார். அந்நற்றவத்திற்கு இரங்கி, நேரில் காட்சி தந்த திருமால், "எமது சுதர்சனம் என்ற சக்கரத்தாழ்வானைச் சுழற்றி விடுவேன். அது பூமியில் இறங்கி எங்கு தங்குகிறதோ, அங்கு நான் தோன்றுவேன், அப்போது முனிவர்கள் யாகம் முதலியவற்றைச் செய்து தங்கள் மனோ

ரதங்களைப் பூர்த்தி செய்து கொள்ளலாம்'' என்று மொழிந்து திருவாழியைச் சுழற்றி விட்டார். அது, காவேரிக்கும் கொள்ளிடத்திற்கும் இடையேயுள்ள இப் பகுதியில் வந்து தங்கியது. அந்த நாள் சித்திரா பௌர்ணமி. அன்று ஸ்ரீ சுந்தரராஜப் பெருமாள் சுந்தரவல்லி நாச்சியாருடன் இங்கு திருக்கோயில் கொண்டார். அதனால் திருப்பெரும் புலியூருக்கு 'சுதர்சனபுரீ' என்ற பெயரும் ஏற்பட்டது. கோயிலுக்கு முன்புறம், 'சுதர்சனம்' என்ற சக்கரத்தாழ்வார் சிலை வடிவில் எழுந்தருளியிருப்பதைக் காணலாம். ஸ்ரீ சுதர்சனாழ்வாரின் அம்சமாக அவதரித்த திருமழிசை ஆழ்வார், இத் தலத்திற்கு எழுந்தருளி, எல்லோரும் அறிய சேவை சாதிக்கும்படி பெருமாளைக் குறித்துப் பாசுரம் பாடிய இடத்தில்தான் சக்கரத்தாழ்வார் திருச்சந்நிதி கொண்டிருக்கிறார் என்றும் நம்பப்படுகிறது. புராணக் கதையைக் கேட்போம் :

திருமழிசை ஆழ்வார் திருவரங்கத்து நாதனைத் தரிசித்து விட்டு, பெரும்புலியூருக்கு வருகை தந்தபோது, மௌன விரதம் மேற்கொண்டிருந்தார். அவர் ஸ்ரீ சுந்தரராஜனைச் சேவிக்கச் செல்லும் வழியில், திண்ணையில் வேதம் ஓதிக் கொண்டிருந்த சிலர், ஊர் பேர் தெரியாத வேற்று மனிதரின் காதில் வேத ஒலி விழக்கூடாது என்று பாராயணத்தை நிறுத்தி விட்டனர்.

இதைக் கண்டு மனம் வருந்தாமல், அவர்களது மடமையைக் குறித்துப் பரிதாபப்பட்டவாறே நடந்து கொண்டிருந்தார் திருமழிசைப் பிரான். வேதபாராயணக்காரர்கள் விட்ட இடத்திலிருந்து ஓதத் தொடங்க நினைத்தனர். ஆனால், முடியவில்லை. எங்கு நிறுத்தினோம் என்பது அவர்களுக்கு மறந்து விட்டது. இதை அறிந்த ஆழ்வார் பூமியிலிருந்து ஒரு கறுப்பு நெல்லை எடுத்துக் கிள்ளி உரித்துக் காட்டினார். 'க்ருஷ்ணானாம் வ்ரீஹீணாம் நகநிர்ப் பின்னம்' என்ற இடமே அவர்கள் தொடர வேண்டிய பகுதியாகும்

என்பதை அவர் செய்கையாலேயே காட்டி விட்டார். பின்னரே, அந்த அந்தணர்கள் தங்கள் ஊருக்கு வந்திருப்பவர் ஒரு மகான் என்று புரிந்து கொண்டு அவரது திருவடிகளில் விழுந்து வணங்கி மன்னிப்புக் கோரினர்.

பக்திசாரர் என்ற திருமழிசைப்பிரான் ஆலயத்திற்குள் செல்கிறார். கருவறையை வலம் வருகிறார். அப்போது உள்ளிருக்கும் ஸ்ரீ சுந்தரராஜப் பெருமாள், ஆழ்வார் செல்லும் திக்குகளிலெல்லாம் தன் திருமுகத்தைத் திருப்பிச் சேவைசாதித்துக் கொண்டிருந்தார். மெய்சிலிர்க்கும் இந்த அற்புதக் காட்சியைக் கண்ட ஹரிபாதர் என்ற ஆலய திருவாராதனக்காரர், அவ்வூரில் வாழ்ந்த பெரும்புலியூர் அடிகளிடம் இச் செய்தியைச் சொல்ல, அவர் ஓடோடியும் வந்து ஆழ்வாரை வணங்கி, அவருக்குப் பூஜை மரியாதை செய்யும் பொருட்டு யாகசாலைக்கு அழைத்துச் சென்றார், அவ்வூரிலுள்ள சிலர் இதை எதிர்த்தார்கள். ஆழ்வாரை இழித்தும் பழித்தும் பேசினார்கள். இதைக் கண்ட ஆழ்வார் மௌனத்தைக் கலைத்து எம்பெருமானுடைய கருணையையும் எளிமையையும் யாவரும் அறியச் செய்ய வேண்டும் என்று முடிவு செய்தார். அச்சமயம் பக்தியுள்ளத்திலிருந்து ஓர் அபூர்வ பாசுரம் பிறக்கிறது.

'அக்கரங்கள் அக்கரங்கள் என்றும்
ஆவதென் கொலோ
இக்குறும்பை நீக்கி என்னை
ஈசனாக்க வல்லையேல்
சக்கரங்கொள் கையனே சடங்கர்
வாயடங்கிட
உட்கிடந்த வண்ணமே புறம்
பொசிந்துகாட்டிடே'

இதைக் கேட்டதும், 'தம்மை உகப்பாரைத் தாம் உகப்பார்' என்ற பெருமை கொண்ட எம்பெருமான், பாற்கடலில் அரவணையின்மீது கண் வளரும் திருக்கோலத்தை ஆழ்வா

ரின் திருமேனியின் மீது காட்டியருளினார். அதைக் கண்ட பின்னரே அந்த அஞ்ஞானிகள் அவர் மகிமை அறிந்து, மகானின் பொன்னடிகளில் சரணடைந்தனர்.

ஒரு சமயம் சூரிய பகவான், பக்தவத்சலனைச் சரணடைந்து, தினமும் கோடிக் கணக்கான பாபிகளின் மீது தனது கிரணங்கள் படுவதால் தனக்கு ஏற்படும் பாவத்தை போக்கி அருளும்படி பிரார்த்தித்தானாம். அப்போது சுவாமி; திருப்பெரும்புலியூரில் வருடம் இருமுறை தன் திருவடிகளைத் தழுவி வழிபடுமாறு சூரியனுக்கு அருட் கட்டளையிட்டாராம்.

ஸ்ரீ சுந்தராஜப் பெருமாள் மேற்குத் திசை நோக்கி எழுந்தருளியுள்ளார். அதனால் உத்ராயணம், தட்சிணாயணம் காலங்களில் ஒவ்வொரு நாள் அஸ்தமன சூரியனின் பொற்கிரணங்கள் பெருமாளின் திருவடிகளின் மீது படிந்து தவழ்ந்து புரளுகிறது. இன்றும் நடைபெறும் இந்த சூரிய தரிசனம் மகா பாவங்களைப் போக்கவல்லது என்று கூறுகிறார்கள். அத்தினங்கள் எவையெவை என்று ஆலய பட்டரைக் கேட்டு தெரிந்து கொள்ள வேண்டும். கோயிலுக்குக் கிழக்கே சூரிய புஷ்கரணி என்ற திருக்குளமும் இருக்கிறது.

ஒரு மாடக் கோயிலின் அமைப்பாக இருக்கும் இச்சிறிய கோயில் லட்சணமாக இருக்கிறது. கோயிலுக்குள் நுழைந்ததும் பெரிய திருவடியையும், அவருக்கு வடக்கில் சிறிய திருவடியையும் தரிசிக்கிறோம்.

ராஜகோபுரத்திற்குள் நுழைந்ததும், தென்புறம் வரிசையாக ஸ்ரீ அனந்தன், ஸ்ரீ ஆண்டாள், ஸ்ரீ கோவிந்தராஜன் திருச்சந்நிதிகள் உள்ளன. வடப்புறம். நாச்சியார் ஸ்ரீசுந்தரவல்லித் தாயார் பத்மாசனத்தில் அமர்ந்து மந்தஹாசத்துடன் சேவையளிக்கிறாள். காஞ்சியில் ஸ்ரீபெருந்தேவி தாயார் ஸ்ரீவரதராஜனைக் கடாட்சித்துக் கொண்டு அமர்ந்

திருப்புது போன்றே, இங்கும் தாயார் பெருமாளை நோக்கியவாறு திருச்சந்நிதி கொண்டிருக்கிறாள். தெற்குச் சுற்றில் ஆழ்வார்கள் சந்நிதியும் ஸ்ரீ தேசிகனது சந்நிதியும் இருக்கின்றன மகாமண்டத்தின் வடக்குப் பக்கத்தில் யோகநரசிம்மர் எழுந்தருளியுள்ளார். கருவறையில். மூலவர் ஸ்ரீ சுந்தரராஜன். உபயநாச்சியார்களுடன் நின்ற திருக்கோலத்தில் ஒப்பாரும் மிக்காருமின்றி கருணாகடாட்சத்துடனும் அடியார்களுக்கு அபயமளிக்கும் திருமேனி யெழிலுட னும் காட்சியளித்துக் கெண்டிருக்கிறார்.

முடிச்சோதியாய் உனது முகச்சோதி மலர்ந்ததுவோ
அடிச்சோதி நீ நின்ற தாமரையாய் அலர்ந்ததுவோ
படிச்சோதி ஆடையொடும் பல்கனலாய்
நின்பைம்பொன்
கடிச்சோதி கலந்ததுவோ! திருமாேல! கட்டுரையே!'

என்று உள்ளம் கசிந்து, கண் கரைந்து, திருவடி முதல் திருமுடிவரை தரிசித்துப் பேறு பெறுவோம்.

## விளாங்குடி

ஐயாறப்பர் ஆலயத்தில் நடைபெறும் சித்திரைத் திருவிழாவின் போது, ஐந்தாம் திருநாள், சுவாமி தன்னைத் தான் பூஜிக்கும் விழா நடைபெறுவதைக் குறித்து முன்பே படித்திருந்தோம். அதன் புராண வரலாற்றையும் ஆராய்ந்தோம். சுவாமி, காசியம்பதியிலிருந்து திரும்பிய அர்ச்சகர் போல் உருமாறி. ஓடத்தில் வந்து இறங்கிய இடம் கொள்ளிடக் கரையிலுள்ள விளாங்குடி என்ற திருத்தலம் என்பதையும் அப்போது கண்டோம்.

ஆபத்தில் வந்து உதவிய பெருமானான ஸ்ரீ ஆபத்சகாயர் உறையும் தலமான விளாங்குடி, திருவையாறுக்கு வடக்கே ஒரு மைலில் உள்ளது. அங்கு இருக்கும் ஸ்ரீ தர்மாம்

பிகை உடனுறை ஸ்ரீ ஆபத்சகாயர் கோயில் சிறியதுதான். ஒரே பிராகாரம் கொண்டது தான். மேற்குப் பிராகாரத்தில் பிள்ளையார், சுப்ரமணியர் சந்நிதிகள் உள்ளன. கோஷ்ட துர்க்கையம்மன், அமர்ந்த திருக்கோலத்துடன் அருள் பாலிக்கிறாள். கிழக்குப் பிராகாரத்தில் சூரியன், பைரவர், நந்தி முதலியோர் எழுந்தருளியுள்ளனர். மண்டபத்தின் கிழக்குப்புறம் நவகோள்கள் சந்நிதியும் உண்டு. திருவை யாறு புராணத்துடன் தொடர்புடைய இக்கோயிலை இப்போது இருப்பதைவிட சீரும் சிறப்போடும் வைத்திருக் கக்கூடாதா என்று எண்ணத் தோன்றுகிறது. ஐயாறப்பர் ஆலயத்தில் இக்கோயிலைப் பற்றிய தல விளக்கம் தந்து, அது இருக்கும் இடத்தையும் குறித்து போர்டு ஒன்று எழுதி வைத்தால் அங்கு சென்று தரிசிக்க பக்தர்களுக்கு உதவியாயிருக்கும் என்று தோன்றுகிறது.

## திருமழப்பாடி

விளாங்குடியிலிருந்து வடமேற்கே ஐந்து கிலோ மீட்டர் சென்றால், திருமழபாடி என்ற சிற்றூரை அடைய லாம். ஐயாறப்பர், நந்தியம்பெருமானுக்கு சுயசை (சுய சாம்பிகை) என்ற மங்கையைத் திருமணம் செய்து வைத்தது அந்த ஊரில்தான். அந்தத் திருமண விழா இன்றும் பங்குனி புனர்வசு நட்சத்திரத்தன்று திருமழபாடி கோயிலில் கோலாகல விழாவாக நடைபெறுகிறது. முதன் முதலில் நான் திருவையாறு ஆலயத்திற்குச் சென்றிருந்த நாளன்று, கல்யாணம் முடிந்து அனைவரும் கட்டுச்சாதக் கூடையுடன் திரும்பியிருந்த ஆனந்த அலுப்போடு காணப் பட்டனர். பல்லக்கைச் சுமந்து வந்த அன்பர்கள், நூற்றுக் கால் மண்டபத்தில் ஆளுக்கு ஒரு மூலையில் மிகவும் அசதி யாகப் படுத்து உறங்கிக் கொண்டிருந்த காட்சி, கல்யாணம் முடிந்த மறுநாள் நம் வீடுகளில் காணப்படும் சூழ்நிலையை நினைவுபடுத்தியது.

திருமழபாடி கோயிலின் ராஜகோபுரத்தின் வனப்பும் கம்பீரமும் நம்மைக் கவர்ந்திழுக்கின்றன. எதிரில் கொள்ளிடம் உத்தரவாகினியாக ஓடுகிறது. நதிக்கரையிலிருந்து இந்தக் கோபுரத்தைத் தரிசனம் செய்யும்போது உண்மையிலேயே கோடி புண்ணியம் கிடைக்கும் என்ற உறுதி ஏற்படுகிறது. இங்கு உறையும் சிவபெருமான், எதிர்க்கரையில் மேற்கே பார்த்து எழுந்தருளியிருக்கும் திருப்பெரும்புலியூர் ஸ்ரீசுந்தரராஜப் பெருமானைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்.

இறைவனின் மழு ஆயுதம் நர்த்தனம் ஆடிய தலமாதலால் இது மழுவாடி ஆகி, பின்னர் மழவாடியாக மருவியதாக ஒரு செய்தி காதில் விழுகிறது. 'இல்லை இல்லை, சேர வம்சத்தின் கிளையினராகிய மழவர்கள் பாடி (பாசறை) அமைத்துக் கொண்டு இங்கு வாழ்ந்ததால் இப்பெயர் ஏற்பட்டது' என்ற செய்தியையும் கேட்டுக் கொள்கிறோம்.

பிரம்ம லோகத்திலிருந்த சிவலிங்கத்தைப் புருஷா மிருகம் பெயர்த்துக் கொண்டு வந்து இங்கு பிரதிஷ்டை செய்து விட்டது. பிரம்மதேவருக்கு இதில் உடன்பாடில்லை. ஆத்திரம் மிகக் கொண்டு இத்தலத்திற்கு வந்து, அதைப் பெயர்த்து எடுத்துப் போவதற்காக அரும்பாடுபட்டார். எத்தனை முயன்றும் அவரால் பெயர்க்க முடியவில்லை. 'இது என்ன வயிரத் தூணோ' என்று வியந்து அப்படியே அசந்து நின்று விட்டாராம். 'காச்சி லாத பொன் னோக்குங்க னவயிரத் திரள்' என்று ஞானசம்பந்தப் பெருமானும் 'மழபாடி வயிரத் தூணே' என்று அப்பர் பெருமானும் பாடிப் பரவசப்படுகின்றனர்.

இந்திரனும் திருமாலும் வழிபட்ட தலம். சமயக்குரவர் மூவர் பாடலும் பெற்ற பொன்னான தலம். சுந்தரர் திருவாலம்பொழிலில் தங்கியிருந்த போது, இறைவர் கனவில் தோன்றி 'மழபாடிக்கு வர மறந்தனையோ?'

என்று வினவியதையும், அவர் 'பொன்னார் மேனியனே' என்ற பதிகம் பாடி மழபாடி இறைவனை வழிபட்ட வரலாற்றையும் முன்பே கண்டோம்.

அழகிய ராஜகோபுரத்தைக் கடந்து சென்று, கொடி மரத்தையும் நந்தி மண்டபத்தையும் தரிசித்துக் கொண்டு, இரண்டாவது கோபுரத்தை அண்ணாந்து பார்த்து வியக்கிறோம். சிற்பக் கலையழகுடனும், களை பொருந்திய பொலிவுடனும் நம்மை 'வா, வா' என்று ஆதரவோடு அழைக்கிறது அது.

உள் பிராகாரத்தில் சூரியன், சந்திரன், பைரவர், விநாயகர், வள்ளிதெய்வானையுடன் சுப்ரமணியர் சந்நிதிகள் உள்ளன. அடுத்துள்ள மண்டபத்தில் மேற்குப் பார்த்து சிவசூரியனும், வடக்கு நோக்கி சப்த கன்னிகைகளும் எழுந்தருளியுள்ளனர்—சுற்றிலும் பழங்கால கட்டடக் கலைக்கும் கலைப் பண்புக்கும் கட்டியம் கூறிக் கொண்டு காட்சி தரும் திருமாளிகைப் பத்தியைக் காண்கிறோம். அப்பர் அருள் நெறி மன்றத்தார், திருமழபாடி தேவாரப் பாசுரங்களைக் கற்பலகைகளில் வடித்து வைத்திருப்பதைக் கண்டு ஆனந்தப்படுகிறோம்.

இத்தலத்திலுள்ள விநாயகருக்குப் 'பிரளயம் காத்த விநாயகர்' என்றும் 'சுந்தர விநாயகர்' என்றும் பெயர்கள் உண்டு. கொள்ளிடம் பெருகி வந்தபோது 'அப்பால் போ' என்றாராம் இவர். வெள்ளமும் தணிந்து கொள்ளிட நதி பின்வாங்கியதாம்.

மேற்குப் பிராகாரத்தில் உள்ள சோமாஸ்கந்தமூர்த்தி, ஒரே கல்லில் வடிக்கப்பட்ட கண்கவர் வடிவம். அபூர்வமானது. அடுத்து ஸ்ரீசுப்ரமணிய சுவாமி சந்நிதி. எதிரில் மயில், பலி பீடங்கள் இருக்கின்றன. அதற்கடுத்து காசி விச்வநாதர்-விசாலாட்சி. நந்தியம் பெருமானும் அமர்ந்திருக்கிறார். கைலாசநாதர், திருமால், கஜலட்சுமி,

ஐயாறப்பர், சரஸ்வதி, பரவை நாச்சியாருடன் சுந்தர மூர்த்தி சுவாமிகள்—அனைவரையும் உளமாரக் கண்டு ஆனந்திக்கிறோம்.

தென்புறமுள்ள திருமாளிகைப் பத்தியில் பலப்பல வடிவங்கள் இருக்கக் காண்கிறோம். இத்தனை தெய்வச் சிற்பங்களை ஒருசேர ஒரே கோயிலில் தரிசிப்பது பெரும் பாக்கியம்தான். மீனாட்சியம்மையுடன் சொக்கநாதர்—காத்தியாயினி, சப்த ஸ்தான லிங்கங்கள், சச்சிதானந்த, வீரசக்தி மூர்த்தங்கள், பாணலிங்கங்கள், நாகர்கள், அன்ன பூரணி, வசிஷ்டர், அகஸ்தியர், கௌதமர், பராசரர், துர்வாசர், பைரவர், சூரியன்... அடேயப்பா...! பார்த்து மாளாது போலிருக்கிறதே!

உள் மண்டபத்தில் கஜசம்ஹார மூர்த்தியும், சிவதுர்க்கையும் எழுந்தருளியுள்ளனர். அங்கு சிற்றம் பலத்தில் நடன சபாபதியையும் தரிசித்துப் பேரின்பம் எய்துகிறோம். சித்சபை மண்டபத்தில் வாலாம்பிகையும் அருள் புரியக் காத்திருக்கிறாள்.

சுவாமியை வைத்தியநாதர் என்றும் அழைக்கிறார்கள். வைகாசி விசாகத்தில் மார்க்கண்டேயருக்குத் தரிசனம் தந்தருளியதால் இறைவருக்கு மார்க்கண்டேயர் என்ற பெயரும் உண்டு. நாற்பது ஆண்டுகளுக்கு ஒரு முறை எண்ணெய்க்காப்பு நீக்கப்படும்போது, சுவாமி வைரம் போன்று ஒளி வீசுவதைக் காணலாம் என்கிறார்கள்.

கருவறைக்கு முன்னால் பெரிய துவாரபாலகர்கள் காட்சி தருகிறார்கள். கருவறையை வலம் வரும்போது, கோமுகத்தைச் சுற்றிலும் நான்கு நந்திகள் இருப்பதைக் கண்டு அதிசயிக்கிறோம்.

தென்புறம், சௌந்தரியநாயகி என்ற அழகம்மை தனிக்கோயில் கொண்டிருக்கிறாள். எதிரில் திருக்குளம் ஒன்றிருக்கிறது.

திருமழபாடியில் நந்தியப்பெருமானுக்குத் திருமணம் புரிந்துவிட்டு ஐயாறப்பரும் அறம் வளர்த்த நாயகியும், புது மணத் தம்பதியை அழைத்துக் கொண்டு ஆறு ஊர் களுக்குச் சென்று அங்குள்ள முனிவர்களுக்கும் பெருமான் களுக்கும் அவர்களை அறிமுகம் செய்து வைக்கும் விழா தான் சப்தஸ்தான விழா என்று முன்பு கண்டோம். திருமழ பாடி வந்ததும் மற்றொரு செய்தியும் காதில் விழுகிறது.

திருமணத்திற்கு திருப்பழனத்தப் பெருமான் பழவகை களையும், திருச்சோற்றுத்துறை பெருமான் அரிசியையும், திருவேதிக்குடி பெருமான் வேதியர்களையும், கண்டியூர் பெருமான் மகர கண்டிகை முதலிய அணிகலன்களையும், திருப்பூந்துருத்தி பெருமான் மலர் மாலைகளையும், நெய் யாடியப்பர் நெய்யையும் அனுப்பி வைத்தனராம். அவற் றுக்கு நன்றி சொல்லும் பொருட்டே இவ்வூர்களை ஐயாறப்பர் சுற்றி வந்தாராம்!

கற்பனையில்தான் எத்தகைய கவிநயம்!

திருமழபாடி, திருமானூரிலிருந்து தென் மேற்கில் எட்டு கிலோ மீட்டர் தொலைவிலும், அரியலூரிலிருந்து தெற்கில் இருபத்தெட்டு கிலோ மீட்டர் தொலைவிலும், லால்குடியி லிருந்து கிழக்கில் முப்பத்திரண்டு கிலோ மீட்டர் தொலை விலுமுள்ளது. பஸ் வசதி உண்டு.

நாகசுரத்திற்கு மங்கள வாத்தியம் என்று பெயர். அது கோயிலில் பிறந்து, தெய்வ ஆராதனையில் வளர்ந்து, உற்ச வங்களால் புகழ் பெற்றது. பின்னர் அது திருமணங்களில் இடம் பெற்றது. தற்போது, கச்சேரி மேடைகளிலும், வானொலியிலும், தொலைக்காட்சியிலும் வெளிநாடு களிலும் கொடி கட்டிப் பறக்கிறது.

அந்தக் காலத்தில், கோயில் உற்சவங்களில் பிரபலமான வர்களின் 'மேளம்' இருக்கும். அதைக் கேட்க சுற்று வட்டார ஊர்களிலிருந்தெல்லாம் கூட்டம் கூட்டமாக வருவார்கள். விடிய விடிய நாகசுர இசை வெள்ளம் பாயும். அதில் ரசிகர்கள் மூழ்கித் திளைப்பார்கள்.

நாளடைவில் பல பெரிய உற்சவங்கள் நின்று போய் விட்டன. நடைபெற்று வரும் உற்சவங்களிலும் பண்டையச் சிறப்புக்கள் காணப்படவில்லை. முக்கியமாக நாகசுரம் பெற்றிருந்த சிறப்பிடம் மங்கி, மறைந்து வருகிறது. ஆலய வழிபாடு குறைந்ததால் பல ஆலயங்களின் வளம் குறையது; அதன் காரணமாக உற்சவங்களில் ஆர்வம் குறைந்தது; அதனால் தெய்வீகக் கலைகள் ஆதரவு இழந்தன.

மறந்து, மறைந்து போய்க் கொண்டிருந்த சிற்பக் கலை தற்போது புத்துயிர் பெற்று வருவது எதனால்? மக்க ளிடையே நம் ஆலயங்களைப் பாதுகாக்க வேண்டும் என்ற விழிப்பு உணர்ச்சி ஏற்பட்டுள்ளதுதான் காரணம். பாழடைந்துள்ள ஆலயங்களைப் புதுப்பிக்க வேண்டும், புது ஆலயங்கள் நிர்மாணிக்க வேண்டும் என்ற வேட்கையின் காரணமாகப் பக்தர்கள் சிற்பிகளைத் தேடிக் கொண்டு செல்கிறார்கள். பரண் மீது கிடந்த சிற்ப சாஸ்திர நூல்கள், தூசி தும்பு தட்டப்பட்டுக் கீழே இறங்கிக் கொண்டிருக் கின்றன. ஆதரவு கிடைக்கிறது என்று தெரிந்ததும், ஊதியம் கிடைப்பது உறுதியானதும், சிற்பக் கலைஞர் களின் தெய்வப்பணி சிறக்கத் தொடங்கியிருக்கிறது. ஆலயத் திருப்பணிகளுக்காகக் கடல் கடந்த நாடுகளுக்குச் செல்லும் அளவுக்கு அவர்களுக்குத் தற்போது கிராக்கி ஏற்பட்டிருக்கிறது. ஆலய வழிபாடு பெருகப் பெருக, கலை வளருகிறது; அதை நம்பி வாழும் சமூகம் பயனடைகிறது.

சிற்பக் கலையைப் போன்றே, நாகசுரக் கலையும் முன்பிருந்த உன்னத நிலையை அடைய வேண்டும்.

அதற்கான ஆதரவு, ஆலயத்தில், தெய்வ சந்நிதியில் தொடங்கப்பட வேண்டும். தக்க ஊதியம் தந்து, தேர்ந்த நாகசுரக் கலைஞர்களின் சேவையைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். ஆராதிக்கும் அர்ச்சகர்களையும், தெய்வப் பணி புரியும் கலைஞர்களையும், இதர ஊழியர் களையும் பட்டினி போட்டால், ஆலயத்தில் உறையும் தெய்வங்களின் மனம் நோகாதா? அண்டியிருப்பவர்களை அலட்சியப்படுத்தி விட்டு, ஆண்டவனுக்கு மட்டும் தேனும் பாலும் அபிஷேகம் செய்து கொண்டிருந்தால் போதுமா?

இன்றும் கேரளத்தில் ஆலய வழிபாடு சிறக்கிறது என்றால், உற்சவங்கள் பண்டையச் சிறப்புக்களில் பாதியளவு சிறப்புடனாவது நடைபெற்று வருகிறது என்றால், அங்கு ஆலயத்தை நம்பி வாழும் அர்ச்சகர் களையும் வாத்தியக்காரர்களையும் இதர கலைஞர்களையும் அக்கறையோடு பேணிக் காத்து வருவதனால்தான். அன்றாட ஆராதனைகளில் அவரவர்கள் தங்களுக்கு உரிய பணிகளை எத்தனை ஈடுபாடுடனும், கடமை உணர்ச்சி யுடனும் ஆற்றுகிறார்கள் என்பதையும், அதற்கு அடிப் படைக் காரணம் என்ன என்பதனையும் நம் ஆலயங்களை நிர்வகிப்பவர்கள் நேரில் சென்று ஆராய்ந்து வருவது பயனுள்ளதாக இருக்கும்.

ஆலய தரிசன யாத்திரையின் போது மனத்துள் வழக்கமாக எழும் இத்தகைய எண்ணங்கள், வரகூர் உறியடி உற்சவத்திலிருந்து சென்னைக்குத் திரும்பி வரும் போது சற்று அழுத்தமும் தீவிரமும் பெற்றதை உணர்ந்தேன். புகழ் பெற்ற இந்த உற்சவத்தில், நல்லதொரு மேளத்தைக் கேட்கலாம் என்ற எண்ணத்துடன் சென்ற எனக்கு ஏற்பட்ட ஏமாற்றம்தான் இதற்குக் காரணம். திருவாவடுதுறையும், குழிக்கரையும், திருவீழிமிழலையும், வேதாரண்யமும், திருவெண்காடும், நீடாமங்கலமும், திருச்சேறையும், நாச்சியார் கோயிலும்

புகழ் சேர்த்த தஞ்சை மாவட்டத்தில், இப்படியோர் ஏமாற்றமா? நினைத்துப் பார்க்கவே முடியவில்லை.

அத்தனை பெரிய உற்சவம் முழுவதும், பாவம், வயதான இருவர் நாயனமும் தவிலும் 'வாசி'த்துக் கொண்டிருந்தது கேட்பதை விட பார்க்கக் கஷ்டமாயிருந்தது. அவர்களால் நடக்கக்கூட முடியவில்லை. நாயனக்காரர் சற்று ஓய்வு எடுத்துக் கொள்ள நினைத்தால், தம் வாத்தியத்தைத் தவில்காரரிடம் ஒப்படைத்து விட்டுப் போய் விடுவார். தவில்காரர், தவிலை ஒரு சிறு பையனிடம் தந்துவிட்டு, அந்த நாயனத்தில் அவ்வப்போது ஏதோ ஓர் ஒலியை எழுப்பி விட்டு, 'எப்போ வருவாரோ?' என்று நாயனக்காரர் சென்ற திசையையே பரிதாபமாகப் பார்த்துக் கொண்டிருப்பார்!

உறியடி உற்சவத்தில் எல்லாமே பரம்பரை உரிமைப்படி நடைபெறுவது போல், நாகசுர கைங்கரியம் செய்பவர்களும் மாற்றப்படக் கூடாதவர்களா?' இனியாவது உற்சவத்தின் போது பெரிய நாகசுர வித்வான்களை வரவழைப்பார்கள் என்று கருதுகிறேன். உள்ளூர் கலைஞர்களை அன்றாட ஆலய ஆராதனைக்குப் பயன்படுத்திக் கொள்வதில் தவறில்லை. அத்துடன் இளைய தலைமுறையொன்றை உருவாக்குவதும் ஆலய நிர்வாகிகளின் பொறுப்பாகும்.

## சிறுவாச்சூர்

சென்னை ஆடிட்டர் என். சி. கிருஷ்ணன் அவர்கள், சிறுவாச்சூரில் திருக்கோயில் கொண்டிருக்கும் மதுர காளியம்மனைப் பற்றி என்னிடம் ஒரு சமயம் பேசிக் கொண்டிருந்தார். அங்கு அப்படியொரு கோயில் இருப்

பதைப்பற்றி நான் அதுவரை கேள்விப் பட்டதில்லை. அப்பழைய கோயில் புதுப்பிக்கப்பட்டு, திருப்பணிகள் செய்யப்பட்டு, குடகுழுக்கும் நடைபெற்றிருப்பதாகக் கூறினார். பங்களூர் ஜி. ஏ. ராமசந்திர சாஸ்திரி, அம்மனுக்காக சமஸ்கிருதத்தில் சுப்ரபாதம் ஒன்று இயற்றியிருப்பதாகவும், அது லாங் பிளேயிங் ரிக்கார்டாக வெளி வந்திருப்பதாகவும், விரைவிலேயே அதிகார பூர்வமாக அதை வெளியிட திட்டம் ஒன்று இருப்பதாகவும் கூறி ஒரு ரிக்கார்டையும் அதன் காஸெட் வடிவத்தையும் எனக்கு அன்புடன் அளித்தார். திருமதி சீதா சுப்ரமணியம் நல்ல உச்சரிப்புடனும், பக்தி பாவத்துடனும் இனிமையாகவும் பாடியுள்ள மதுரமான சுப்ரபாதத்தைக் கேட்டதிலிருந்து என்னுள் மதுரகாளிகாம்பாளைத் தரிசிக்க வேண்டும் என்ற வேட்கை அதிகமாயிற்று.

திருமழப்பாடியிலிருந்து சென்னைக்குத் திரும்பும் வழியில் நாங்கள் சிறுவாச்சூரை நெருங்கியபோது மதியம் பன்னிரண்டு ஆகிவிட்டது. கோயில், திங்கட்கிழமைகளிலும் வெள்ளிக்கிழமைகளிலும் மட்டும்தான் திறந்திருக்கும் என்று கேள்விப் பட்டிருந்தேன். அதுவும் காலையில் திறக்கப் பட்டு, அபிஷேக அலங்கார ஆராதனைகள் முடிந்தசற்றைக்கெல்லாம் மூடி விடுவார்கள் என்றும் அறிந்திருந்தேன். அதனால் கோயில் இருக்குமிடத்தைத் தேடிக் கொண்டு சற்று வேகமாகவே சென்றோம்.

ஆலயத்தைக் கண்டு பிடிப்பது கடினமானதாக இருக்கவில்லை. திருச்சி-சென்னை நெடுஞ்சாலையில், பெரம்பலூர் திருப்பத்திற்கு நாலைந்து கிலோ மீட்டர் முன்பே, இடப்புறம், கோயில் இருக்கும் இடத்தை அடையாளம் காட்ட இரும்பாலான பெரிய வளைவு ஒன்று போட்டு வைத்திருக்கிறார்கள். அவ்வழியே நுழைந்து, ஒரு கிலோ மீட்டர் சென்று, அம்மன் ஆலயத்துக்கு வந்து சேர்ந்தோம்.

சிறிய கோயிலாக இருக்கும் என்று நினைத்து வந்த எனக்குப் பெரிய ஆச்சரியம் காத்திருந்தது. நுழையும் போதே இடப்புறத்தில் காணப்பட்ட பெரிய குளம், அக் கோயிலின் பண்டையப் பெருமையை ஓரளவு புரிய வைத்தது. அப்போது மழையின்மையால் வற்றிப் போயிருந் தாலும், அத் திருக்குளம் நீர் நிறைந்திருந்தால், எத்தகைய கண்கவர் காட்சியாக இருக்கும் என்று கற்பனை செய்யத் தூண்டியது.

வெளி மண்டபம் புதிதாக நிர்மாணிக்கப்பட்டிருப்பது போல் தோற்றமளித்தது. அம் மண்டபத்தைக் கடந்து உள்ளே சென்றால், பெரிய கருங்கல் மண்டபம். சேவார்த்தி கள் நிறைந்திருக்கிறார்கள். கருவறையில் திரை போடப் பட்டிருக்கிறது. உள்ளே அம்பாளுக்குப் பூஜை நடை பெற்றுக் கொண்டிருக்கிறது.

ஒலிபெருக்கியில், அதிகாரபூர்வமாக வெளியிடப்படாத இசைத்தட்டு, உச்சி வேளையில் சுப்ரபாத இன்னிசை பொழிந்து கொண்டிருக்கிறது...

ஹே உலக நாயகியே! உனது மகிமையை நான் எவ்வாறு உரைப்பேன்? தாயே! உனது கோயிலைத் திங்க ளன்றுதான் திறக்கிறார்கள். உடனே திருவிளக்கு ஏற்று கிறார்கள். மாலை கதவை மூடுகிறார்கள். மறுபடியும் வெள்ளிக்கிழமை திறக்கிறார்கள். திங்களன்று ஏற்றிய திருவிளக்கு வெள்ளி வரையில் பிரகாசித்துக்கொண்டே யிருக்கிறது. இந்த ஆச்சரியம் உனது மகிமையன்றோ! அது மட்டுமா? திங்களன்று சாத்திய சந்தனம், வாசனை மிகுந்த மலர் மாலை, உனது திருவடிகளில் அர்ச்சனை செய்யப்பட்ட வாசனை மலர்கள் யாவும் வெள்ளி வரையும் சிறிதுகூட வாடாமலும், வாசனை குறையாமலும், புதியவை போல இருக்கக் காண்கிறோமே, இவை யாவும் உனது மகிமையையல்லவா வெளியிடுகின்றன! இவ்வாறு சர்வ சக்தியுடன் விளங்கும் ஸ்ரீ மதுரகாளித் தாயே! உனக்கு இந்த மங்கள சுப்ரபாதம் உரித்தாகுக......

அன்னை ஆதி பராசக்தியே படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முப்பெரும் செயல்களின் அடிப்படைச் சக்தியாக விளங்குகிறாள். தீய சக்திகளை அழிக்கவும், நல்லவர்களைக் காக்கவும் அவ்வப்போது தேவையான வடிவங்களை அவள் ஏற்றுக் கொள்கிறாள். அவளே

துர்க்கையாகவும், லட்சுமியாகவும், சரஸ்வதியாகவும் திகழ்கிறாள். கருணை மாரி பொழியும்போது மாரியம்மனாகிறாள். கொடுமைகளை அழிக்கும்போது மாகாளியாக விளங்குகிறாள்.

காளியென்றால் அழிப்பவள் மட்டுமல்ல; அவள் அளிக்கவும் செய்கிறாள். கொடுமையை அழித்து, அறத்தைக் காக்கும் கருணையின் வடிவம் அவள். தாய், தவறு இழைக்கும் தன் குழந்தைகளைத் தண்டிப்பது அவளது எல்லையற்ற கருணையினாலன்றோ?

அந்தக் கருணையின் வடிவமாகத்தான் சிறுவாச்சூரில் ஜகன்மாதா அமர்ந்திருக்கிறாள். அடைக்கலம் அடைந்தவர்களுக்கு அபயம் அளித்து, அவர்களுக்கு வேண்டும் வரன்களை வாரி வாரி வழங்க, அவள் அபய, வர கரங்களுடன் வீராசனத்தில் அமர்ந்திருக்கிறாள். அஞ்ஞான இருளையகற்றத் தீப்பொறி பறக்கும் சூலாயுதத்தையும், ஆசாபாசங்களான பகைவர்களை வீழ்த்தப் பல்வேறு ஆயுதங்களையும் திருக்கரங்களில் ஏந்தியிருக்கிறாள். உதவி தேவையுள்ளவர்களைத் தேடிச் சென்று துயர் துடைக்க சிம்ம வாகனம் எப்போதும் அவளருகில் தயாராய்க் காத்துக் கொண்டிருக்கிறது.

இத் திருவடிவிற்கு அபிஷேகம் செய்து, வெகு நேர்த்தியாய் அலங்காரம் செய்திருக்கிறார் பிரதம பூசாரியான செங்கமல உடையார். கண்ணுக்கு விருந்தாகவும், கருத்தில் ஆழமாகப் பதியும் படியாகவும் அமைந்துள்ள அந்தக் காட்சியை வெகு அருகில் சென்று தரிசிக்க அனுமதிக்கிறார்கள். மாகாளியின் கண்கள் கருணையைப் பொழிகின்றன. அந்த அன்பும் ஆதரவும் பரிவும் கனிவும், நம்மைக் கொள்ளை கொள்ளுகின்றன. மகிஷாசுரனையும், சும்பனையும், நிசும்பனையும், ரக்தாக்ஷனையும், ரக்தஜிஹ்வனையும், ரக்தபீஜனையும், சண்டனையும், முண்டனையும் வீழ்த்திய சாமுண்டீச்வரி நம் பகை நீக்கி நம்மையும் நிச்சயம் காத்தருள்வாள் என்ற நம்பிக்கை பிறக்கிறது.

வெளியே திருப்பள்ளியெழுச்சி பாடல் ஒலிக்கிறது...

சிறுவாச்சூரில் விளங்கும் ஹே மதுரகாளிகாம்பிகையே! நான் உன்னையே சரணடைந்து உள்ளேன். உன்னைத் தவிர எனக்கு வேறு கதி இல்லை. நீயே எனது தாய்; நீயே எனது தகப்பன்; நீயே எனது சகோதரர்கள்; நீயே எனது பந்து; நீயே எனது குமாரி; நீயே எனது குமாரன்; எனது சர்வ சொத்துக்களும் நீதானம்மா. ஹே, சிறுவாச்சூர் மகாராணியே! பக்தர்களைக் காப்பாற்றுவதையே தொழிலாகக் கொண்டிருக்கும் கருணைக் கண்கள் படைத்தவளே! குடும்பத்துடன் உன்னைச் சரணடைந்த என்னை எக்காலமும் எந்நிலையிலும் காப்பாயாக. இதுவே உனக்கு மங்களமான சுப்ரபாதம், சுப்ரபாதம், சுப்ரபாதம். அருள் புரிவாயாக.

அன்று அம்மனுக்கு நிறைய மாவிளக்குப் பிரார்த்தனைகள் செலுத்தப்பட்டிருந்தன. வலம் வரும்போது கிழக்குப் பிராகாரத்தில் நிறைய பேர் உரலில் மாவு இடித்துக் கொண்டும் சலித்துக் கொண்டுமிருந்த காட்சி பார்க்கச் சற்றுப் புதுமையாக இருந்தது. வடகிழக்கு மூலையிலுள்ள அஷ்டலட்சுமி மண்டபம் பக்தர்கள் உண்ணவும் உறங்கவும் ஓய்வெடுத்துக் கொள்ளவும் சௌகரியமாயிருக்கிறது.

மேற்குப் பிராகாரத்திலுள்ள மேடையில் பல உருவச் சிலைகளும், வேல்களும், சூலங்களும் காணப்படுகின்றன. அது பெரிய சாமி மேடை. அங்கும் பக்தர்கள் தங்கள் காணிக்கைகளையும் பிரார்த்தனைகளையும் செலுத்து கிறார்கள். மேற்கே, சற்றுத் தொலைவில் தெரியும் மலைதான் பெரியசாமி மலை. இதேபோல் அங்கேயும் ஒரு பீடம் இருக்கிறதாம். அங்குள்ள சாமிகளைப் போன்றே இங்கும் பிரதிஷ்டை செய்துள்ளதாக அறிகிறோம்.

ஆலயத்திற்கு வடக்கே, வெளி மண்டபத்தை யொட்டினாற் போல் பாம்புப் புற்று ஒன்று காணப் படுகிறது. அது நாகர்கோயில். அதற்கும் வடக்கே ஐயனார் கோயில். அதற்கும் வடக்கே தனி மதிற்சுவருக்குள் சோலை முத்தசாமி, சோலைகன் அம்மாயி போன்ற தெய்வச் சிலைகள் இருக்கின்றன. சிறிய குதிரை மீது சோலை முத்துசாமி சவாரி செய்கிறார். அருகில் ஒரு முதியவர் பெரிய அளவில் வீரபத்திர சுவாமியின் களிமண் உருவச் சிலையைச் செய்து கொண்டிருந்தார். சிறுவன் ஒருவன் அவருக்கு உதவி புரிந்து கொண்டிருந்தான். நம்; பழங்

கலைகள் அனைத்தும் அடியோடு மறைந்து விடவில்லை. எங்கோ ஒரு மூலையில் அவை வாழ்ந்து கொண்டுதான் இருக்கின்றன. அங்குள்ள பழைய வேலைப்பாடுகள் அமைந்த செங்கல் குதிரைகள், காரை உதிர்ந்தும் உடைந்து போயும் இருப்பதைக் கண்டபோது, மனத்துக்கு மிகுந்த வேதனையாயிருந்தது.

சிதிலமடைந்திருந்த மதுர காளியம்மன் கோயிலுக்கு பராசக்தியின் கருணையால் நல்ல காலம் பிறந்தது. ஸ்ரீகாஞ்சிப் பெரியவரின் அருளாசியோடு, கருணையோடு அவர் அளித்த நூற்றியோரு ரூபாய் பணத்துடனும் திருப்பணியைத் தொடங்கினர். ஆடிட்டர் கிருஷ்ணனின் நன் முயற்சியாலும், பக்தர்களின் பேருதவியாலும் இடிந்த மண்டபங்கள் செப்பனிடப்பட்டு, புது மண்டபங்கள் கட்டப் பட்டு, பிராகாரங்கள் சீரமைக்கப் பெற்று, இதர வசதி களும் ஏற்படுத்தப்பட்டுக் குடமுழுக்கு நடைபெற்றது. அதன் தொடர்ச்சியாக, பெரியசாமி பீடமும், சோலை முத்துசாமி கோயிலும் பழுது பார்க்கப்பட வேண்டும். இறையுணர்வைக் காப்பதோடு, முடிந்த வரையில் புராதனக் கலைச் சின்னங்களைக் காப்பாற்றி வைக்க வேண்டியதும் நம் கடமையாகும்.

கண்ணகி வடிவில் மதுரை மாநகரை எரித்த காளி தேவியே மீண்டும் இங்கு எழுந்தருளியிருக்கிறாள் என்று கூறுவதும் உண்டு. அதனால் சிறுவாச்சூர் மதுர காளி யம்மன் தென் மதுரைக் காளியாகவும் விளங்குகிறாள்.

முன்பு செல்லியம்மன் சிறுவாச்சூரில் எழுந்தருளி யிருந்தாள். பக்தியால் அவளைத் தன் வயப்படுத்திய கொடியவன் ஒருவன், பில்லி சூன்ய மந்திரங்களைக் கையாண்டு பலரைக் கொன்று வீழ்த்திக் கொண்டிருந் தானாம். இதைக் கண்ட காளி, அனல் வடிவத்தவளாய் வந்து, தன் சகோதரியும் பெரிய ஆய்ச்சியுமான செல்லி யம்மனை அருகிலுள்ள பெரியசாமி மலைக்கு அனுப்பி விட்டு, சிறு ஆய்ச்சியாகத் தான் இங்கு அருளாட்சி செய்யத் தொடங்கினாள். சிறு ஆய்ச்சி ஆட்சி செலுத்தும் ஊர், சிறுவாச்சூர் ஆயிற்று.

முந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு, ஸ்ரீ சதாசிவப் பிரம் மேந்திர சுவாமிகள் மூல விக்ரகத்திற்கு ஸ்ரீ சக்ர ஸ்தாபனம் செய்து, அபிஷேக ஆராதனைகள் செய்து வழிபட்டிருக் கிறார். திருக்குளத்தின் மத்தியிலுள்ள தீர்த்தக் கிணறு

தோன்றுவதற்கு ஸ்ரீ காஞ்சிப் பெரியவர் அருள் புரிந்திருக்கிறார்.

ஏப்ரல் மாதத்தில் நடைபெறும் உற்சவமும், நவராத்திரி விழாவும் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றன. இந்தியாவெங்கும் வசித்து வரும் பல குடும்பங்களுக்கு மதுர காளியம்மன் குல தேவதையாக விளங்குகிறாள். அவர்கள் தவறாது ஆலயத்திற்கு வந்து தங்கள் காணிக்கைகளைச் செலுத்தி வருகின்றனர்.

இத்தலத்திற்கு வந்து அன்னையை வழிபட்டு, பேசாதவர்கள் பேசியிருக்கின்றனர். பார்வையிழந்தவர்கள் கண் பார்வை பெற்றுத் திரும்பியிருக்கின்றனர். கன்னிப் பெண்கள் நல்ல புருஷனைப் பெற்றிருக்கின்றனர். மலடுகள், தாய்மைப்பேறு அடைந்திருக்கின்றனர். தீராத நோய்கள் தீர்கின்றன. பேய், பிசாசு, பில்லி சூன்யத் தொந்தரவுகள் அகல்கின்றன. அன்னையின் சக்திக்கு ஓர் எல்லையும் உண்டோ?

திருச்சியிலிருந்தும், பெரம்பலூரிலிருந்தும் இக்கோயிலுக்கு பஸ்கள் விட்டால் பக்தர்களுக்குப் பேருதவியாக இருக்கும். பக்தர்கள் பெருகப் பெருக, வெளியூர்களிலிருந்து வருபவர்கள் தங்குவதற்கான விடுதிகளும், குளியலறை, குடிநீர் போன்ற வசதிகளும் ஏற்படப் போகும் நாளும் வெகு தொலைவில் இல்லை.

ஹே, சர்வ சக்தி வாய்ந்த மதுராம்பிகையே! உனது திருவடியைத் தேடி வரும் பக்தனுக்கு எது தான் செய்ய முடியாத காரியம்? உனது மகா மந்திரங்களை ஜபம் செய்பவனுக்கும், உனது திருவுருவத்தை மனத்தால் தியானம் செய்பவனுக்கும் கிடைக்காதது இந்த உலகில் ஏதாவது உண்டா? உனது திவ்ய மங்களமூர்த்தியை சிவந்த தாமரை முதலிய வாசனை நிறைந்த மலர்களால் அர்ச்சனை செய்யும் பாக்கியவானால் ஜெயிக்க முடியாதது ஏதாவது உண்டா? மூவுலகத்தையும் ஆட்டிப் படைக்கும் உன்னை வழிபடுபவன் எங்கும் எதிலும் வெற்றியையே யடைவான். சந்தேகமில்லை.

ஹே, பாரதத் தாயே! மதுர காளித் தாயே! பாரதத்தில் வாழும் சகல மக்களுக்கும் சாந்தத்தையும், ஞானத்தையும் அருள்வாயாக. பாரத தேசம் முழுவதும் சாந்தியும் ப்ரசாந்தியும் சுகமும், அன்பும், ஒழுக்கமும் நிலவட்டும்.